உ

குருவே துணை

# அவிரோத உந்தியார்

ஆசிரியர்

தவத்திரு சாந்தலிங்க அடிகளார்

உரையாசிரியர்

போரூர் தவத்திரு சிதம்பர சுவாமிகள்

திருக்கயிலைப் பயண நினைவு வெளியீடு

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடம்

பேரூர் கோவை 641010

1982

உ

குருவே துணை

# அவிரோத உந்தியார்

ஆசிரியர்

தவத்திரு சாந்தலிங்க அடிகளார்

உரையாசிரியர்

போரூர் தவத்திரு சிதம்பர சுவாமிகள்

திருக்கயிலைப் பயண நினைவு வெளியீடு



தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடம்

பேரூர் கோவை 641010

1982

மூன்றாம் பதிப்பு 1982

விலை : ரூ. 10-00

வெளியீடு :
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடம்
பேரூர் ஆதீனம்,
பேரூர், கோவை-641010.

அச்சிட்டோர் :
கதிரவன் அச்சகம்
எல். பி. ரோடு திருவான்மியூர்,
சென்னை-600041.

3A/2

உ
குருவே துணை

# பதிப்புரை

தமிழகம் செய்த தவப்பயனாகப் பதினேழாம் நூற்றாண்டில் தோன்றி அவிரோத நெறியினை உலகுக்கு அருளியவர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார். இவர் அருளிச் செய்த நூல்கள் நான்கு. அவை கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்பன. இந்நான்கும் முறையே அருளுடைமை, இறை வழிபாடு, பற்றறுத்தல், மெய்யுணர்தல் என்னும் பொருள்களை உணர்த்துவன. இந்நான்கிற்கும் இவர் மரபில் வந்த திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் அரிய உரை எழுதி யுள்ளார்கள். இவ்வுரை சாந்தலிங்கர் காலத்திலேயே எழுதப் பட்டது. ஆதலின் நூலாசிரியர் கருத்தைப் பிறழாமல் விளக்குவது எனலாம்.

இந்நான்கு நூல்களையும் தனித்தனியாகவும், ஒருங்காகவும் உரையுடன் ஆறுமுக நாவலர் முதலிய சான்றோர்கள், அவ்வப் பொழுது அச்சில் வெளியிட்டுள்ளனர். நமது திருமடத்தில் தவத் திரு மாணிக்க சுவாமிகள் தலைவராக இருந்த போது நான்கு நூல் களும் ஒருங்கு வெளியிடப்பட்டன. அதன் பின்னர் தவத்திரு ஆறுமுக சுவாமிகள் தலைவராக இருந்த காலத்தில் நாம் இளைய மடாதிபதிப் பொறுப்பினை ஏற்றுக் கொண்ட பின்னர் இந்நூல்களை மீண்டும் வெளியிடும் முயற்சியினை மேற்கொண்டோம். பலருடைய பொருளுதவியினைப் பெற்றுத் தனித்தனியாகவும் ஒருங்காகவும் வெளியிட்டோம். அவற்றுள் 1965-இல் நமது திருமடத்தின் சத்வித்யா சன்மார்க்க சங்கத்துப் பொன் விழா நினைவாக வெளியிட்ட தொகுப் பும் 1976-இல் வெளியிட்ட அவிரோத உந்தியார் ஆங்கில மொழி பெயர்ப்பும் (சைவத்திரு நல். முருகேச முதலியார் அவர்களால் ஆங்கில மொழியாக்கம் செய்யப்பட்டது) குறிப்பிடத்தக்க பதிப்புக்க ளாகும்.

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் சமய விரோதம் பாராட்டாத அவிரோத ஞான நெறியினையுணர்த்தியவர். ஆதலின் இவருடைய நூல்கள் இக்காலத்திற்குப் பெரிதும் தேவைப்படுவன. பழைய பதிப்பு நூல்கள் முற்றும் செலவாய்விட்டன. அன்பர்கள் நூல் தேவைக்குக் கடிதம் எழுதிக் கேட்டவண்ணம் இருக்கின்றனர். ஆதலின் இந்நூல்களை மீண்டும் அச்சிடும் முயற்சியினை மேற் கொண்டோம்.

இப்பொழுது அவிரோத உந்தியார் என்னும் இந்நூல் அச்சிட்டு வெளியிடப்படுகின்றது. இதனை வெளியிடுகின்ற காலப்பகுதி நமது திருமடத்தின் வரலாற்றில் ஒரு சிறந்த பகுதியாக அமைகின்றது.

சிவபரம்பொருளே குருவாக வந்து உபதேசம் செய்கின்றது என்பது சைவ மரபு. மெய் கண்ட நூல்களில் எட்டாஞ் சூத்திரப் பொருள் இதனை உணர்த்தும். சாந்தலிங்க அடிகளார், திருக் கயிலையில் எழுந்தருளியுள்ள சிவமே குருவாக் வந்து தமக்கு உண்மைப் பொருள் உணர்த்தியது என்பதனைத் தம் நூலுள் குறிப் பிடுகின்றார்:

" விளம்பற் கருஞ்சோதி என்கோ விடையோன் என்கோ என்
உளம் புக்க சிவப்பிரகாசன் என்கோ என் அங்கைத்
தளம் பற்றிய சாந்தன் என்கோ நின்றனது நாமம்
வளம் பெற்ற திருக்கயிலாய சொல்வாய் எனக்கே "

(வைராக்கிய சதகம்—தோத்திரம்-செய். 49) என்பதனாலும் பிறவற்றா லும் இதனை உணரலாம்.

திருக்கயிலையில் கல்லால நீழலில் எழுந்தருளியிருந்த சீகண்ட பரமேசுவரனிடம் சிவாகமங்கள் தம்முள் மலைவின்மையை உபதேச முகமாகக் கேட்டுணர்ந்த நந்தி பெருமான் முதலாகச் சைவ மரபு தழைத்து வளர்ந்து வருகின்றது. தமிழகத்தில் உள்ள சைவ மடங் கள்—சித்தாந்த சைவ மடமாயினும்—வீர சைவ மடமாயினும் திருக் கயிலாய பரம்பரையில் வருவன என்பதே மரபு. நமது முதல்வராகிய சாந்தலிங்க அடிகளார் திருக்கயிலாய பரம்பரையில் வந்த சிவப்பிர காச அடிகளது மாணாக்கர். திருக்கயிலை மரபில் வந்தவரே குருவாக இருந்து வழிகாட்டும் பெருமைக்குரியவராவார் என்பது சாந்தலிங்க அடிகளாரின் துணிவு. வைராக்கிய தீபத்தில் குருவின் இயல்பினைக் கூற வந்த சாந்தலிங்கர் "செப்பருங் கயிலைக் குரு முறைமையில் தன் சிரமிசைச் சரணம் வைத்துள ஓர் மெய்ப்பரன்" என்று குறிப்பிடு கின்றார். ஆதலின் நமது மடம் திருக்கயிலாய பரம்பரை மெய் கண்ட மரபில் வந்து பின்னர் ஒரு காரணம் பற்றி வீர சைவ நெறி யினைப் பின்பற்றி வளர்ந்து அவிரோத நெறியினை உபதேசிக்கும் மடமாக விளங்குகின்றது.

சாந்தலிங்க அடிகளார் திருவருள் நோக்கால் நமது குருமரபிற்கு மூலமாக விளங்கும் திருக்கயிலை மலையினைத் தரிசித்து வலம் வந்து வழிபட வேண்டும் என்னும் ஆர்வம் நெடுநாளாக இருந்து வந்தது.

அது இப்பொழுதுதான் நிறைவெய்தியது. இவ்வாண்டு (துன்மதி) ஆடித் திங்கள் முதல் நாளில் திருக்கயிலை மலையைத் தரிசித்து வலம் வரவும் ஆடி அமாவாசை நாளில் அங்குள்ள மானசரோ 'வரத்தில் புனித நீராடவும் திருவருள் கூட்டிற்று. இங்ஙனம் திரு வருள் துணையால் திருக்கயிலைப் பயணத்தினை நிறைவு செய்தோம்.

இந்நூலை நமது திருக்கயிலை வழிபாட்டின் நினைவாக வெளி யிடலாம் என அன்பர்கள் விரும்பினர். இந் நூலுக்கு ஓர் அரிய ஆராய்ச்சி அணிந்துரையினைத் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் சுவாமிகளின் மாணுக்கரும் வீரசைவ நெறியினை நன்கு நுழைந்து ஆய்ந்து உணர்ந்தவரும் சென்னைப் பல்கலைக் கழகத்துத் தத்துவத் துறையில் பேராசிரியராகப் பணி புரிந்து வருபவரும் கல்வி பயிலும் காலம் முதலே நம்மிடத்துப் பேரன்பு பாராட்டி வருபவருமாகிய சைவத்திரு முனைவர் வை. இரத்தின சபாபதி அவர்கள் எழுதி உதவினுர்கள். ஏனைய மூன்று நூல்களின் பதிப்புக்குத் துணையா யிருந்து பணியாற்றிய சைவத்திரு முனைவர் இ. சுந்தரமூர்த்தி அவர்களே இந் நூலின் பதிப்புக்கும் அரிய துணைபுரிந்துள்ளார். நமது கல்லூரி முதுகலைப் பேராசிரியரும் சாந்தலிங்கர் நூல்களை ஆராய்ச்சிப் பட்டத்திற்கு எடுத்து ஆய்பவருமாகிய நமது அன்புக் குரிய சைவத்திரு இரா. வையாபுரி அவர்கள் பிழைதிருத்தம் செய்துதவினுர், கதிரவன் அச்சகத்தினர் இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டுக் கொடுத்துள்ளனர். இவர்கள் அனைவரும் எமது ஆதிகுரு முதல்வர் தவத்திரு சாந்தலிங்க அடிகளாரர் திருவருளால் எல்லா நலன்களும் பெற்றுச் சிறந்து விளங்க வேண்டும் என்று குருவருளை யும் அம்பலவாணர் திருவருளையும் சிந்தித்து வாழ்த்துகின்ருேம்.

நமது திருமடத்தின் சமயப் பணிகளிலும் திருவிழா முதலிய சிறப்பு நிகழ்ச்சிகளிலும் உடனிருந்து பணிபுரியும் அன்பர்களும் சத் வித்யா சன்மார்க்க சங்கத்தில் பெரும் பற்றுடையவர்களாய் விளங்கு பவர்களும் நமது குரு முதல்வரின் ஞான நூல்களில் ஈடுபாடு உடையவர்களுமாகிய அன்பர் கூட்டம் எல்லா நலன்களும் பெற்றுச் சிறந்து விளங்குக எனக் குருவருளையும் திருவருளையும் சிந்தித்து வாழ்த்துகின்ருேம்.

| தவத்திரு | அன்பன் |
|---|---|
| சாந்தலிங்க அடிகளார் திருமடம் | சாந்தலிங்க இராமசாமியடிகள் |
| பேரூர் கோவை—641010. | |

சாந்தலிங்கர் தாண்மலர் போற்றி

# அணிந்துரை

டாக்டர் வை. இரத்தின சபாபதி

தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள் கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் தமிழகத்துக் கொங்கு நாட்டில் கோவையையடுத்த திருப்பேரூரில் அருளுருக் கொண்டு வாழ்ந்த அனுபூதிச் செல்வராவர்.

எம்போன்றவர்களுக்கெல்லாம் சைவமும் தமிழும் தாமேயென்னவும் குருவருளும் திருவருளும் இவையேயென்னவும் நின்ற இணையடிகளை எம் தலைமீதிருத்தி எம்மை வாழ்விக்கும் சாந்தலிங்க இராமசாமியடிகள் இற்றை நாளில் எழிலுறத் தாங்கும் அருளாட்சிச் செங்கோலை முதற்கண் ஏந்தி, அருளாட்சியில் முதலரசியற்றிய பெருந்துரையாக நின்ற தவநெறிச் செல்வரே சாந்தலிங்க அடிகள்.

சிவனெனும் ஓசை தமக்கேயுரிய செம்மேனியெம்மான் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் தெய்வத் தனியிடங்கள் எல்லாமே தம்மை வந்து வணங்கியவர்களுக்கு இம்மையில் இன்பப் பேறுகளையும் மறுமையில் முத்தியையும் நல்கும் பெருமையுடையனவே. ஆனால், தம்மை வந்து வழிபடுவார்க்குத் தாமே முத்தியாய் நின்று, அவர்களுக்கு நிரதிசயானந்தப் பேருப் பெருவாழ்வளிக்கும் முத்தித் தலம் கொங்கு நாட்டுப் பேரூர் ஒன்றே,

கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் அருளாட்சி நடத்திய தவத்திரு சாந்தலிங்க அடிகளாரின் தொண்டின் பெருமையை 300 ஆண்டுகளுக்குப் பின் இன்றுதான் எம்மை எழுமையும் புரக்கும் எம் இராமசாமி அடிகள் தம் காலந்தான் உணர்ந்து போற்றச் செய்த உண்மைத் தவமுடையது என்று கூறுதல் வேண்டும். ஏனெனில், தவத்திரு சாந்தலிங்க அடிகளாரின் கொள்கை விளக்கங்களாக நின்ற நூல்கள் நான்கும் திருவருட்பேரொளியுடன் விளங்கித் தோன்றவும் தொழின்மையெய்தவும் உரிய நல்லருட்காலம் தொடங்கி விட்டது என்பதை என்னால் உணர முடிகிறது.

கடந்த 300 ஆண்டுகளாக, சாந்தலிங்கரின் அருளிப்பாடுகளாகிய நான்கு நூல்களும் சான்றோர்களாலும் அருளாளர்களாலும் படிக்கப் பெற்று வந்தன என்பது உண்மையே. ஆயினும் சுவாமிகளின் திருவுள்ளக் கருத்து என்ன எண்ணியதோ, அதனை முற்றாக உணரும் வாய்ப்பினை இவ்வுலகம் இன்று வரை பெறவில்லை. ஏனெனில், அடிகளின் 'அவிரோதம்' ஒருவகைச் சமரசம் என்பதாகவே உணரப் பெற்று வந்திருக்கிறது.

வேதாந்த சித்தாந்த சமரசம், வேதாந்த சித்தாந்த வீரசைவ சமரசம் என்பன போல விளக்கம் அமைக்கப் பெற்றுள்ளன. ஆயின் அத்தகைய சமரசம் இயலுமா என்பதைச் சிந்திக்க வேண்டும். "எல்லாப் பொருளும் இதன் பாலுள, இதன் கண் இல்லாத எப் பொருளும் இல்லையால்" என்ற சாற்றுக்கவியினைப் பெற்ற திருக் குறள் உலகப் பொதுமைநூல் என வழங்கப் பெறுகிறது. ஆயினும், பொதுமை என்பதை உணரும் முறையில் அறிஞர்கள் ஒரு வகைத் தவறான கருத்தை மேற்கொள்ளுகிறார்கள். தனிமைகளை இணைத்த நிலையோ, வேற்றுமைகளை இணைத்த நிலையோ பொதுமை அன்று.

"பேரூர் ஒன்று வழி ஆறு அதற்குள" என்ற வாக்கியத்தை எடுத்துக்காட்டி, வழி எதுவாயினும் அடையப் பெறும் இடம் ஒன்று என்பதாகக் கூறி இக்காலத்தே சமரசம் பேசுவதை நாம் கேட்க முடிகிறது. அவ்வாறு மதிக்கப் பெறலாகாது என்பதே தவத்திரு சாந்தலிங்கரின் திருவருள் உள்ளக்கிடக்கை. அதனாலேயே "தவி ராத விரோத சமயநூல் அன்று" என எதிர்மறை முகத்தால் அவி ரோத உந்தியாருக்கு ஓர் அறிமுகவுரை கூறியருளினார்கள். சாந்த லிங்கரின் பொதுமையில் தனிமைகள் இல்லாதன அல்ல; தனிமை களைத் தொட்டு, தனிமைகள் வாழ வகை செய்து தனிமைகளைக் கடந்து நின்ற பொதுமைப் பெருநிலை. தனிமைகள் உணராத நிலை யில் தனிமைகளைக் கடந்த பொதுமை நிலையே அவிரோதம்.

மெய்ப்பொருளைப் பிரமம் என்றும் சத்யம் என்றும் கூறுவர். சத்யம், ஞானம், அனந்தம், பிரமம் என்பது மகா வாக்கியம். இவ் வாறு மெய்ப்பொருளைச் சத்யம் என்றோ பிரமம் என்றோ சொல்லும் போது அவைகள் மெய்ப் பொருளைக் குறிக்க வரும் வெவ்வேறு ஒலிச் சொற்கள் என்று கருதப் பெறுகின்றன. இவ்வாறு வெவ்வேறு சொற்களால் உணரப்பெறும் வேற்றுமைகள் ஒலியால் வருவன. ஆனால், இவ்வொலிகளுக்கெல்லாம் அடிப்படையில் மூலமாகிய ஒரு பொருள் மட்டுமே உண்டு. இவ்வாறு விளக்கம் கூறி ஒருவகைச் சமரசம் காட்ட முயலுவது அறிஞர் கடமை. இப்படிப் பல்வேறு வகை ஒலிக்கூட்டங்களால் அறியப் பெற முடியாத கடந்த நிலைத் தன்மை வாய்ந்தது ஒன்று உண்டு; பல்வேறு வகை ஒலிக்கூட்டங் களாலும் தனித்தனியே உணரப் பெற்ற பொருள்களை இணைத்ததால், அப்பொருள்களினால் காணமுடியாத அருமையுடையதாய், அப் பொருள்களைக் கடந்ததாய் உள்ள பொதுமைப் பொருள் ஒன்று உண்டு. அதனை 'அவிரோதம்' என்ற சொல்லாற் குறிப்பிடுகின்றார். அது பொதுமை நிலையில் நின்றவர்களால் அறியவும் அனுபவிக்கவும் முடியுமேயன்றி, தனிமை நிலைகளாகிய சமயங்களை, மதங்களைச் சார்ந்து நின்றவர்களால் அறியப் பெற முடியாத ஒன்று. இதனை

'உள்ளது' என்றும் 'செம்பொருள்' என்றும் குறிப்பிட்டுக் காட்டினர் திருவள்ளுவர்.

இதனை வேறொரு எடுத்துக் காட்டினால் உணரலாம். 'அந்தி வண்ணத்தன்' என்று சிவனைக் குறிப்பிடுவர். அந்தி என்பது மாலைக்காலம். மாலைக்காலம் போன்ற நிறத்தினன் என்பர். இதனை வேறு வகையாற் காண வேண்டும். பகலும் இரவும் இருவேறுபட்ட காலங்கள். பகல் போவதும் இரவு வருவதும் என்ற இரண்டு மாறுபாடுகளுக்கிடையில் அமையும் காலத்தைச் சந்திக் காலம் என்கிறோம். பகலும் இரவும் சந்திக்கும் காலத்தை வணங்குதல் அன்று; பகலும் இரவும் பகையுடையன. இவ்விரண்டும் தத்தம் அளவில் நிலைத்து நிற்பன அல்ல. ஏனெனில் ஒன்று ஒன்றை அழிக்கும். ஆனால், இவ்விரண்டின் இடையில் நின்று, இவ்விரண்டையும் வாழவைத்து, இவ்விரண்டால் உணரப் பெறாததாய், இவ்விரண்டையும் கடந்ததாய் உள்ள ஒன்றே, இரண்டையும் வாழவைக்கும் பொதுமைப் பொருள். அப்பொருள் இவ்விரண்டு விரோதப் பொருள்களுக்கும் அப்பாற்பட்டது. ஆகையால் அது அவிரோதம்.

எனவே, அனைத்தையும் கடந்த, வேற்றுமைகளைக் கடந்த உண்மைப் பொருளை – சத்தியத்தை 'அவிரோதம்' என்றார். அவிரோதம் என்பது எதிர்மறைச் சொல் எனக் கொண்டு, அதற்கு உடன்பாட்டுச் சொல் என ஒன்று அமைய வேண்டும் எனக் கருதினால், அதனை 'உண்மை' என்று சொல்லலாம், அல்லது 'சுத்தம்' என்று சொல்லலாம். சுத்தம் என்றால், சகலம், கேவலம், சுத்தம் என்ற மூன்று நிலைகளில் வரும் சகல கேவல நீக்கமாகிய 'சுத்தம்' எனக் கொள்ளக் கூடாது. சகல, கேவலத்தால் தொடப் பெறாத சுத்த சுத்தம் அல்லது கடுஞ்சுத்தம் என்று கூறுதல் வேண்டும்.

சுத்தத்தை வேறு வகையாலும் சாந்தலிங்கர் விளக்குகிறார். சுத்தங்களும், சுத்தஅறம், சுத்தப் பொருள், சுத்தப்பேரின்பம் என்ற மூன்றன் கூட்டு என அனுபவத்தால் உணரப்பெறும்.

தத்துவ நிலையாலும் கொள்கை அமைப்பாலும் இவ்வுலகில் இத்தகைய பொதுமையை விளக்கியவர்கள் வெளிப்படையாக விளக்கம் கூறி எழுதியும் நுகர்ந்தும் இவ்வுலகிற்கு வழங்கியவர்களில் தத்துவத் துறை வரலாற்று முறைப்படி இருவரே. ஒருவர் சாந்தலிங்கர்; மற்றையவர் இராமலிங்கர்.

அனைத்து ஞானங்களையும் பூர்வமாக்கி உத்தரமாக மருவிநின்ற உத்தர ஞான சிதம்பரமே என் கொள்கை என் அமைத்தார் வள்ளலார். உத்தர ஞான சிதம்பரமாகப் பெயரிடாமல் மேலைச் சிதம்பரம்

எனத் தம் கொள்கையை அமைத்துக் காட்டிய அடிகள் தவத்திரு சாந்தலிங்கர். இராமலிங்க அடிகள் காலத்துக்கு இருநூறு ஆண்டு களுக்கு முற்பட்டவர் சாந்தலிங்கர்.

'ஒழிவில் ஒடுக்கம்' என்ற நூல் விரிவாகப் பயிலப் பெறவேண் டும் என விரும்பியவர்களே இருவரும்.

எனவே, சாந்தலிங்கர் கண்ட தத்துவக் கொள்கையானது ஒருவகைப் பொதுமைக் கொள்கை. இணைப்புக் கொள்கையினரால் காணப் பெற முடியாத பொதுமைக் கொள்கை. மரபு வழியில் படிக்கப் பெற்று வந்த நான்கு நூல்களும் பொதுமை நெறியில் சாந்தலிங்கர் உணர்த்திய அருள் நெறியில் படிக்கப் பெறுங்காலம் எம்மையெல்லாம் ஆளாக்கி, எம்மை இருமையும் கடந்த பொதுமை யில் நின்று வாழ வைத்து, இருமை வகை தெரிந்து ஈண்டறம் பூண்ட பெருமையும், குணமென்னும் குன்றேறி நின்று நிறைமொழி மாந்தராய் நின்ற பெருமையும் கொண்ட எம் அடிகள் இற்றை நாளில் அரு ளரசு செங்கோலோச்சியருளும் அருண்மிகு சாந்தலிங்க இராமசாமி யடிகள்தம் காலத்து மறுமலர்ச்சிக் கொள்கை விளக்கமாக வல மெய்தி நின்றுள்ளது என்று கூறி, இற்றை நாள் அருளரசோச்சும் சாந்தலிங்க இராமசாமியடிகள் தம் இணைப்பதம் தொழுது நின்று முடிக்கின்றேன்.

தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள் அருளிய கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்ற நான்கு நூல்களும் இதுவரையில் பல பதிப்புகளாக வெளிவந் துள்ளன. ஆங்கில மொழி பெயர்ப்பும் அவிரோத உந்தியாருக்கு உண்டு.

'கொலைமறுத்தல்' என்ற நூலில் இன்னும் சில செய்யுட்கள் இருந்திருத்தல் வேண்டும் என்பது என் எண்ணம்.

அடிகள் காலத்தில் இந்நான்கு நூல்களையும் பற்றிய ஆய்வு நூல் வெளி வர இருக்கிறது. அது ஒரு வகையில் அடிகள் நூலாய்வில் ஒரு வகைப் புதிய திருப்பத்தை உண்டாக்கும் என்ற கொள்கை யுடையேன். இறையருளால் அத்தகைய புதிய நோக்கு விரைவில் மலர்ந்து மணம் வீச வேண்டும் எனவும் நினைத்து மகிழ்கிறேன்.

சென்னை—5 இங்ஙனம்

5—10—82 வை. இரத்தினசபாபதி

# அருண்மிகு சாந்தலிங்க சுவாமிகள் வரலாறு

## புலவர் புராணம்

### அருண்மிகு தண்டபாணி சுவாமிகள் இயற்றியது

செந்தமிழ்ச்சீர் மன்னுஞ் சிவப்பிரகா சப்பெயரோன்
வந்த வயிற்றினிற்பின் வந்தாள் மணவாளன்
எந்த விதத்தாலோ இல்லறச்சீர் முற்றலுற்றுச்
சொந்த வுணர்வாற் றுறவறத்திற் றோய்ந்தானே. 1

நற்குலத்தோர் தம்முறையி னாரிதரு மைத்துனனுஞ்
சொற்குறிப்பெல் லாமுணருந் தூயபுகழ்ப் பாவலன்
நிற்குநிலை சோரா நிசத்துறவோர் சேகரனுஞ்
சற்குருவு மானான் றனைச்சார்ந் தொழுகினனே. 2

சாலக் கருணை தழைத்தகுரு தாள்பணிந்து
கூலப் பொலிவாருங் கொங்குவள நாட்டினிடை
மேலச் சிதம்பரமா மிக்கபுகழ்ப் பேரையினிற்
சீலத்தர் போற்றத் திருமடஞ்செய் துற்றானே. 3

தன்குரவன் போலத் தலந்தோ றலையாமல்
இன்குணத்துத் தொண்ட ரினஞ்சூழ வாங்கிருந்து
நன்குமுத்தி வீட்டிலுறு நான்குபெரு வாயில்களே
யென்குணங்கட் போற்றிடுநூ லீரிரண்டு செய்தானே. 4

கூச லறக்கருணை கூட்டுங் கொலைமறுப்பும்
ஈசனது பத்திக் கினிதாஞ் சதகமும்பொய்ப்
பாச முழுதும் பறித்தெறியுந் தீபமுநெஞ்(சு)
ஊசனிக ராட்டொழிக்கு முந்தியுமா நூற்பெயரே. 5

அந்நூல்க டோன்றியபி னான்றதுற வோர்பலரு
மெய்ந்நூல்க ளென்றவற்றை வேண்டுவழக் குண்டாயிற்
றெந்நூல்க டம்மு மிரக்கமுத னான்கினுக்காச்
செய்ந்நூல்க ளென்னத் தெளிகின்றோர் திண்ணியரே. 6

பெற்றதைக்கீ ழாக்கிப் பெருதநிலா மேலாக்குங்
குற்ற முயிரின் குணமென்றோர் பாசுரத்திற்
சொற்றனனவ் வாறுபல சொற்களுல கத்தனையும்
விற்றளித்திட் டாலும் விலைமேவா விண்டனனே. 7

எம்மதத்தி லுள்ளவர்க ளெந்நிட்டை சொன்னாலுஞ்
சம்மதமே யாமெனக்குத் தற்போத மாயிலெனப்
பொய்ம்மதத்தோர் நாணப் புகன்றருளு மப்புனிதன்
மும்மதமாப் போலு முழுஞான வீரனம்மா. 8

கன்னடதே யத்திறைவன்[1] கைதொழுது போற்றிடலுந்
தன்னடைமேற் கொண்டொழுகுஞ் சந்நாசி யாக்கியவ
னின்னவற்றேற் றென்றோரி யற்றமிழ்வல்லாற்[2] கொணர்கா
லன்னவற்கா ளாமா றருள்புரிந்தும் விட்டானே. 9

ஏறும் விடைபுரப்போ னேடுகைக்கொண் டேடபடிப்போன்
சோறு சமைப்போன் றுகிற்பணிசெய் வோன் முதலாத்
தேறு நிமித்தந் திருத்தொண்டு செய்பவராக்
கூறு மடியார் குழாஞ்சிறிதுங் கொண்டானே. 10

அங்கு வசிப்போர்வந் தன்புசெய்து போவதற்காத்
தங்கு மவரென்னச் சாற்றுமிரு பாற்றவர்க்கு
மெங்கு மிருந்துவிழை வெல்லாமு மெய்துவித்தான்
கங்குல் புரையுங் கழுத்துடைய காரணனே. 11

ஆநந்த மென்னு மலையில்பெருஞ் சாகரத்தி
லீனந் தவிர்ந்தே யிருந்துபல நாட்கழித்துத்
தானந்த மாதி தவிர்பதத்துற்று னவன்ற
னானந்த வூருக் கொருகோயி லல்கியதே. 12

கொங்குநாட் டுள்ள குவடுகட்குங் கோயில்கட்குந்
தங்கு மருமைத் தமிழ்ப்பதிகஞ் சாற்றிடுநா
ளங்குபோ யோர்பதிக மம்மூர்த்திக் கும்பகர்ந்தேன்
பொங்கு மதுரம் பொருட்பொலிவோ டொன்றிடவே. 13

1. இறைவன்—குமாரதேவர், 2. வல்லான்—சிதம்பர சுவாமிகள்.

# அவிரோதவுந்தியார்

## மூலமும் உரையும்

△△△

### கணபதி வணக்கம்

[1]சமரபுரி மா [2]நிம்பத் தண்ணிழற்பால் உம்பல்
அமரர் தொழஇருந்த தன்றித்—[3]திமிரமலம்
போக்கிஎம துள்ளின்பப் பூரணமாய் எவ்விடத்தும்
தேக்கறிவும் ஆயிருந்த தே.

### முருகக்கடவுள் வணக்கம்

உலகமெலாம் ஈன்ற ஒருத்திதனப் பால்உண்(டு)
இலகு கவிதைமழை ஈசன்—திலவு
புயமலைப்பால் பெய்தசுகப் போரூர்வாழ் வான்அம்
புயமலர்த்தாள் என்முடிக்குப் போது.

### நூலாசிரியர் பெயர்

பன்னெறியில் இகல்விளைக்கும் பலசமயத்
தவரும்முத்தி பதத்திற்(கு) ஈது
நன்னெறியென் றுய்யஅவி ரோதஉந்தி
யாரெனுநூல் நல்கி னானல்
வென்னெறிதேர் மறைநெறிஆ கமநெறிஒன்(று)
எனக்காட்டும் வீர சைவத்
தொன்னெறிமா கேசனெங்கள் சாந்தலிங்க
தேசிகனும் தூயோன் தானே.

---

1. போரூர். 2. வேம்படி விநாயகர். 3. இருண்மலம்.

## நூல்

1. எல்லாம் உடையான் குருவாகி ஈங்கெம(து)
அல்லல் அறுத்தான்என்(று) உந்தீபற
அவன்தாள் தொழுவாமென்(று) உந்தீபற

என்பது - சொல்லுவார் சொல்லும் வண்ணங்கள் அனைத்தை யும் உடைய ஒரு பூரணன் குரு வடிவமாகி இவ்விடத்தில் தோன்றி ஒன்றுக்கும் பற்றாத எம்முடைய பிறவித் துன்பத்தை வேரறுத்து அருளினன் ; அக்கருணை மூர்த்தியினது திருவடிகளைத் தொழுதல் செய்வாம் என்றவாறு.

சொல்லுவார் ஒன்றை ஒன்று ஒவ்வாத சமயவாதிகள், வண்ணங்கள் அனைத்தும் என்றது—உருவெனல், அருவெனல், ஒன்றெனல், பலவெனல், உளதெனல், இலதெனல், முதலியவற்றை உந்தி என்றது குமாம் கூடிய மகளிரது ஒரு விளையாட்டு எனக் கொள்க.

இது கடவுள் வணக்கம் கூறியது. (1)

2. தவிரா விரோத சமயநூல் அன்றால்
அவிரோத உந்தியென்(று) உந்தீபற
ஆமிந்நூல் நாமம்என்(று) உந்தீபற.

என்பது - ஒன்றுக்கு ஒன்று மாறாத விரோதத்தினை யுடைய சமயநூல்களில் இஃதும் ஒன்று அன்று ; ஆதலால், அவிரோத உந்தி என்று வழங்குதற்கு உரித்தாம் இந்நூற்பெயர் என்றவாறு.

அவிரோதம் - பட்சபாதம் இல்லாமை. இது நூற்பெயர் காட்டியது. (2)

3. உருவுகண்(டு) எள்ளா(து) உளந்தேரும் மேலோர்
பொருள்நலம் தேராமுன் உந்தீபற
புன்சொல்கண்(டு) எள்ளார்என்(று) உந்தீபற.

என்பது—ஒருவனது வடிவின்கண்ணே குறை உண்டாயினும் அதனை நோக்கி இகழாது உள்ளத்தின்கண் உள்ள சிறப்பினை [1]விசாரியா நிற்கிற உத்தமர் ஆயினோர் யாதொரு நூலினைக் காணு

---

1. ஆராய்கின்ற.

மிடத்தும் அதன்கண் உண்டாகிய பொருளினது நன்மையைத் தேருதலின் முன்பே சொல்லின்கண்ணே குறை உண்டாயினும் அதனை நோக்கி இகழார் என்றவாறு.

சொல்லினது கருத்துப் பொருளாம் ஆதலின் எனக் கொள்க. இந்நூற்குச் சொல்லின்கண்ணே குறை உண்டாயினும், பொருள் [1]சுருதி, குரு, சுவானுபவ சித்தம் ஆகலின் குற்றம் உண்டாகாது என்பது துணிவு.

இந்நூலில் வீட்டு நெறி கூறுவான் தொடங்கி முதற்கண் அவ் வீட்டினது சிறப்புக் கூறுகின்றார். (3)

4. அறம்பொருள் இன்பம்வீ(டு) ஆயவோர் நான்கில்
சிறந்தபயன் வீடென்(று) உந்தீபற
தேரின்வீ டேஎலாம் உந்தீபற

என்பது—தருமம், அருத்தம், காமம், மோட்சம் என்று அறி வுடையோர் அடையும் பயன்களாய் எல்லா நூல்களாலும் சொல்லப் படும் அவையாகிய நான்கனுள்ளும், வீடு [2]நிரதிசயமாதலால் சிறந்த பயனை உடையது. அஃது அன்றியும், தருமாதிகளுக்கு உள்ள இலக்கணங்களும் வீட்டிற்கே உளவாகலின் மாசறத் தேருங்காலை, அந்நால்வகைப் பயன்களும் அவ்வீடே ஆகும் என்றவாறு.

அஃது எங்ஙனம் எனில்? (4)

5. தாங்குபற்று[3] அற்ற சகலத் தியாகத்தின்
ஓங்கு தருமம்ஏது உந்தீபற
உள்ளது வீடிட்டற்குஅஃது உந்தீபற

என்பது—ஒன்றிலு தாக்கற்றுடைய [4]சர்வ சங்கபரித்தியாகத் தினும், உயர்ந்த தருமமே இல்லை; தருமமாவது பெரும்பான்மையும் தானம், தவம் என்கின்ற இரண்டின் கண்ணே அடங்குதலின் மேலாய சிவத்தினிடத்தே உடல், பொருள், ஆவிமூன்றையும் சத்தியமாக ஒப்பித்து எவ்விடத்தும் தனது சுதந்திரத்துவம் தோன்

---

1. மறைமொழி, குருமொழி தன் அநுபவ உணர்வு ஆகிய வற்றுக்கு ஒத்தது.
2. தன்னின் மிக்கதொன்றில்லாதது.
3. பற்று
4. எல்லாப் பொருள்களையும் முற்றும் விடுதல்

ருமை நிற்றலின் இதற்கு மேலாகிய தானமும் இல்லை. அங்ஙனம் அது தோன்ருமல் நிற்போர்க்குச் சிவமே ஒழியத் தாஞய், பிறரும் தோற்ருமையின், யான் செய்தேன். பிறர் செய்தார், என்னும் [1]இதாகிதங்களிலே சிறிதும் உண்டாகாமையின் இதற்கு மேலாகிய தவமும் இல்லை. இவை வீட்டிற்கு உரிய ஆகலின் வீடே அறமும் என்றவாறு.

இதற்குப் பிரமாணம் : திருவாசகம்

"அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்ருேர் இடையூறு எனக்குண்டோ
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானே இதற்கு நாயகமே."

என்றும், அருட்பிரகாசம்

"நிறைந்த பொருளொடு யாக்கைதம்
ஆவியை நீடருளான்
உறைந்த குருகரத்தே தத்தம்
செய்து அவற்று ஒன்றனையும்
மறந்தும் யானெனது என்ருேது
இறைகழன் மன்னி நிற்கும்
சிறந்த சகலத் தியாகரின்
ஓரறம் செய்தவரே."

என்றும், பரிபூரண சித்தி

சகமென உடலமென்னத் தருகரணங்கள் என்ன
அகமென விதமதுஎன்ன அழிவில்போ கங்கள்என்ன
வகைபட உயிர்கட்கு ஆதன் மாயை அம் மாயைநீக்கிப்
புகலரு முத்திசேரும் அவர்கள் புண்ணியத் திருேரே.

என்றும் வரும். மற்றும் வருவனவற்ருற் காண்க. (௧)

---

1. நன்மை தீமை,

6. பொன்றுப் பொருளே பொருள்என்பர் நல்லோர், அ(து)
அன்றிப் பொருளியாது உந்தீபற
அல்லன மாயையென்று உந்தீபற.

என்பது - அழிவற்ற பொருளே பொருள் என்று கூறுவர் நல்லோர்; முத்தியே நித்தியம் ஆதலின் அஃது அன்றிப் பொருளே இல்லை. மற்றைய எவையும் அநித்தியம் ஆகிய மாயா காரியங்கள் என்றவாறு.

இதற்குப் பிரமாணம் : திருக்கடைக் காப்பு

"செல்வநெடு மாடம் சென்று சேணோங்கிச்
செல்வமதி தோயச் செல்வ முயர்கின்ற
செல்வர்வாழ் தில்லைச் சிற்றம்பல மேய
செல்வன்கழல் ஏத்தும் செல்வம் செல்வமே."

என்றும், திருவாசகம்

"கால முண்டாகவே காதல்செய் துய்மின் கருதரிய
ஞால முண்டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆல முண்டானெங்கள் பாண்டிப் பிரான்தன் அடியவர்க்கு
மூல பண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே."

அன்றியும்,

"ஓடும் [1]கவந்தியுமே உறவுஎன்றிட்டு உள்கசிந்து
தேடும் பொருளும் சிவன்கழலே எனத்தெளிந்து
கூடும் உயிரும் [2]குமண்டையிடக் குனித்தடியேன்
ஆடும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே."

என்றும், அஞ்ஞவதைப் பரணி

"என்றும் பொருவரிய இன்பப் பொருளுடையார்
பொன்னும் பொருளும் பொருளாகப் போற்றுவரோ."

என்றும், மோகவதைப் பரணி

"கொழுங்கனலோ அவிப்பதுவும் கோபமெனும் கொழுங்கனலே
வழங்குவதும் அழிபொருளோ மறைதேடும் வான்பொருளே."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (6)

---

1. கோவணம். 2. நிறைந்து தெவிட்ட.

7. பூரண மும்மாம் பொருவிலா னந்தக்கு
நேரியா தின்பம்வே றுந்தீபற
நீங்காச் சுகமதே உந்தீபற.

என்பது, முற்கூறிய நித்தியத்துவமும் அல்லாமல் பரிபூரணமு மாய் இருந்துள்ள ஒப்பற்ற நிரதிசயானந்தமே ஆனந்தமல்லது அதற்கு இணையாய் வேறே ஒரு இன்பமும் இல்லை. நித்தியமாகை யால் காலத்தினாலும், பூரணமாகையால் தேசத்தினாலும், நீக்கமற் றுள்ளதா யிருக்கிற சுகமும் அதுவே, என்றவாறு.

மற்றுள்ள மாயா போகங்களெல்லாம் தோற்றமுடையன வாகையால் நாசமும், நாசத்தை அடைவதற்கு முன்னும் பரிச் சின்னமாகையால் நீக்கமும், நீங்குதற்கு முன்னும் பலவாய் உயர்ச்சி, தாழ்ச்சியுடையன வாகையால் ஒன்றுக்கொன்று அதிசயமும் உடையனவாம்; ஆதலின், அவை துக்கமே அன்றிச் சுகமல்ல என்பது கருத்து.

இதற்கு உதாரணம் : திருக்கடைக்காப்பு

"நிறைவெண் கொடிமாட நெற்றிநேர் தீண்டப்
பிறைவந் திறைதாக்கும் பேரம்பலம் தில்லைச்
சிறைவண் டறையோவாச் சிற்றம்பலம் மேய
இறைவன் கழல்ஏத்தும் இன்பம் இன்பமே."

என்றும், திருவாசகம்

"தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும் பேசும்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ."

என்றும்; சிவானந்தமாலை

"துன்பமயக் காகியபொய்த் துட்டபந்த நோயதனை (முந்து)
இன்பமெனக் கொண்டிங்(கு) இழந்தேனோ—அன்பிலெ
ஓவாத மெய்யுணர்வாய் உள்ளேநின்(று) உள்ளுருக்கும்
தாவாஆ னந்தந் தனை."

என்றும், கலிமடல்

'அருநான் மறைநூலொடு ஆகமநூல் மற்றும்
உரைசான்ற நூல்எல்லாம் ஓதுகின்ற தோரில்

பொருள்நான்கே அந்நான்கும் பொய்மைஅற மெய்மை
தெரிவார் தெரியுங்கால் தீங்கொன்றும் மேவா
[1]நிருபா திகமென்றே நேரே தரும்அப்
பொருள்ஆ வதும்என்றும் பொன்றுப் பொருளே
இரியாத இன்பமே இன்பம்சென்று எய்தற்கு
அரிதாய வீடும் அதுவேயாய் நின்றால்
உரையாடு வதெல்லாம் ஒன்றாய இன்பப்
பெருமானை அல்லவோ பேதமாய் வேறே
பொருள்நாடி நின்று புலம்புவோர்க்கு அந்தப்
பரமானந் தத்தைப் பகரப் படுமே.''

(7)

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

8 ஆதலால் பெற்ற அறிவால் பெறும்பயன்
ஓதும்வீ டேஎன உந்தீபற
உண்மைநூல் யாவுமென்(று) உந்தீபற

என்பது, சர்வசங்க பரித்தியாகத்தின் எய்துவதாய் நித்திய பூரண நிரதிசயானந்தத்தை உடையது யாது? அதுவே வீடும் ஆதலின், ஒருவன் பெறுதற்கரிய பிறவியையும், அதிலும் பெறுதற் கரிய நுண்ணூலுணர்வையும், பெற்றகாலையின் அங்ஙனம் பெற்ற அறிவால் பெறும் பயனாவது வீடு ஒன்றுமே எனக்கூறுநிற்கும் அவர் கற்ற [2]யதார்த்தம் ஆகிய வேதாதி நூல்கள் அனைத்தும், என்றவாறு.

இதற்கு உதாரணம்; தேவிகாலோத்தரம்

''பிறந்து பெற்ற அறிவால் பெறும்பயன்
நிறைந்த நீர்முகில் நீங்கிய வானென
அறிந்து தம்மை அமலவி யாபகம்
செறிந்து நல்ல தியானத்(து) இருத்தலே.''

என்றும், திருவள்ளுவ நாயனார்

''கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.''

என்றும், திருமந்திரம்

---

1. உபாதியில்லாதது.
2. உண்மைப் பொருள்.

"முன்னைப் பிறவியில் செய்த முதுதவம்
பின்னைப் பிறவியில் பெற்ருல் அறியலாம்
தன்னை அறிவது அறிவாம் அஃதன்றிப்
பின்னை அறிவது பேயறி வாமே."

என்றும் வரும். மற்றும் வருவன வற்ருற்காண்க. (8)

மேல் வீட்டினைச் சாதித்தற்கு ஏது கூறுகின்ருர் :

9. வீடுஞா னத்தன்றி மேவொணு தாகையால்
கூடுவோன் அந்தவாழ்(வு) உந்தீபற
கோதின்மெய் ஞானியென்(று) உந்தீபற

என்பது, முத்தி சாதனமாகிய சரியாதி நான்கனுள் ஞானம் ஒன்றுமே முத்தி சாதனமாம். மற்றைய மூன்றும் ஞானத்திற்குச் சாதனமன்றி முத்திக்குச் சாதனமாகாமையால், அந்த முத்தியாகிய பேரானந்த வாழ்வைக் கூடுமவன் குற்றமற்ற மெய்யுணர்வை உடையோனே ; மற்றையர் அல்லர் என்றவாறு.

குற்றமாவதுஐயம், திரிபு எனக் கொள்க.

இதற்கு உதாரணம், சிவஞான சித்தியார்

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண
நல்லஆகமஞ் சொல்ல வல்லவாம் என்னும்
ஊனத்தார் என்கடவார் அஞ்ஞா னத்தால்
உறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தான்
ஆனத்தால் அதுபோவ(து) அலர்கதிர்முன் இருள்போல்
அஞ்ஞானம் அறப்பந்த மறுமுத்தி ஆகும்
ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்
இறைவனடி ஞானமே ஞானம் என்பர்."

என்றும், திருமந்திரம்

"ஞானத்தின் மிக்க தவநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவான்
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே."

என்றும், பிரபுலிங்க லீலை

"உரைசெயில் பரம ஞானம் ஒன்றுமே முத்திக்கு ஏது
சரியைநற் கிரியை யோகம் தாமொரு மூன்றும்ஞான

மருவுதற்(கு) ஏது என்றே மறைபுகன்(று) உரைக்கும் இந்தக்
கருவியைப் பொருளென்(று) எண்ணிக் களிப்பவர் கயவர்
[அன்றே."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (9)

மெய்யுணர்வு உடையோனது இலக்கணம் யாது எனின்

10 யானென தென்செருக் கீர்த்த மகனேமெய்ஞ்
ஞானியென்(று) ஓதிய உந்தீபற
நான்மறை ஆதிய உந்தீபற.

என்பது, யான் என்றும், எனது என்றும், இந்நிலைக்கண்
கூறப்படுவதாகிய மயக்கத்தினை அறுத்துள்ள புருடன் யாவன்?
அவனே மெய்யுணர்வு உடையோன் என்று கூறு நிற்கும் வேதம்
முதலிய பலகலைகளும் என்றவாறு.

இதற்கு உதாரணம், திருவள்ளுவ நாயனுர்

"யானென தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்(கு)
உயர்ந்த உலகம் புகும்."

என்றும், திருவாய்மொழி

" நீர்நுமது என்றிவை - வேர்முதன் மாய்த்திறை
சேர்மின் உயிர்க்கது - நேர்நிறை இல்லே,"

என்றும், பிரபுலிங்க லீலை

" யான்என(து) என்ப(து) இருந்திடு காறு
ஞானம் உருன் அது நண்ணில ஞயில்
தானிலை யாத சகந்திகழ் கிற்கும்
[1]தீன மிலாத சிவம்திக ழாதே."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (10)

யாதினை யாதினை யான், எனது என்பது என்னின்

---

1. மாசற்ற.

11 தேகாதி நான்கனுள் தேக கரணங்கள்
ஆகும் யான்என்ப(து) உந்தீபற
அலமற்(று) எனதுஎன்ப(து)உந்தீபற.

என்பது, இந்நிலைக்கண் உயிர்களுக்கு மாயையின் உண்டாகிய தனுகரண புவன போகங்கள் நான்கனுள்ளும், தனுகரணங்கள் 'யான்' என்றும்; புவன போகங்கள் 'எனது' என்றும் சொல்லப் படும் என்றவாறு.

'தனு' என்றது தேகத்தை. 'கரணம்' என்றது அந்தக் கரண, புறக் கரணங்களை. 'புவனம்' என்றது பூ, பூதராதிப் பிரபஞ்சத்தை, 'போகம்' என்றது சத்தாதி விடயங்களை. இவற்றுள் கரணங்கள் தனுவுக்கு [1]அபேதமாயும், புவனங்கள் போகத்துக்கு அபேதமாயும் நிற்கையால், "தேக போகம்" என இரண்டாகவும் சொல்லப்படு மெனக் கொள்க. (11)

தனுகரணங்கள் ஸ்தூலமாய், [2]அசித்தாய், அநித்தியமாய் உள்ளன; ஆன்மா சூக்குமமாய்ச், சித்தாய், நித்தியமாய் உள்ளது; இவைகள் ஒன்றுக்கொன்று மாறுபாடாதலின், உயிர்களுக்குத் தனு கரணங்களை யானென்னும் [3]ஐக்கியாத்தியாசம் எங்ஙனம் கூடிற்று எனில்

12 அழிதேகம் மன்னுயிர்க்(கு) அன்னிய மேயேனும்
பழமோகத் தால்யானென்(று) உந்தீபற
பற்றுமை ஒற்றுமை உந்தீபற.

என்பது, அநித்தியமாகிய சரீரம் நிலைபேறுடைய உயிர்களுக்கு [4]விசாதீயமே ஆயினும், உயிர்கள் உள்ள அன்றே உண்டாய் அநாதியாய் இருந்துள்ள அஞ்ஞான சம்பந்தத்தினுலே கிறிய விளக்கமாய் நிற்கின்ற தனுவாதிகளைத் 'தான்' என்று அபிமானித்த [5]பிராந்தியே ஐக்கியம் என்றவாறு. (12)

ஒருவனுக்குத் தேகத்தை 'நான்' என்னும் அகப்பற்றாகிய அகங்காரப் பிராந்தியை நீக்குதற்கு உபாயம் யாது? என்னின்,

1. வேறாக இல்லாமை, 2. அறிவற்றது.
3. சேர்க்கையினுல் ஒன்றில் ஒன்று தோன்றுதல்.
4. வேறானது,
5. ஒன்றைப் பிறிதொன்றாக மயங்கும் உணர்வு.

13 விறகார் அழல்போலும் மின்ளூர்பொன் ஆதி
உறுகாறு மந்தமை உந்தீபற
உள்ளக்கண் மாருதென்(று) உந்தீபற.

என்பது, புறப்பற்ருகிய பெண், பொன் முதலிய பொருள்கள் சூழ்ந்து உள்ள அளவும் முற்கூறப்பட்ட அகப்பற்ருனது விறகு பெற்ற தழல்போல் முறுகுவது அல்லது "ஆத்மா" இடத்து நீங்காது, என்றவாறு.

இதற்கு உதாரணம், தேவிகாலோத்தரம்

"மூண்டு பற்றி முழங்கி எழுங்கனல்
ஈண்டு [1]காட்டம் இலதேல் இலதாகும்
தீண்டும் அப்பொருள் இன்றெனில் சித்தமும்
மாண்டு தோற்றம் இலதாய் மடிந்திடும்."

என்றும், திருவள்ளுவர்

"அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு."

என்றும், வரும். மற்றும் வருவன வற்ருற் காண்க. (13)

வேரிணைக் களையிற் கொடி முதலிய வாடுதல்போலும் யானென்னும் அகப்பற்றை முன்பு நீக்கின் அதன் சார்பாகிய புறப்பற்றுத் தானே நீங்கிவிடும். இஃது ஒழிந்து புறப்பற்றை முன்பு நீக்கின் அதனுல் அகப்பற்று ஒழியுமென்பது விருத்த மாகையால் அது கூடாதென்னின்,

14 நீக்காமுன் சூழ்காடு நீடெயில் கொள்ளொணு
போக்கார் புறப்பற்றேல் உந்தீபற
போமோ அகப்பற்றென்(று) உந்தீபற

என்பது, சூழ்ந்துள்ள காட்டை வெட்டி வெளி செய்யா இடத்து, நிலை பெற்று நடுநின்ற எயிலைக் கவருதல் கூடாது. அது போல் 'எனது' என்னும் புறப்பற்றை நீக்காராயின் 'யான்' என்னும் அகப்பற்று ஒழியாது, என்றவாறு.

---

1. விறகு.

இதற்கு உதாரணம், அஞ்ஞவதைப் பரணி

" சுற்றமொ டுற்ற [1]துவந்துவம் எல்லாம்
அற்றவர் தம்மொ டுமற்றவர் தாமே."

என்றும்,

"கதறிய ஆழியாறி ஆடுதல் கருதினர் யாவர்தா மியாவையும்
உதறிய ருதபோது நாடொறும் ஒழுக விடாதவரா ராரமே"

என்றும்,

" கழிய நிலாதபோது சேறது கழுவி இலாப மேதி யாவையும்
ஒழிய நிலாதபோது மாசற வுதற வொணுத பாச மூடுமே."

என்றும், வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (I4)

ஒருவன் புறப்பற்று நீக்கியமாத்திரத்து அவனுக்கு அகப்பற்று ஒழியுமோ? எனின்,

15 புறப்பற்(று) எலாந்தூரப் போக்கிமீட்டு எண்ணு
துறப்பற்றின் மெய்யுணர்(வு) உந்தீபற
ஒடும்அகப் பற்றென்(று) உந்தீபற

என்பது, 'எனது' என்னும் பொருள்கள் அனைத்தையும் ஒருசற்றும் தாக்காது தூரத்திலே போவனவாகக் கைவிட்டு அவ் வாசனையும் மனத்தின்கண்ணே தோன்ருமல் ஒழித்துத் தன் உண் மைக்கண் முறுகப்பற்றி நிற்கின், சுவடும் தோன்ருமல் நீங்கும் அகப் பற்று என்றவாறு.

தூரப்போக்கி என்றது விட்ட பொருளினது நாம ரூபங்கள் மீண்டும் தனது இந்திரியங்களுக்கு விடயமாக்காமை எனக்கொள்க.

புறப்பற்றெல்லாம் நீக்கவேண்டும் என்பதற்குப் பிரமாணம், திருவள்ளுவர்

" இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை உடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து."

மற்றும் வருவனவற்றுற் காண்க.

---

1. (நட்பு, பகை; இன்பம், துன்பம் முதலியன போல வரும்) இரட்டைகள்.

அவற்றைத் தூரப்போக்கி மீண்டும் அவ்வாசனையும் தோன்ருமை அடக்கவேண்டும் என்பதற்குப் பிரமாணம், ஒழிவி லொடுக்கம் :

"கரையடுக்க வந்தால் திரையலைக்கும் கப்பல்
பொருளடுத்தால் தோன்றும் பொய்ப்போதம்— விருதினவன்
வெற்றிக் குழி குதித்தோன் போல்வேண்டும் விட்டதுபின்
பற்றுமதில் சிக்கென நிற்பாய்."

மற்றும் வருவனவற்ருற் காண்க.

மெய்யுணர்வின்கண் முறுகப்பற்றி நிற்கின் அகப்பற்ருெழியும் என்பதற்குப் பிரமாணம், திருவள்ளுவர்

"பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

என்றும், தேவாரம்

"விறகில் தீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வுக் கயிற்றிஞல்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே"

என்றும், ஞானவாசிட்டம்

"மோக[1] வற்சநா பிக்கொடி முளைத்தெழு மூலம்
சோக மாசுணம் இருந்தர சாள்வதோர் சூழல்
ஏக மேமுதல் யானென தென்னுமஞ் ஞானம்
ஏக மாகிய பராபரந் தோன்றிஞல் இறக்கும்."

என்றும், சிவஞான சித்தியார்

"யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதியான் என்னும்
இக்கோணை ஞானவெரியால் வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடவத் தத்துவன்ரு னேரே
தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடும்
நான்செய்தேன் எனுமவர்க்குத் தானங்கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்கும் கன்மம்

---

1. நச்சுக் கொடி

ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பின் அல்லால்
ஒருவருக்கும் யானெனதிங் கொழியாதன்றே.''

என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

அகப்பற்றை ஒழித்தற்கு மெய்யுணர்வே காரணமாயின் அதனை எவ்விதத்தாலும் சாதித்தல் வேண்டும் என்றுது, முன்பு புறப்பற்றை நீக்கிப் பின்பு சாதித்தல் வேண்டும் என்பானேன்? எனின். (15)

16. வேண்டா துறத்தலே மெய்யுணர்வு என்பதொன்(று)
ஈண்டிடை யூறதற் றுந்தீபற
எய்துமேல் இல்லையென் றுந்தீபற.

என்பது, மெய்யுணர்வு என்பது [1]ஒரு பரம கேவலப் பொருள். இவ்விடத்து இல்வாழ்க்கையொடு கூடி இருக்கவும் ஓர் இடையூறின்றி ஒருவனுலே சாதிக்கப்படுமாயின், அவன் இல்வாழ்க்கையைத் துறக்கவே வேண்டாம் என்றவாறு. (16)

ஆயின் இல்வாழ்க்கையை நீங்காவிடத்து மெய்யுணர்வு இடையூறின்றித் தலைக்கூடாதோ? எனின்,

17. குடும்பபா ரந்தலைக் கொண்டவர்க் கல்லல்
விடும்பரி சின்மையால் உந்தீபற
மெய்யுணர்(வு) எங்ஙனும்? உந்தீபற.

என்பது - தாய், தந்தை, மனை, மக்கள், சுற்றம் என்னும் குடும்பத்தைத் 'தனது' என்றும், அவற்றினைத் தாங்கும் அதிகார முடையோன் 'தான்' என்றும், அபிமானம் பூண்ட ஒருவன் அக் குழாங்களோடும் கூடி நுகர்தற்கு விடய சுகங்களைத் தேடுதலாலும்; அவை பொருளினுல் அன்றி வாராமையின் அப்பொருளைத் தேடற்கு முயலுதலாலும்; அங்ஙனம் முயலுமிடத்து அவற்றிற்கு வரும் இடையூறுகளை நீக்க வேண்டுதலாலும்; அவ்வாறு கூட்டப் பட்ட பொருளுக்குப் பிறரால் அழிவு வாராமல் காத்தலாலும்; அப்பொருளைக் காலதேசங்களறிந்து நுகருதலாலும்; அக்காலையில் தமது குழாங்களுக்கும் தமக்கும் வரும் [2]தாபத்திரயங்களை நோக்கி வருந்துதலாலும் இவை முதலிய அல்லல்கள் அனந்தம் இடையருது சூழ்தலின், அவற்றினை நீக்கிச் சற்குருவை அடைந்து நித்தியா

---

1. மிக உயர்ந்த மெய்யுணர்வு மட்டுமாய் இருக்கும் பொருள்.
2: மூவகைத் துன்பம்.

நித்தியப் பொருள்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிகுதலே கூடாது. கூடினும், தன்னுண்மைக்கண் ஒரு கணமேனும் நிட்டாபரனாய்ச் சித்த சலனம் அற்று இருத்தல் கூடாது. அஃது ஒரு காலையிற் கூடினும், கூடியவுணர்வு முதிர்வளவில் ஓரோர் இடையூறுகளால் சித்த சலனம் பிறந்து மெய்யுணர்வு நீங்கி விடும். அது நீங்கவே, அகப்பற்றும் அவனுக்கு நீங்காது என்றவாறு.

இதற்குதாரணம், திருவள்ளுவர்

"பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு."

என்றும், திருக்கடைக் காப்பு

தந்தைதாய் தன்னுடன் தோன்றினோர்
புத்திரர் தாரம்என்னும்
பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக்
கில்லெனப் பற்றினையே
வெந்தநீ றுடியார் ஆதியார்
சோதியார் வேதகீதர்
எந்தைஆ ரூர்தொழு துய்யலா
மையல்கொண் டஞ்சனெஞ்சே."

என்றும், தேவாரம்

"பழகி னால்வரும் பண்டுள சுற்றமும்
விழவி டாவிடின் வேண்டிய தெய்தொணா
திகழ்கொள் சேறையுட் செந்நெறி மேவிய
அழக னார்உள ரஞ்சு கவதென் னுக்கே."

அன்றியும்,

"அருத்த மும்மனை யாளொடு மக்களும்
பொருத்த மில்லைபொல் லாதது போகட்டும்
கருத்தன் கண்ணுத லண்ணல் காட்டுப்பள்ளித்
திருத்தன் சேவடி யைச்சென்று சேர்மினே."

என்றும், திருப்பாட்டு

"பதியுஞ் சுற்றமும் பெற்ற மக்களும்
பண்டை யார்தல்ல பெண்டிரும்
நிதியும் இம்மனை வாழும் வாழ்க்கை
நினைப்பொ ழிமட் நெஞ்சமே

மதியம் சேர்சடைக் கங்கை யானிட
மகிழ மல்லிகை சண்பகம்
புதிய பூமலர்ந் தெல்லி றுறும்
புறம்ப யந்தொழப் போதுமே."

என்றும், திருவாசகம்

" தாமே தமக்குச் சுற்றமும்
தாமே தமக்கு விதிவகையும்
யாமார் எமதார் பாசமார்
என்ன மாய மிவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடு
மவன்றன் குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப்
புயங்க னாள்வான் பொன்னடிக்கே."

என்றும், பட்டினத்துப் பிள்ளையார்

" திருவடி பிடித்து வெருவரல் விட்டு
மக்களும் மனையும் ஒக்கலும் திருவும்
பொருளென நினையாதுன் அருளென நினைந்து "

என்றும், கந்தரனுபூதி

" வளைபட் டகைமா தொடுமக் களெனும்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந்
துளைபட் டுருவத் தொடும்வே லவனே "

என்றும், திருவாய்மொழி

" கொண்டபெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டதல்லாற் காதன்மற் றியாதுமில்லை
எண்டிசையும் கீழுமேலும் முற்றவும் உண்டபிரான்
தொண்டரோமாய் உய்யினல்லால் இல்லைகண்டீர்
[துணையே. "

என்றும், தத்துவராயர்

" தந்தையொடு தாய்மைந்தர் முன்பினுடன் வந்தார்
தாரமொடு பேரர்மிகு கூறுமுற வாகும்
பந்தமென வேவந்த தொந்தமிவை யொன்றிற்
பட்டதல காணுமிவை விட்டுவிடு நேரா

அந்தமுதல் தானன்றி என்றுமுள தானே
அண்டமுத லாயன்றி நின்றபொரு ளுமா
இந்தவுல கேவந்து தந்தருளு மாரு
தெந்தைசொருபா னந்தன் என்றுமொழி யீரே."

என்றும், சிவதருமோத்தரம்

"மண்ணினும் தனத்தினு மனைக்கு வாய்த்தநற்
பெண்ணினு மகவினும் பெரிய பேரினும்
துண்ணென விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினும் இன்புடன் விளங்கி மேவுவார்."

என்றும், ஞானவாசிட்டம்

"தாரதன மிகுமென்னில் தளையாகும்
அப்பாசம் தளைத்துக் கொண்டால்
ஆரதனை அறுத்தகலும் விரகுடையார்
அறிவிலார் ஆசை விஞ்சிக்

கூரிதயம் அப்போகத் துழன்றுழக்கும்
கொடுந்துயரைக் குறித்த போதே
தீரதையாம் அறிஞருக்கு விரத்தியுள
தாய்ச்சித்தம் தெளியும் அன்றே."

என்றும், பரமார்த்த தரிசனம்

"இறவா வகைதன் னுள்ளத்தை
அடக்கும் அவனே தனக்கென்றும்
உறவா யுள்ளான் அல்லாதார்
தமக்கே பகையாய் ஒழுகுவர்

துறவா தொழுகும் துவந்துவங்கள்
துறந்தோன் தனையே தொடர்ந்த அன்பால்
மறவா தெழுந்த மெய்யறிவெம்
மாயை மறைக்க மறையாதால்."

என்றும், அமுதசாரம்

"மடம்படுமிப் பிறவி மாற்ற நினைவார்க் (கு)
உடம்பு மிகையென் றுணர்வுற் (று)—அடங்கத்

துறவா மனிதர்க் கெளிதன்றே துஞ்சிப்
பிறவா நெறியைப் பெற."

என்றும், ஞானசூரியன்

"உடலை ஒண்பொரு ளினைஉல
கியல்பினை உயர்குல நெறிதன்னை
அடையு மைந்தர்தாய் தந்தைநன்
மனைஎன அறைதரும் அவர்தம்மை
விடவி கழ்ந்திறை கழலினை
மருவிய விமலர்தங் களைஎல்லாம்
உடைய நன்குறு மொழிமறை
முனிவர்கள் உரைப்பராத் தர்களென்றே."

என்றும், நாலடி

"துன்பம் பலநாள் உழந்தும் ஒருநாளை
இன்பமே காமுறுவர் ஏழையர்—இன்பம்
இடைதெரிந் தின்னாமை நோக்கி மனையா(று)
அடைவொழிந்தார் ஆன்றமைந் தார்."

என்றும், சிவானந்தமாலை

"உடம்பு மனைவிமக வுற்றாரோ டூர்கேள்
அடைந்ததனம் வீடடிமை காணி—தொடர்ந்தவிவை
என்னஎனும் சொன்னினைவு போனால் இறையருளால்
மன்னிய வனைப்பெறுமான் மா."

என்றும், ஒழிவிலொடுக்கம்

"நாடுநகர் வீடுடையாள் தாய்தந்தை நட்புமக்கள்
மாடுகுலம் பொன்னுடன்பின் வாதனைகள்—கூடத்
தொடுத்தவலைக் கண்ணித் தொடக்கிதை இப்போது
விடப்பெறுவார் ஏன்பிறப்பார் மேல்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (17)

ஆயின் குடும்ப சகிதராய் நின்று மெய்யுணர்வு அடைந்தோர்கள் இலரோ? எனின்,

18 கல்தழீஇ முந்நீர் கடந்தோரும் உண்மையால்
இல்தழீ மெய்யுணர் (வு) உந்தீபற
ஏய்ந்தோரும் இல்லெனூர் உந்தீபற.

என்பது, கல்லைப் புணையாகத் தழுவிக்கொண்டு சமுத்திரத்தைக் கடந்தோரும் ஒருவருண்டு ஆகையால், மனை வாழ்க்கையைத் தழுவிநின்று கொண்டு மெய்யுணர்வை அடைந்தோரையும் இல்லை என்று சொல்லார்கள் பெரியோர்கள், என்றவாறு.

எனவே, அந்நிலைக்கண் மெய்யுணர்வை அடைதல் அரிதென்றது எனக்கொள்க. அங்ஙனம் கடல் கடந்தவர் அப்பமூர்த்திகள். (18)

ஆயின் எல்லோர்க்கும் துறவடைகுதல் கூடுமோ ? எனின்,

எல்லோர்க்கும் காலன் துறவீவன் ஈயாமுன்
நல்லோர் துறப்பர்தாம் உந்தீபற
19 நன்றறி வார்களென் (று) உந்தீபற

என்பது, ஆண், பெண், அலி என்று கூறப்பட்ட அனைவர்க்கும் இயமன் சடிதியிலே பற்றொழிவு கொடா நிற்பன் ; அவன் வந்து சரீர நீக்கம் செய்வதற்கு முன்னம் தாமே அச்சரீரத்தின் கண்ணே பற்றொழிந்து அதன் சார்பாகிய புறப்பற்றையும் கைவிட்டு மெய்யுணர்வு அடைவோரே நன்மையினை உடையார் ஆவர். அவரே தமக்கு உறுதியாயின அறிவார் என்றவாறு.

இதற்குப் பிரமாணம் : சித்தாந்த கரணம்

" எல்லோர்க்குங் காலன் துறவீவன் ஈந்தபிற்கேள்
பல்லோரு மாய்ந்தமனைப் பாலுடலை—ஒல்லையினில்
வைப்பர் சமாதிஇந்த வாறவர்செ யாமுன்நலோர்
அப்பரிசே தாம்புரிவ ரால்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (19)

துறவடைந்தோர் அடைந்த மாத்திரத்திற் செய்யும் கருமம் யாதென்னின் ?

20 இருமெய்உண் மைவல்லோர்க் கிம்மெய்கொண்டம் மெய்
விரைவினுய்ந் தெய்தலே உந்தீபற
வேலையா சானைஉற் (று) உந்தீபற.

என்பது, ஒரு மெய்யென்னும் பெயரினை உடைய சரீரத்தினது அசுத்தமும், அஃது அளவற்ற துக்கத்தோடும் அவதி அறிதற்கு அரிய அநித்தியத்தோடும் கூடியிருத்தலையும் மற்றுமொரு மெய் யென்னும் மியல்பினை உடைய வீட்டினது பரிசுத்தமும், அதனது நிரதிசயானந்தமும் நித்தியத் தன்மையும் அந்த வீட்டினை அடை வதற்கு இந்தச் சரீரம் இன்றியமையாமையும், சென்மாந்தரத்திலே செய்த தபோபலத்தால் இந்தச் சரீரம் பெற்ற அருமையும், [1]பிரத்தி யக்ஷத்தினாலும் [2]வாக்கியத்தினாலும் கண்டும், கேட்டும், அறிந்து ளோர்க்கு இந்தச் சரீரம் நீங்குவதற்கு முன்பே [3]அகாசரியனை நீங்கி ஞானாசாரியனை அடைந்து அதிசீக்கிரத்தில் வீட்டு நெறியை விசாரித்து திட்டை கூடுதலே கருமம், என்றவாறு:

இந்தத் தேகம் அசுத்தமும், துக்கமும் நிலையாமையும் உடைய தென்பது பிரத்தியக்ஷமாயினும், பெத்தான் மாக்கள் நிமித்தம் புரா தனர் கூறியிருத்தலின் வாக்கியப் பிரமாணமும் காட்டுதும்.

தேகம் இழிவுடையது என்பதற்குப் பிரமாணம் : திருக்கடைக் காப்பு

"என்பினாற்கழி நிறைத்து இறைச்சி
மண்சுவரெறிந்திது நம்மில்லம்
புன்புலால்நாறு தோல்போர்த்துப்
பொல்லாமையான் முகடுகொண்டு

முன்பெலாம் ஒன்பது வாசலார்
குரம்பையின் மூழ்கிடாதே
அன்பன்ஆரூர்தொழு துய்யலாம்
மையல்கொண் டஞ்சல்நெஞ்சே."

என்றும், திருப்பாட்டு

உதிரநீரிறைச்சிக் குப்பை யெடுத்தது மலக்கு கைம்மேல்
வருவதோர் மாயக் கூரை வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
கரிய மாலயனும் தேடிக் கழலிணை காண மாட்டா
அரியனாய் நின்ற ஆரூர் அப்பனே அஞ்சினேனே.

என்றும், திருவாசகம்

"பொத்தையூன் சுவர் புழுப்பொதிந் துளுத்(து) அசும்
பொழுகிய பொய்க்கூரை

1. காட்சி, 2. உரை, 3. ஆசிரியராகாதார்.

இத்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற்
சுழித்தலைப் படுவேனை
முத்து மாமணி மாணிக்க வயிரத்த
பவளத்தின் முழுச்சோதி
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. "

என்றும், சிவதருமோத்தரம்

பொற்கடத்துண் மலம்பொருந்திற்
புல்லியரும் பொருணசையால்
அக்கடத்தைப் பற்றியெடார்
அங்கையினுல் அவனிதனின்
மக்கள் தம துடலினைத்தாம்
மலபாண்டம் என அறிந்தும்
எக்கணக்கால் இகழாதே
அருவருப்பற் றிருக்கின்றூர். "

என்றும்,

"அடுத்தவை ஊத்தை யாக்கும் உடம்பைநல் அறிவால்தோலை
விடுத்துளே வேறுவேரு நரம்பீறேடிறைச்சி என்பால்
தொடுத்தஇம் மாலை தன்னைத் தூய்தின்மை நோக்கித் துன்பம்
எடுத்தஇக் காமபாசம் எறிகிலார் என்னே என்னே."

என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

தேகம் துன்பமுடையது என்பதற்குப் பிரமாணம் : சிவானந்த மாலை

இருவகையா மான்மிகமிக் காயத்தி னெஞ்சின்
வருமவைதா னேதக்கேண் மாணுப்—பொருவரிய
குன்ம மதிசாரம் வெப்புக் கொடுஞ்சூலை
அன்னபிற வின்னங் கேளாய்.

அன்றியும்,

" மக்களொடு துட்ட மிருகம் பேய் வன்பசுநற்
பக்கிபறிப் போரசுரர் பற்பலவுந்—தொக்கிலுறல்
சோகம சூயை அபிமான மாற்சரியம்
ஆகுபல உள்ளுறுநோ யாம்."

அன்றியும்.

" சீதமுடன் வெம்மை செறிந்து மிகச்சலிக்கும்
வாத மழைதடித்து வானிடி—தீதிற்
கௌரியொரு பாகன் கருணையி னுலாகும்
பௌதிகமீ தென்றே பகர்."

அன்றியும்,

" கருவா யுதரத்திற் கட்டுண்டல் மண்ணில்
உருவாகி உற்பவித்தல் ஓங்கல்—நரைதிரைதான்
மைவிரவஞ் ஞானம் மரணம்நர கஞ்சனனந்
தெய்விக மீதென்றே தெளி."

என்றும், சிவதருமோத்தரம்

" அன்னைதன் வயிற்றிடை அனேக துன்பமே
பின்னையும் பிறப்புழிப் பெரிது துன்பமே
தன்னைய ரறவுரை தரிக்கத் தாதையோர்
சொன்னவில் குரவனும் சுளியத் துன்பமே."

அன்றியும்,

" காலையு மலத்தினுற் கடிது துன்பமே
சாலவும் பசியினுல் தளர்வ ருச்சியின்
மாலையிற் காமமு மலைய வாடுவர்
வேலைகள் தொறுமிடர் விளையும் விஞ்சியே."

என்றும், தத்துவாமிர்தம் :

" பிணிகளும் கவலையும் பேசின் ஏழ்கடல்
அணைதரு மணலினும் அனந்த கோடியால்
அணைதரும் பிறவியி லிடரலா தொரு
கணமது மிலதெனக் கண்டு நொந்தனன்."

என்றும், வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

தேகம் அநித்தியம் என்பதற்கு உதாரணம் : திருவள்ளுவர்

" நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு."

என்றும், திருக்கடைக்காப்பு

" தந்தையார் போயினார் தாயரும்
போயினார் தாமும் போவார்
கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார்
பார்க்கின்றார் கொண்டு போவார்

எத்தநாள் வாழ்வதற் கேமனம்
வைத்தியால் ஏழை நெஞ்சே
அந்தண் ஆரூர்தொழு துய்யலா
மையல்கொண் டஞ்ச னெஞ்சே."

என்றும், தேவாரம்

" நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே."

என்றும், திருப்பாட்டு

" பரிந்த சுற்றமு மற்றும்வன் துணையும்
பலரும் கண்டழு தெழுமுயி ருடலைப்
பிரிந்து போமிது நிச்சய மறிந்தால்
பேதை வாழ்வெனும் பிணக்கினைத் தவிர்ந்து

கருந்த டங்கண்ணி பங்கனை உயிரைக்
கால காலனைக் கடவுளை விரும்பிச்
செருந்தி பொன்மலர் திருத்தினை நகருட்
சிவக்கொழுந் தினைச்சென் றடை மனனே."

என்றும், கந்தரனுபூதி

" கூகா வெனஎன் கிளை கூடி யழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகா சலவே லவநா லுகவித்
தியாகா சுரலோக சிகா மணியே."

என்றும், கந்தரலங்காரம்

" கூர்கொண்ட வேலனைப் போற்றாமல்
ஏற்றங்கொண் டாடுவிர்காள்
போர்கொண்டகால னுமைக் கொண்டு
போமன்று பூண்பனவுந்

தார்கொண்ட மாதரு மாளிகை
யும்பணச் சாளிகையும்
ஆர்கொண்டு போவரை யோகெடு
வீர்நும் அறிவின்மையே.''

என்றும், பட்டினத்துப் பிள்ளையார் பாடல்

"வினைப்போக மேயொரு தேகங்கண்
டாய்வினை தானொழிந்தால்
தினைப்போ தளவுநில் லாதுகண்டாய்
சிவன்பாதந் தன்னை
நினைப்போரை மேவி நினையாரை
நீங்கி நெறியினின்றால்
உனைப்போல் ஒருவருண்டோ மனமே
நமக்குற் றவரே.''

என்றும், திருவாய்மொழி

"மின்னில் நிலையிலம்
மன்னுயி ராக்கைகள்
என்னு மிடத்துறை
உன்னு மினீரே.''

என்றும், ஞானவாசிட்டம்

"நிதியுமர சுஞ்செயலு மிவ்வுடம்பும்
வேண்டுவது நிற்கி னன்றே
விதியில்வரும் காலனுவிவை எல்லாம்
சிலநாளில் வீந்து போகும்
உதிரமொடு தசையுடைத்தா யுடைவதியல்
பாய்த்தாழ்ந்தோ ருயர்ந்தோர் ஒத்த
அதிகசரா மரணமுறுந் தரமறியார்
இவ்வுடலி னழகென் கொல்லோ.''

என்றும், நாலடியார்

புன்னுனிமே னீர்போ னிலையாமையென் றெண்ணி
இன்னினியே செய்க அறவினை—இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேளலறச்
சென்றான் எனப்படு தலால்.''

என்றும், சிவஞானசித்தியார்

" கருவினுள் அழிவதாயும் கழிந்திடாது அழிவதாயும்
பரிணமித் தழிவதாயும் பாலனாய் அழிவதாயும்
தருணனாய் அழிவதாயும் தானரைத் தழிவதாயும்
உருவமே அழிவேயானால் உள்ளபோதே பாருய்ய "

என்றும், தத்துவராயர்

" கொட்டாவி கொண்டவர் விட்டார் உயிரென்று கூடநின்று
நட்டார்கள் சுட்டு நடக்கும் வகையிது கண்டுகண்டு [வும்பர்க்
மொட்டாதென் னெஞ்சம் ஒருகால் இதென்னென் றுணர
கெட்டாதவ னென்னை யாளுடை யானருளில் லவர்க்கே."

என்றும், ஒழிவிலொடுக்கம்

" தேடப்படும் பொருளைச் சிக்கெனவாகப் புதைத்துக்
கோடிக்கொரு நிமிடங் கொள்ளுகினுங்—கூடாத
வாணாளை வீண்கழிக்கு மானுடரைப் போல்மயக்கம்
பூணார்பொய் கண்டு துறப்போர்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

வீடு சுத்தமாய் நித்தமாய்ச் சுகமாயிருக்கு மென்பதற்குப் பிரமாணம் : தேவிகாலோத்தரம்

" ஒருபொரு ளெக்காலத்து முளதாகிச் சிறப்புடைத்தாய்
இருவினை யின்றிமேலாம் இன்பத்தை அளிப்பதாகும்
பொருவிலா இதன்மேலன்பு பொருந்திடாதாரு முண்டோ
திருவுலா அகன்றகல்வி சிறந்தசான் றோர்கள்தாமே."

என வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. அத்தன்மைய வீடடைதற்கு இத்தேகம் இன்றியமையாதென்பதற்குப் பிரமாணம்: சிவதருமோத்தரம்:

" அழியு மாக்கைகொ டேஅழி யாப்பதங்
கெழுமு வார்பெற்ற தேநல்ல கேள்வியும்
அழியு மாக்கை தனைஅழி யாதென
விழுவ ரேநர கக்குழி வெய்யரே."

என்றும், பிரபுலிங்கலீலை:

"எய்தற் கரிய யாக்கைதனக் கெய்திற்
றென்றால் அதுகொண்டு
செய்தற் கரிய அறங்கள்பல செய்து
துயர்கூர் பிறவியினின்
றுய்தற் கொருமை பெறவெண்ணு துழல்வோன்
உடம்பு பொற்கலத்தில்
பெய்தற் குரிய பால்கமரில் பெய்வ
தொக்கு மென்பரால்,"

என்றும், நாலடியார்

அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனு மாற்றவே கொள்க—கரும்பூர்ந்த
சாறுபோல் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோல் போகும் உடம்பு."

என்றும், சித்தாந்தகரணம்

"மந்திரவாள் பெற்றும் பகைவெல்லான் மற்றதுகொண்டு
அந்தோதன் மெய்யை அரிந்தான்போன்—றிந்தஉடல்
கொண்டு முத்திசெல்லும் குறிப்பின்றிச் சிற்றின்பம்
கண்டுவினைக் காளாம் கணக்கு."

என்றும், வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

இச்சரீரம் பெறுதற்கரியதென்பதற்குப் பிரமாணம்: திருமந்திரம்:

"இக்காய நீக்கி இனியொரு காயத்தில்
புக்குப் பிறவாமை போம்வழி தேடுமின்
எக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்று
அக்காலை உன்ன அருள்பெற லாமே."

என்றும், அறிவானந்த சித்தியார்:

"தேரிற் சதுரயுக மிரண்டாயிர நாட்டிங் களாண்டு
ஓரிலஞ்ஞூற் றினயன்மாண் டுகாந்தமு முற்றுத் தென்பால்
சேருநுகத் துளையில் வடபாற் கழிசெல் லெளிது
சாரும் பிறப்பொழித் திம்மா னுடத்திற் சனிக்கரிதே."

என்றும், சிவஞான சித்தியார்:

" அண்டசஞ் சுவேதசங்க ளுற்பிச்சஞ் சராயு சத்தொடு
எண்டரு நாலெண் பத்து நான்குநூ றுயிரத்தான்
உண்டுபல் யோனிஎல்லாம் ஒழித்து மானுடத்து தித்தல்
கண்டிடில் கடலைக் கையா னீந்தினன் காரியங்காண்."

என்றும், அனந்த போதம்

" சனித்திடும் சராசரத்தின் தான்மிக அரிய தொன்றே
மனித்தராய் அறிவுண்டாகை மற்றதின் அரிய தொன்றும்
அனித்தமி றன்மையாயும் அறிவதின் அரிய தையா
இனித்தமாம் இன்பம் காண்பா ரியாரினும் அரியர் அன்றே."

என்றும், ஞானவாசிட்டம்

" எறியும் கடலின் நுகத்துளையில்
*யாமைக் கழுத்துப் புகுவதுபோல்
பொறிவெம் பிறவி யனேகத்தால்
புருடன் விவேகி எனப்பிறந்து
முறியும் பிறவிப் பயனிலவிம்
மோக மமையும் செய்தொழிலால்
செறிவ தென்னே இவற்றுலே
தினங்க ளெல்லாம் சென்றிடுமால்."

என்றும், திருக்கடைக்காப்பு

" நீநாளு நன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார்
சாநாளும் வாழ்நாளும் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளும் தலைசுமப்பப் புகழ்நாமம் செவிகேட்ப
நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

அநாசாரியனை நீங்கி என்பதற்குப் பிரமாணம்: சித்தாந்த தீபிகை

" வேதியராதி நான்காம் வெவ்வேறும் அனுலோமத்தால்
சாதிதான் சொல்லி னிற்க சடசன்மா வாகி லுங்கேள்
கோதிலா ஞானமின்றேல் குருவலன் பாச பந்தஞ்
சேதியா வீட்டைக் காட்டுந் தெளிவிலா னுகில் அன்றே."

*யாமை – ஆமை

என்றும், மெய்ம்மொழி

" ஆர்த்ததன் பிறவித் துன்ப மறுத்தறி வுலகின் மிக்க
மூத்தவர் போல் நடித்து மூடமா மனித ரெல்லாம்
தீர்த்திடார் தங்குற் றத்தைச் சிலர்குற்றந் தீர்க்கும் வண்ணம்
பேர்த்தடி இடமாட் டாதான் பிறர்க்கூன்று கோலாமாங்கே."

என்றும், அமுதசாரம்

" துயில் புணர்ப்பால் கர்ப்பந்தொடு கடனிராமை
மயிர்ப்படா மின்மினியின் வன்னி—முயற்கோடு
எருத்திற்பான் மெய்யுணர் வில்லாதான் பண்ணும்
குருத்துவமு நேராகக் கொள்."

என்றும், அறிவானந்த சித்தியார்

அளிமலர் விட்டு விட்டாய்ந்து மதுவுண் டகநிரம்பிக்
களிவந் திருந்த கருத்திங் குருநின் கவலையென்னும்
விளிவினை விட்டு விட்டாய்ந்து வியன்குரு மேவிநின்று
தெளிவந் துணைக்கண் டிடுமளவும் குருத்தேடிடுமே.

என்றும், அருட்பிரகாசம்

" மெய்ம்மண மன்றி முன்சிற்றிலின்
கண்டொரு மெல்லியலைப்
பொய்ம்மணஞ் செய்தோன் பதியன்
றவட்கெனல் போலும்இறை
செம்மை நெறிஅறி விப்பான் குருவன்றித்
தேர்ந்து தம்மின்
அம்மய றீர்க்கறியார் குருவோ
பிறர்க்காய்ந் திடினே."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க, ஞானசிரியனை அடைவதற்குப் பிரமாணம் : மெய்ம்மொழி

" பிறிந்திடக் கடைந்த வெண்ணெய் பின்புமோ ரதனைக்கூடிச்
செறிந்திடா வாறுபோலத் தேகமும் தேகி தானும்
பிறிந்திடப் பார்த்த பின்பு பெயர்த்ததின் நிற்பினும்கேள்
செறிந்திடா வாறு செய்யும் தேசிகன் தேசிகன் தான்."

என்றும், மெய்ஞ்ஞானவிளக்கம்

" கரையறு பிறவிவெங் கடலு ளேவிழுந்(து)
அயர்வுறு துயருழந் தவரை யோஎன
விரைவொடு வினைகெட நோக்கி வேதகக்
கரையினை அருள்பவன் கருணை நன்குரு:"

என்றும், உண்மை நிலயம்

" சிறுபுலைக் கிருங் குலப்பேர் செப்பலின்
மெய்ப்பேர் கொண்டிங்
கிறுமுடல் குறைபார்த் தஞ்சி எதார்த்தமாய்
இருத்த லாலே
பெறுமொரு மெய்ப்பேர் கொண்ட பேரின்ப
வீடு காண்பார்
குறைவறத் தேர்ந்து ஞானக் குறவர்தாள்
அடைந்துய் வாரால்."

என்றும், வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (20)

அங்ஙனம் அடைந்த அதிபக்குவம் உடைய சீடர்க்குச் சிவமே குருவடிவமாய் வந்து அ னு க் கி ர க ம் பண்ணும் என்று மேற் கூறுகின்றார்.

**மாய்க்கு நோய்க்(கு) அன்றே மருந்தீகு வாரின்மால்**
**தேய்க்குமோர் பக்குவற்(கு) உந்தீபற**
**21 தேசிகனுய்ச் சிவம் உந்தீபற.**

என்பது, இவ்வுலகின் கண்ணே வைத்தியராயினோர் இந் நோய்க்கு இத்தனை தினத்தின்மேல் ஔடதம் கொடுக்க வேண்டு மென்று நியமம் இருப்பினும், அந்த அவதிக்கு உட்பட்ட ஒரு தினத்தின்கண்ணே நாவிழுதல் முதலிய அசாத்தியங்களைக் காட்டு மாயின், அந்நோய்க்கு அக்கணமே மருந்துகொடுத்துத் தீர்ப்பது போலப் பவரோக வைத்தியராகிய ஆசாரியர் சீடர்க்கு உபதேசிக் கும் முறைமை, அவரவர் வருணத்திற்கு ஏற்கச் சோதிக்கும் காலங் களும்; அவற்றுள்ளும் உயர்ந்த பக்குவர்க்கு ஒருவருடம் அளவா யினும் சோதிக்க வேண்டும் என்பன உளவாயினும் பரமசிவமே குருவடிவமாகி எழுந்தருளி வந்து [1]அநாசாரம் சற்றுமின்றி ஆசாரங்கள் அனைத்தையும் இயல்பாய் உடைய [2]அதிதீவிர பக்குவம் உடையோனுக்கு வந்தவுடனே அனுக்கிரகம் செய்து பிறவிச் செருக்கை அழிக்கும் என்றவாறு.

1. ஒழுக்கமின்மை. 2. மிகு விரைவு.

அவரவர் வருணத்திற்கு ஏற்கச் சீடரைச் சோதித்தல் என்பதற்குப் பிரமாணம் : சைவசமய நெறி.

" பண்ணிடுக தீக்கையினைப் பக்குவம்பார்த் தாறிரண்டுள்
எண்ணும்மும் மூன்ருறின் மூன்றின். "

அன்றியும்,

" சூத்திரர் ஆதியர்க்குச் சொன்னமுறையால் ஆண்டு
பார்த்தே அனுக்கிரகம் பண். "

என்றும் வரும். மற்றும் வருவனவற்ருற் காண்க.

அவரினும் பக்குவம் உயர்ந்தோர்க்கு ஒருவருடம் அளவாயினும் சோதிக்க வேண்டும் என்பதற்குப் பிரமாணம் : சிவநெறிப் பிரகாசம்:

" தேசிகரும் மாணவர்கள் செய்தி உணர்ந்திடவே
சிறியோரைப் பெரியோர்செய் தொழில்அதனிற்செறித்தும்
ஏசிலாம் பெரியோரை ஈனமாந் தொழிற்கே
இசைத்தும் அடித்தும் வைதும் இவ்வாறு செயவும்
கூசியிடா திட்டபணி செய்து குருபத்தி
குறைவில ராய்நம் பினராய்த் துரோக மின்றி
மாசிலராய் மனவாக்குக் காயத்தால் குருவின்
வாக்கிய பாலனம் செய்யும் மதிமானு மாயே. "

அன்றியும்,

" ஆதரவும் சாந்தியும் நற்பொறுமை தானும்
அசத்தியமில் லாஉரையும் ஆசாரம் தவமும்
தீதான செயல்மறந்து நன்றி அறிந்திடலும்
சிவாகமத்தைக் கேட்டதனைத் தெளிதல் தானும்
போதலறப் பொறிவழியின் நிற்றல் ஆதிப்
புகன்றுடைய நற்குணங்கள் பொருந்தி மேலும்
ஓதலுறும் குணம்குற்றம் சோதித்தோர் வருடமுறும்
குணத்தின் அளவாகத் தீக்கைசெய்வார் உயர்ந்தோர்."

என்றும், அருட்பிரகாசம்

" குருபரனுக் கவனெஞ்சகம் போலனுகூலத்தனுய்க்
கரசரணுதி யினேவல்செய் தேதினங்கட்கு இமைபோல்

உரியமனை முதல்யாவையும் காத்துண்மை யாவொருதற்
பரமிவனே எனக்காண்பான் சற்சீடன் பகர்ந்திடினே."

அன்றியும்,

"தேசிகன்பால் பற்பலதீக் குணங்கள்செறி யினும்நம்
பாசப்பிராந் திக்கிவை தோற்றியவிறை பாவிலையென்(று)
ஆசறுபத்தியி னோர்ந்து எவ்விதத்தும் அவனருளைத்
தேசங்குலவ வளர்ப்போன் சற்சீடன் தெரிந்திடினே.

அன்றியும்.

"பூரணமாய சிவனெம் பிறவியைப் போக்குதற்கித்
தாரணிமேற் குருவாய் வந்திடில்அவன் தன்னெதிர்யாம்
ஓரணுஎன்ன பொய்தானும் என்னுகும்என் றுண்மைகளக்
காரணனோடு உரைப்பானே சற்சீடன் கருதிடிலே."

அன்றியும்,

"விடையேறி ஈசன்வரின் மூடரும்அவன் வேண்டியதைப்
படிமீதளிப்பர் குருவே சிவமெனப் பாவனைமுற்(று)
உடையார்கள் தத்தம்உடல் ஆவிஈந்திறை உண்மைபெறத்
தடையாதுள(து) இங்குளதேல் அபக்குவர் தாம்அவரே".

என்றிம், ஞானவாசிட்டம்

"இயற்கைகுணம் சோதித்து முன்னே பின்னே
யாவையுமாம் பிரமநீ என்னல் வேண்டும்
வியப்புற வாசையின் உழல்வார்க்கு, இவ்வா
ரூேதின் மீளாத தீநரகில் வீழ்த்ததாகும்

தியக்குறுபோ கத்தாசை தீர்ந்து புந்தி
தெளிந்தஉனைப் போல்வார்க்கே திகழத் தோன்று
மயக்கமற உணர்த்தவல்ல குருவைக் கிட்டா
வருந்தியுந்தன் பிறப்பறுக்கும் மகனும் ஆங்கே."

அன்றியும்,

"சகப்பேர் பெரும்இவ் வாதனைதான்
தவிரில் அழியாச் சாந்தியதாம்
அகப்பா வனையில் இச்சகத்தில்
அலகைத் தேரா நீர்தன்னில்

உகப்பா மறுதி உள்ளோர்கள்
உபதே சிக்க ஒண்ணுதோர்
மிகப்பா விகளாம் சீசீஎன்று
இகழ்வார் அவரை மெய்யுணர்ந்தோர்.''

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

அதிதீவிர பக்குவம் உடையோர்க்கு உடனே அனுக்கிரகம் பண்ணுதல் உண்டென்பதற்குப் பிரமாணம் : திருவாதவூரடிகள் புராணம்

" வந்துநான் வறுமை உற்றேன் மாற்றென
திலம்பா டென்று
சிந்தையா குலமுற் றுன்கைச் செழும்பொருள்
ஈதல் செய்வார்
இந்தநா ளளிக்க வேண்டும் எனவிதி
இன்மை யானே
அந்தநாள் இந்நா ளாக அடிமைகொண்
டருள எண்ணி.''

என்றும், ஒழிவிலொடுக்கம்:

" அதிபக்கு வத்தோர்க்கு அனுக்கிரகம் செய்யும்
புதுமைக்குச் சாத்திரங்கள் போதா—அதுஎன்னுப்
பேறே அனந்த பிரகாரம் தந்தானும்
வேறே அனந்த விதம்.''

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. சிவமே குருவாய் வந்தென்பதற்குப் பிரமாணம் : திருவாசகம்:

அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரனுகி அருளிய பெருமையைச்
சிறுமை என்று இகழாதே.''

என்றும்,

சிவனென யானும் தேறினன் காண்க
அவனெனை ஆட்கொண் டருளினன் காண்க.''

என்றும், திருவாய்மொழி

" துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி
நின்றவண்ணம் நிற்கவே

துயரில் மலியும் மனிதர் பிறவியில்
தோன்றிக் கண்காண வந்து

துயரங்கள் செய்து தன் தெய்வநிலை
உலகில் புகஉய்க்கும் அம்மான்

துயரமில்சீர்க் கண்ணன் மாயன் புகழ்
துற்ற யாரேனா் துன்பமிலனே."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (21)

குருவாக்கியமும், சுருதியும், சுவானுபவமும் ஒத்திருக்க வேண்டும் என்று மேற்கூறுகின்றார்.

**22** **ஆன்ற ஆசான் சொல்மெய் நூல்தன் அனுபவம்**
**மூன்றும் ஒத்தாம் துணிவு உந்தீபற**
**முத்திநெறிய(து) என்று உந்திபற.**

என்பது, அமைவு பெற்ற ஞானசாரியர் வாக்கியமும், உண்மை நூலாகிய சுருதியும், விசாரிக்கும் தன்னுடைய சுவானுபவமும், ஆகிய இம்மூன்றும் ஒன்றுக்கு ஒன்று மாறுபடாமல் ஒரு தன்மை ஆகிய அவ்விடத்துண்டாகிய நிச்சயமே வீட்டு நெறி என்றவாறு.

இதற்குப் பிரமாணம் : ஞானவாசிட்டம்:

" ஆசான் மொழியால் நூற்பொருளால்
அன்றிப் பெறவும் அரிதாகும்
தேசார் குருநூல் மாணுக்கன்
சிறந்த இம்மூ வருங்கூடில்
பாசா தீதப் பதம்எய்தும்
பன்னாள் நீங்கா இக்கூட்டம்
ஏசா உணர்வைத் தரும்பகற்போ(து)
எல்லாத் தொழிலும் தருவதுபோல்."

என்றும், ஞானசூரியன்

" ஒன்றோ டொன்று ஒவ்வா அறிவுகள்
துணிந்தும் பொருள்தனில் இயல்பு வேறாக

ஒன்றவப் பொருளின் இயல்பினுல்
அறியும் அறிவன்றே உண்மையாம் அறிவ:(து)
இன்றியப் பொருளை உளதெனும் உளதை
இலதெனும் உணர்வினை ஒழித்து
முன்திகழ் குருவோ டளவை தன்தேர்ச்சி
மூன்றினுல் அறிவது மார்க்கம்."

என்றும் வரும். மற்றும் வருவன வற்றுற் காண்க. (22)

குருவாக்கியம் போல் ஒருபடித்தன்றிச் சுருதி நானுவழி கற்பித்தலால் எங்ஙனம் ஒக்கும் என்பதற்கு மேல் உத்தரம் கூறுகின்றுர்.

**23** வேதம்பல் பக்குவமோர்ந்(து) ஒருவீட் டினுக்கு
ஓதும்பல் லாற்றுனும் உந்தீபற
உண்மைகண் டார்க்கேகம் உந்தீபற.

என்பது, ஒப்பற்ற வீட்டிற்கு மார்க்கம் ஒருவிதம் அன்றிப் பலவிதமாக வேதம் கூறு நிற்பதும் ஆன்மாக்களது கன்மத்தளவில் உண்டாகிய பருவபேதத்தை ஞான மயனுகிய பகவான் அறிந்து அம்மார்க்கங்களினது கரும காண்டங்களை அங்ஙனம் கூறி ஞான காண்டங்களில் எல்லாம் தற்போத நீக்கமே கூறுதலின் உள்ளபடி தேர்வார்க்கு [1] மார்க்காந்தரங்கள் எல்லாம் அபேதம் ஆதலில் சுருதி நெறி ஒன்றே என்றவாறு.

இதற்குப் பிரமாணம் : திருமந்திரம்

" ஒன்றதே பேரூர் வழியாறு அதற்குள
என்றதே போலும் இருமுச் சமயங்கள்
நன்றிது தீதிது என்றுரை மாந்தர்கள்
குன்று குரைத்தெழு நாயை ஒத்தாரே."

அன்றியும்

" ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்தன் ஒருவனும் என்பதறிந் திலர்
அத்தன் ஒருவனும் என்பதறிந் திடின்
முத்தி விளைக்கும் முதல்வனும் ஆமே.!"'

அன்றியும்,

---

1. நெறியின் முடிந்த கொள்கை.

" முதல் ஒன்றும் யானை முதுகுடன் வாலும்
திதமுறு கொம்பு செவிதுதிக் கைகால்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூறல் ஒக்கும்ஆறு சமயமே."

என்றும், திருவாசகம்

" சமயவாதிகள் தத்தம் மதங்களே
அமைவதாக வரற்றி மலைந்தனர்."

அன்றியும்,

' இருமுச் சமயத்து ஒருபேய்த் தேரினை
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்கா தசைந்தன."

என்றும், அஞ்ஞவதைப் பரணி

" தலைபலவாய்ப் பெயர்பலவாம் நதிகள் எல்லாம்
சாகரத்தி லொருநீராம் தன்மை போலப்
பலபலவாய்ச் சொல்லு நெறிஎல்லாம் சொல்லப்
பட்ட தொரு பொருளினையாம் பணிதல் செய்வாம்."

அன்றியும்,

" அழியாத வீடென்னும் பழையவூர் கண்டு
அறியாதாரது காணவேண்டி ஆறு
வழியாகும் சமயங்கள் கொண்டு தம்மின்
வழக்குப்பேசும் சழக்கு மாழ்க அன்றே."

என்றும், பட்டணத்துப் பிள்ளையார்

" அன்றென்றும் ஆமென்றும் ஆறு சமயங்கள்
ஒன்றோடொன்று ஒவ்வாது உரைத்தாலும் என்றும்
ஒருதனையே நோக்குவார் உள்ளத்திருக்கும்
மருதனையே நோக்க வரும்."

என்றும், அமுதசாரம்

" உரைத்த துரையா துரைக்கும் சமயம்
பரத்தை அறிவுற்ற பான்மை—மரத்தின்

அவயவத்தில் ஒரொன்று அறிந்தார் மரமா
அவயவத்தைக் கொண்டவா ரும்.''

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (23)

கற்பனையாகிய சாதி சமயங்களைப் போலும் அழிவற்றதாய் இருந்துள்ள ஞான மார்க்கமே ஞானிகள் செல்லும் வழி என்று மேற் கூறுகின்றார்.

24 சாதி சமயங்கள் தம்மின் மாளாதமெய்ப்
போதமாம் ஓர்சுரத்(து) உந்தீபற
போயினுர் மீளார் என்(று) உந்தீபற

என்பது, அவரவர் கரும பக்குவத்திற்கு ஏதுவாகச் சர்வஞ்ஞுலே கற்பிக்கப் பட்டிருந்துள்ள சாதிமார்க்கமும் அதற்கு உத்தர மாகிய சமய மார்க்கமும்போல் முடிவதன்றி எதார்த்தமாய் இருந்துள்ள ஞான வழியை அடைந்தோரே பிறப்பின்கண் மீளாதவர் என்றவாறு. (24)

சாதி சமயங்கள் கற்பனையாய் அழியுமோ என்பாரைப் பற்றி மேற்கூறுகின்றார்.

25 வருண நெறிசார் மதத்தும் மதமெய்ப்
பொருளுணர் வூடிறும் உந்தீபற
பொன்றுத தொன்றே என்று உந்தீபற.

என்பது, ஒருவன் குலாசார சங்கற்பம் அவனுல் அனுசரிக்கப் படுவதாகிய ஒரு சமய முதிர்ச்சியின் கண்ணே கெடும். அச்சமயாசார சங்கற்பம் அவனது பக்குவத்தின் கண்ணே தோன்றிய மெய் யுணர்விணுலே கெடும். அந்த மெய்யுணர்வு ஒன்றினுலே முத்தி சித்தித்தலால் அதுவே [1]நித்திய மார்க்கம் என்றவாறு.

சாதி [2]ச்சங்கற்பம் சமய முதிர்ச்சியினுல் கெடும் என்பதற்குப் பிரமாணம்; **தேவாரம்**

"எவரேனும் தாமாக விலாடத்து இட்ட
திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி

1. அழியாத நெறி. 2. கொள்கை.

உவராதே அவரவரைக் கண்ட போதே
உகந்தடிமைத் திறம்நினைந்து அங்குஉவந்து நோக்கி

இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி
இரண்டாட்டா தொழிந்துஈசன் திறமே பேணிக்

கவராதே தொழுஅடியார் நெஞ்சி னுள்ளே
கன்ருப்பூர் நடுதறியைக் காண லாமே.''

என்றும், பிரமோத்தாகாண்டம்

''எள்ளற் படுகீழ் மக்களேனும்
இழிந்த குலத்தோர் ஆனாலும்

வள்ளல் பரமன் திருநீறும்
மணியும் அணிந்த மாண்பினரை

உள்ளத் துள்ளே இருபோதும்
உணர்ந்து தெருண்டு சிவனெனவே

கொள்ளத் தகைய அறிவினரே
பிறவிக் கடலில் குளியாதார்.''

என்றும், திருவாய்மொழி

''குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழிழிந்தெத்தனை
நலந்தான் இலாத சண்டாள சண்டாளர்க ளாகிலும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்கா ளென்றுள்
கலந்தார் அடியார்தம் அடியாரெம் அடிகளே,''

என்றும் வரும். மற்றும் வருவனவற்ருற் காண்க.

சாதி சமயம் என்னும் இருவகை சங்கற்பமும் மெய்யுணர்வில் கெடும் என்பதற்குப் பிரமாணம்; அமுதசாரம்.

''எந்தக் குலனுயென் எந்தக் கவியாய்என்
எத்தச் சமயத் தவராயென்—சிந்தைத்
துறவிதரும் சொல்லே தூய்தாவ தல்லால்
பிறவிதரும் சொல்லே பிற.''

என்றும், அனுபூதிநிலையம்

''அறுவகைச் சமயத் தறையும் எப்பொருளும்
அறுபத்து நாலுநற் கலையும்

மறுவறப் பயின்று மாசறத் திகழும்
மதிஞராம் அவர்களே எனினும்

குறைவறத் தன்னைக் கொடுத்திடும் குரவன்
குரைகழல் புனைந்தவர் அன்றேல்

பறையர்மற் றவரே பறையரே எனினும்
அருளுடை யவர்பரம் பரரே.''

என்றும், தத்துவசரிதை

''செந்துகில் புனைவார் சீவரம் தரிப்பார்
திரிதண்டோ டொருதண்டு பிடிப்பார்

தந்தமுத் திரைகள் பலபல தரிப்பார்
தவமெனத் தம்முடம்பு ஒறுப்பார்

முந்துகாய் கிழங்கோ டிலையயின் றிடுவார்
மோனமென் பார்கத றிடுவார்

இந்தவா குலத்தால் ஈசன் மேவிடுமோ
இவர்துயர் உறுவதேன் அந்தோ.''

என்றும், போதரத்நாகரம்

''சடையினைப் பரித்தும் தலையினைப் பறித்தும்
சீவரம் தாதுநற் கலிங்கம்

உடையெனப் புனைந்தும் உடைகளைத் தவிர்ந்தும்
ஊண்உறக் கங்களைத் துறந்தும்

படியுநற் சருகும் வாயுவும் அயின்றும்
பாறொடு கல்லிடைத் துயின்றும்

இடையதற் றுழலும் இவையருள் சொருபன்
மெய்யருள் பெறுதவர்க்கு இயல்பே.''

என்றும், உண்மை நிலயம்

''குலநலம் உடையோர் எவரவர் உயர்ந்தோர்
குவலயத் தவர்க்க தின்றேனும்

நலமுளோர் சமயர்க் கவரவர்மேலாம்
நவில்நெறி வழாரெவ ரவரே

உலகிலெக் குலமெச் சமயமா யினும்என்
னொருதம துண்மையை உணர்ந்திட்(டு)

இலகுதத் துவஞானி கள்எவ ரவரே
எணப்படும் அவர்கள் ஞானிகட்கே.''

என்றும், வரும், மற்றும் வருவனவற்றுற் காண்க.'' 25

முற்கூறிய இருவகைச்' சங்கற்பமும் எம்முடைய மார்க்கத்தால் வர்திக்கப்படுதலின் இதுவே ஞானமார்க்கம் என்னும் சமயிகளைப் பற்றி மேற்கூறுகின்றுர்.

26. ஒன்றேடொன் ருெவ்வா மதங்களொன் ருென்றிறல்
பொன்றுவ தில்லையேல் உந்தீபற
பொய்யென்ப தெத்தைநாம் உந்தீபற

என்பது, ஒன்றுக்கொன்று மாறுபடுதலையுடைய சமயங்கள் எல்லாம் ஒன்றின் ஒன்று கெடுதல் இல்லையாயின் அவற்றுள் யாது சத்திய நெறி என்றும் மற்றியாது அசத்திய நெறியென்றும் நம் மாலே கூறப்படும் என்றவாறு. (26)

எம்முடைய சமய புராதனரால் அம்மார்க்கங்கள் முன் செயிக்கப் பட்டுள வென்பாரைப் பற்றி மேற்கூறுகின்றுர்.

27. தோல்வியும் வெற்றியும் சொன்மதங் கட்கெலாம்
காலபே தத்தினுண் டுந்தீபற
கருத்தன் செயலதென் றுந்தீபற

என்பது, இக்காலத்தில் இதனுல் அது தோல்வி அடைந்த தென்றும், அக்காலத்தில் அதனுல் இது தோல்வி அடைந்ததென்றும் சமயங்களாறும் கால பேதங்களின் ஒன்றுக்கொன்று வெற்றி தோல்வி அடைதல் உண்டாதலின் அவற்றினை நிறுவிய ஒரு பரனது இச்சையால் தெய்வத் தன்மை கொண்டு எக்காலத்தில் எதை உயர்த்தி எதைத் தாழ்த்தல் வேண்டுமோ அதை அங்ஙனம் செய்குவது ஒழிந்து மற்றோர் காலத்தினுள்ளே ஓர் மதத்தை ஒருவ ராலும் வாக்குவாதத்திஞலே செயிக்குதல் கூடாது என்றவாறு.

இதற்குப் பிரமாணம் : உண்மை நிலயம்

'' இறைவிதன் முலைப்பா லயின்ற சீகாழிக்
கிறைவனும் இறைவனைப் பரிமேல்
நறைமலர்ப் பொழில்சூழ் மதுரையம் பதியில்
நடத்திய ஒருபெருந் தவனும்

புறநிலைச் சமணம் ஆதியைச் செயித்தார்
பொருந்து தெய்விகத்தெனிலெவரோ
மறைசொல்சட் சமயத் தொன்றுகொண் டொன்றை
வாக்கு வாதத்தில் வெல்பவரே ”

என வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (27)

ஒரு மதங்கொண்டு ஒரு மதத்தை வாக்குவாதத்தினுலும் வென்றது உண்டென்பாரைப் பற்றி மேற்கூறுகின்றுர்.

**28.** வாதிகள் தங்களுக் கல்லால் மதங்களுக்(கு)
ஓதார் வலியின்மை உந்தீபற
ஓதி யுணர்ந்தோரென்(று) உந்தீபற

என்பது, முன்னை நாள் அச்சமயி இச்சமயியை வாதில் வென்று மனோரதம் அடைந்தானுயின் பின்னை நாள் இச்சமயத்திலே பின்னும் ஒருவன் அவனை மனோ துக்கம் அடையும்படி வாதித்து வெல்லுதலின் அவனவன் கற்ற கல்வி வலியினுலும் யுத்தி, புத்தி வலியினுலும் வெற்றி, தோல்வி அடைந்தாராதலின் [1]வாததுர்ப்பலம் ஒழிந்து மத துர்ப்பலம் இல்லை என்று கூறுவார் எல்லாக் கலைகளும் ஓதி உணர்ந்த பெரியோர் என்றவாறு. (28)

மத துர்ப்பலம் இல்லை என்பதற்கு மேற் பொருந்து மாற்றுனும் கூறுகின்றுர்.

**29.** ஆறுளும் ஓரா(று) அவாதிதம் மென்கைதீ(து)
ஆறும் விளங்கலான் உந்தீபற
அளவில் அளவைகொ(டு) உந்தீபற.

என்பது அறுவகைச் சமயங்களில் இச்சமயமே [2]அவாதிதார்த்தம்; மற்றைய அனைத்தும் இதனுல் வாதிக்கப்படும் என்று கூறுதலே கூடாது ; கூறுமாயின், அனைத்தையும் வாதிதம் செய்த சமயமே பரமாய் விளங்கல் வேண்டும் ; அது இன்றி எண்ணிறந்த ஏது திட்டாந்தங்களோடும் கூடி ஆறும் தனித் தனியே விளங்கலின், யாது அவாதிதமும் யாது வாதிதமும், என்றவாறு.

---

1. வாதத்தின் வன்மையின்மை.
2. வாதிக்கப்படாத பொருள்.

அளவில் அளவைகள் என்றது. அவரவர் கோட்பாட்டினது அளவினுக்கு ஏற்ற அளவைகள் என்றுமாம். (29)

30. சகலமும் தேரினும் தத்தம் மதம்நெஞ்(சு)
அகலாது உரத்தலின் உந்தீபற
அபல மியாதென்ப(து) உந்தீபற.

என்பது, எச்சமயத்தின் கணின்றுள யாவரும் வேதாகம மாதிய நூல்களும் மற்றைச் சமய நூல்களும் கசடறக் கற்றுணர்ந் தோரேயாயினும் இதுவே ஞான சமயமென்று ஒரு சமயத்தையே அடையாது தத்தம் சமயமே ஞான சமயம் என்று தாபித்தற்கு ஏது திட்டாந்தங்கள் மிகவும் மனத்தின்கண் வலிதலின், வலியின்மைச் சமயம் யாது ? என்றவாறு. (30)

எல்லாச் சமயத்தையும் மெய்ஞ்ஞானிகளாயினோர் விட்டு நீங்குவார் என்று மேற்கூறுகின்றார்.

31. எல்லாச் சமயத் தியல்பும் அறிந்தவர்
நில்லார் அவற்றூடென்(று) உந்தீபற
நீங்கில் பழியாதென்(று) உந்தீபற.

என்பது, சகல சமயத்தின் உண்மையும் உள்ளபடி அறிந்து அவற்றின் முடிவுகண்ட ஞானிகள் எச்சமயாபிமானமும் பற்றி நிற்பதே இல்லை ; நீங்கிவிடுவார். அங்ஙனம் நீங்கியது கொண்டு அவரடையும் தாழ்வு யாது ? என்றவாறு. (31)

ஞானிகள் சமயாசாரங்களை நீங்குவாராதலின் அவர்க்கு அதனால் வரும் தாழ்வு ஒன்றும் இல்லை என்று மேல்வரும் செய்யுள் இரண்டாலும் வலியுறுத்திக் கூறுகின்றார்.

32 உயர்ந்த நெறியீதென்(று) ஒன்றைவிட் டொன்றை
இயைந்திடு வோனுமுண்(டு) உந்தீபற
ஏதம் அடையானென்(று) உந்தீபற.

என்பது, தன் சமயத்தின்கண் இழிவும் பிறிதொரு சமயத்தின் கண் உயர்வும் கன்ம பாகத்தின் அளவின் ஒருவனுக்குத் தோன்று கையால், தான் முன்பு நின்ற நெறியை நீங்கி உயர்வு தோன்றிய நெறியை அடையா நிற்பன், அதனால் அவனுக்குப் பின்பு அடைந்துள மதத்தில் உண்டாகிய நன்மை அடைகுவது ஒழிந்து, முன்பு நின்றுள மதத்திற்கூறிய பதிதத்தன்மை அடையான். மேற்

சங்கை—யாவனொருவன் யாதொரு மதத்தின்கண் நின்றாயினும் அதனை நீங்கி எம்முடைய மதத்தின்கண் வந்தானாயின் அவனே பரமுத்தனென்றும், எம்முடைய மதத்தின் நின்றவன் மற்றொரு சமயியுடன் நட்புற்றுக் கூடியிருந்தானே யாயினும் அவனே பதிதன், அவனே அதிபாதகனென்றும், பகவானது வாக்கியமாகிய வேதங்களும், வியாசரால் கூறப்பட்டுள்ள புராணங்களும், எம்முடைய மதத்தின்கண் புராதனரது வாக்கியமும் உண்டென்பாரும் உளர். அஃதெத்தால் எனில்? மேலுத்தரம்—மற்றொரு சமயத்திற்கும் ஒருவன் வந்து கூடினும், நீங்கினும் அங்ஙனம் [1]முத்தத்துவமும். [2]பதி தத்துவமும் உண்டென்று வேதபுராண வாக்கியங்களும் அச்சமய புராதன வாக்கியமும் இருத்தலின் அது கூடாது; ஆயின், அச்சமயங்கட்குக் கூறிய வாக்கியங்கள் [3]அயதார்த்தமோ வென்னில்? அயதார்த்தமும் அன்று. யதார்த்தமே என்றால், அவ்வாக்கியங்களுக்குத் தாற்பரியம் ஏதெனில், ஒரு சமயத்தின்கண் நின்றான் அச்சமயமே உயர்ச்சி என்றும் மற்றையவை தாழ்வு என்றும் மனதில் [4]நிச்சயார்த்தம் பிறந்திருக்கவும் புகழ் பொருளாகிய முன்னிலையினால் மற்றொரு சமயத்தை அடைந்தானே ஆயின் அச்சமயத்தில் கூறிய முத்தியை அடையாது முன்பு நின்ற சமயத்தில் கூறிய பதிதத்தன்மை அடைந்து நரகில் தாழ்குவன். இஃதன்றி முன்பு நின்றுள்ள சமயம் தாழ்வு என்றும், பின்பு செல்லவேண்டிய சமயம்உயர்வு என்றும் நிச்சயார்த்தம் பிறந்து சென்றானே ஆயின் அச்சமயத்தில் கூறிய நன்குஅடைகுவதன்றி முன்பு நின்றுள்ள சமயத்தில் கூறிய பதிதத் தன்மை அடையான். இங்ஙனம் ஆதலின் உயர்ந்த நெறி ஈதென்னும் துணிவுடைமையால் பின்பு ஒருநெறியை அடைந்து ஒரு தாழ்வு அடைகுதலிலன் என்றவாறு. (32)

33 ஆதலால் மேலாம் நெறியடைந் தோர்க்கொரு
சாதி சமயமேது உந்தீபற
சங்கற்ப நாசரென்(று) உந்தீபற.

என்பது, ஒரு சமயத்தை விட்டு ஒரு சமயத்தை அடைந்தோனுக்கும் துணிவுடைமையான் இங்ஙனம் ஆதலின் எல்லாச் சமயத்தின் உண்மைகளும் அறிந்து அவற்றினுக்கு எல்லாம் மேலாகிய ஒரு சன்மார்க்கத்தை அடைந்துள்ளவர் ஆதலின் ஞானிகளாயினோர்க்கு உலகாசார, குலாசார, சமயாசாரங்களும் இல்லை

1. முத்தத்தன்மை.
2. பதிதத்தன்மை (பதிதன் - ஒழுக்கந் தவறியோன்).
3. உண்மையின்மை.
4. உறுதி.

அன்ருேர் சர்வசங்கற்பமும் ஒருங்கே இறந்துடையார் ஆதலின் என்றவாறு.

இச்செய்யுள் இரண்டிற்கும் பிரமாணம் : திருப்பனுவல்

“ உலகுய ரியவென் ருேதிரு மூன்ருள்
ஐந்தையு நீங்கி இந்தநன் னெறியூ(டு)
உற்ருேர் பவமற் ருேரிஃ தொரீஇப்
பிறிதொரு நெறிசார் பேதை யெஞ்ஞான்றும்
உய்குவ திலையெனச் சைவ மாதி
அறுவித சமயத் தவரும் தனித்தனி
சுருதி புராணம் தொல்லோர் நல்லுரை
காட்டிப் புவிப்பால் நாட்டிய அதனுல்
நின்றவோர் நிலைநீத் தொன்றையீண் டடைந்தோன்
தன்னெஞ் சிடையே தான்முதல் நின்ற
அந்நிலை பெரிதென் றறிந்துமஞ் சாது
குறுகின்மண் ணுதி குறித்தொரு நெறியை
அடைகுவன் நிரயத் திடையஃ தன்றிச்
சென்னெறி பெரிதெனத் தேர்ந்துகொ டேகின்
அந்நெறிக் குளபே றவனுமெய் துதலான்
மூவிரு சமய ம்முடிவையு உணர்ந்திட்(டு)
ஏறிய ஞானி [1]சிலுகுவை எனக்கொண்(டு)
அச்சம யச்சார் பணைத்தையும்
இச்சகத் திடைநீத் திடிலவன் பழியே.”

என்றும், தேவிகாலோத்ரம்

“ சமயா சாரசங் கற்ப விகற்பமும்
அமையா தாங்குல ஆசார மானதும்
இமையா தாரும் விடாதஇல் வாழ்க்கையும்
அமையார் தோளாய் விடுதலா சாரமே.”

என்றும், திருமந்திரம்

“ ஆறு சமயமும் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனலன்
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுத லின்றி மணைபுக லாமே.”

1. சிலுகு - தடை.

அன்றியும்,

" சிவமல்ல தில்லை அறையோ சிவமாம்
தவமல்ல தில்லை தலைப்படு வோர்கட்(கு)
அவமல்ல தில்லை அறுசம யங்கள்
தவம்வல்ல நந்திதாள் சார்ந்துய்மி னீரே."

என்றும், திருவாய்மொழி

" யாவரும் எனையும் தானுய் அவரவர்
சமயம் தோறும்
தோய்விலன் புலனைந் திற்கும் சொலப்படான்
உணர்வின் மூர்த்தி
ஆவிசேர் உயிரின் உள்ளா லாதுமோர்
பற்றி லாத
பாவனை அதனைக் கூடில் அவனையும்
கூட லாமே."

என்றும், அஞ்ஞவதைப்பரணி

" தமர்பிறர் அற்றார் சமயமும் அற்றார்
சகவியல் பற்றார் தமையொழி பற்றார்
அமர்விடம் அற்றார் அறமறம் அற்றார்
அறிவயர்(வு) அற்றார் அவரடி யாரே."

என்றும், தத்துவராயர்

" இலனென் றினிச்சென் றிரக்கின்றி லேனிங் கியாவரையும்
குலனென்று கோத்திர சாத்திரக் [1]கத்துகள் கூறுகிலேன்
அலம்வந்து மற்றை அறுசமய யத்தினு மாயகிலேன்
தலம்வந்த தத்துவ ஞெரம்மை யேயின்று சார்ந்தனரே."

என்றும், ஞானவாசிட்டம்

" தவமகம் தீர்த்தம் சேவை அருச்சனை தானம் ஆதி
அவமயக் கத்தால் நீள்நாள் விலங்குபோல் அவலத்தாழ்வார்
பவமுறும் இவற்றை விட்டுப் பரிசுத்த பரம போகம்
[2]கவர்வறப் பற்றி எல்லாக் காதலு நீங்கி நிற்பாய்."

---

1. பிதற்றல்கள். 2. கவர்த்தலின்றி.

என்றும், ஞானசித்தி

"தீர்த்தம் அர்ச்சனை அத்துவா மந்திரம்
செடியுடற் றிதிசெப்பும்
ஆர்த்த சாதியே தத்துடன் அளவைநூல்
அலைதரு மிகுதர்க்கம்
பார்த்தி டார்மிகு குருபரன் அருளினுற்
பரம்பரம் அதுகாண்பார்
ஓர்த்தி டாதவர் அவைஅவை பொருளென
உழலுவர் உலகெல்லாம்."

என்றும், சிவஞானசித்தி

'ஞாலமதின் ஞானநிட்டை உடையோ ருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லை
சீலமிலை தவமில்லை விரதமொடாச் சிரமச்
செயலில்லை தியானமில்லை சித்தமல மில்லை
கோலமிலை புலனில்லை கரணமில்லை
குணமில்லை குறியில்லை குலமு மில்லை
பாலருடன் [1]உன்மத்தர் பிசாசர்குண மருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்."

என்றும், ஒழிவிலொடுக்கம்

"சிந்தை பய[2]மிலச்சை சீலம் அருவருப்பு
[3]அந்தைவிடும் சாந்திகுலம் ஆசாரம்—இந்தவழி
எட்டும் சிவயோகிக் கில்லையென மாமறைகள்
தட்டும் பெருமுரசும் தான்."

அன்றியும்,

"காமாதி விட்டுக் கரமே கலமாகிப்
பூமீதே கைகாலைப் போர்த்துறங்கி—நாமகுண
சாதி கருமம்எனும் வாதனையில் தாக்கற்றார்க்(கு)
ஏது சமயமென லாம்.

என்றும், திருவாசகம்

---

1. பித்தர். 2. நாணம். 3. அகந்தை (இடைக்குறை).

" புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்."

என்றும், சித்தாந்தகரணம்

" ஓங்கி வருநீர்க் கதிமீ துள[1]சிறைகள்
தேங்கி நதிசேர் திறமைபோன்—றுங்குப்
பருவத்துக் கேற்றநெறி பற்றியவை எல்லாம்
ஒருவி யுயிர்முத்தி யுறும்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (33)

இத்தன்மைப் பட்ட ஞானிகளாயினோர் ஒரோரிடத்திலே சமயாதி சங்கற்பங்களோடும் கூடி நிற்பினும் அவர்க்கு அஃது இல்லை என்று மேற்கூறுகின்றார்.

34. நீங்கா தெவற்றெடு நின்றாலு நெஞ்சிடைத்
தாங்கான் மெய்ஞ்ஞானியென்(று) உந்தீபற
சலமரை ஆதியொத் துந்தீபற.

என்பது, மெய்ஞ்ஞானிகளாயினோர் முற்கூறிய சமயாதி சங்கற்பங்களோடு கூடி நிற்பினும் மனத்தின்கண் பற்றெழிந்து நிற்பர். அஃது எங்ஙனமெனின், தாமரையும் சலமும், புளியம்பழமும் ஓடும் முதலிய கூடியிருத்தல் போன்று என்றவாறு.

எவற்றெடு நின்றாலும் என்ற உம்மையால் நில்லார் என்பது துணிவு. இதற்குப் பிரமாணம் அமுதசாரம்

" அருந்தல் பொருந்தல் அவையொக்கு மேனும்
பெருந்தகையோர் உள்ளம் பிறிதே—திருந்து
மனத்தின்வே றேபதியு மைந்தனுமம் மாதின்
தனத்தின்வே றல்லவே தான்."

என்றும், சிவதருமோத்தரம்

" மனத்துமயல் உற்றனனே மனைவிதனைத் தழுவியவன்
தனக்குமகள் தனைத்தழுவித் தங்கினனே அங்குமயல்
முனைப்பயனை அருந்திடினும் தெருண்டார்கண் மோகமில்லை
வினைப்பயனை வியந்தருந்தி மற்றையரே வினைவிளைப்பார்."

என்றும், அருட்பிரகாசம்

1. கரை.

" கடையேகிக் காமநுகர்வாள் ஒருகன்னி காக்கும் சுற்றத்
தடையால் வருந்தி உறவின்[1]பி ராரத்தத் தாலெவற்றின்
இடைஞானவானந்தம் பெற்றோர் இருந்தும் பற்றின்றி யெல்லாம்
உடையான் திருவடிக் கீழே மனம்வைத்து உறங்குவரே."

அன்றியும்,

" ஈங்கழனிருக்கு அவியினும் ஓரிடத்தின் மிகுத்த
ஓங்கழற் கீரம் இலையென்கை போல் எவ்வு பாதியையும்
நீங்கினர்க் கன்றிநன் கின்றினும் ஒரொரு நீடறிஞர்க்(கு)
ஆங்கவை சூழினும் தாழ்விலென்று ஓதுவர் ஆய்ந்தவரே."

என்றும், நீதிசாரம்

" நீற்றில் கழற்கொடியும் நீர்த்தா மரையிலையும்
சேற்றிற் கிடந்த சிறுபுழுவும்—சாற்றுங்கால்
மண்ணில் [2]தபனியமு மாஞானி கண்மனமும்
எண்ணிக் கொளாந்து மிவை."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (34)

இத்தன்மைப்பட்ட ஞானிகளது அனுபவ நிச்சயார்த்தம் மேற் கூறுகின்றார்.

35 ஆறு நெறிக்கு மவிரோத போதமே
தேறுமெய்ஞ் ஞானியென் றுந்தீபற
சித்தாந்தம் ஆகும்அது உந்தீபற

என்பது, ஒன்றுக்கொன்று விரோதம் நீங்காத அறுவகைச் சமயத்திற்கும் அவிரோதமாய் அவற்றிற்கெல்லாம் முடிவா யிருப்ப தொரு ஞானம் யாது அதுவே தத்துவ ஞானிகளது துணிவு; அதுவே சித்தாந்தமென்று சொல்லப்படும் என்றவாறு. சித்தாந்த மென்பது முடிந்த பொருளெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம்: ஞானசூரியன்

" அறைந்தவெச் சமயக்கலையுளும் எடுத்துக்
காட்டலாய் அருமறை முடிவில்

1. பழவினை. 2. பொன்

சிறந்தநற் பொருளாய்ச் சிவனரியயனுல்
செப்பிய அருத்தமும் ஆகித்

துறந்துமற் றவிரோதத்தையே துணிந்தோர்
சொல்லிடும் பொருளுமா மொன்றை

நிறைந்தகைத் தலத்தின் மணியெனக்
காட்டு நீதிசன் மார்க்கத்தின் இயல்பே.';

அன்றியும்,

"செய்ததே தவமாய்ச் செறிவது விடுவதின்றியே
சகல சங்கற்பப்

பொய்யதாம் ஒழுக்கப் புலமையது அறவே
போதமாம் மெய்யொழுக் கதுவாய்க்

கையிலாமலக மென்னவே
காட்டவும் வல்லதே ததுவே

மெய்யதாம் வேத வேதனமல்லாத வற்றயல்
வேதனம் அறியே."

என்றும், திருவள்ளுவர்

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்றும், அவிரோதபோதம்

"எடுத்தவெம் மதமெந் நூல்கள் யாவையுந் தமதாவங்கு
வடித்தநாற் பொருளே கொண்டு வளம்பட மகிழ்வ தல்லாற்
படித்தொரு பொருளைப் பற்றிப் பாங்கிளு லதிலொ துங்கிப்
பிடித்தது பிடித்துக் [1]காதும் பேதமை பெரியோர்க் கின்றே."

என்றும், அருட்பிரகாசம் :

"ஓரோர் சமயத் துயிராய்ச் சிலபல வுண்டுசொன்னும்
ஆராயின் முத்தியொன் றேயெனி னெங்கு மதைவிரும்பித்
தேராமலெம்மத மிம்மத மென்றென்றிற் சிக்கியிந்தப்
பார்மீ துழல்வதென் னீர்தெளிந் தோர்செயும் பண்பிதன்றே."

என்றும், மோகவதைப்பரணி :

1. முரணும்.

" கூறுபல பேருடைய வாறுபல வும்போய்க்
கோத்தபர வைக்கஞெரு நீத்தமெனு மாபோல்
வேறுபல வானசம யங்கண்முடி விற்போய்
வேறற வடைந்தவது வேதநெறி வீடே."

என்றும், அமுதசாரம் :

" இந்நெறி யிந்நெறியென் றெம்மார்க்க மும்பகர்க
அந்நெறி யெல்லா மறிந்தவறி (வு)—எந்நெறியால்
எய்தலா மந்தநெறி யென்றறைந்த தேவே
மெய்தலா வீட்டி னெறி."

அன்றியும்,

" எய்த வெளிதா மிறையரு ளில்லையேல்
எய்த வரிதா மியாவர்க்கு—மெய்தெளிந்தால்
எம்மார்க்கத் தோடு மிகலற் றிருக்குமதே
சன்மார்க்க மாகுநெறி தான்."

என்றும் வரும்: மற்றும் வருவனவற்றுற் காண்க, (35)

வேத முடிவும் சமயங்களினது துணிவும் இது வென்று மேற் கூறுகின்றார்.

39 சுருதிகள் சொல்பல் சமயத் துணிவுமப்
பரசீவ பந்தமென் றுந்தீபற
பகர்நாமம் வேறுவே றுந்தீபற.

என்பது, வேதங்களிலே சொல்லப்பட்ட பலவித சமயங்களினது துணிவும் யாதென்னில் [1]பரசீவ பந்த மென்னு மூவகைப் பொருளையும் உணர்த்துதல். சமயிகள் அவற்றிற்குத் தத்தங் கோட்பாட்டால் கூருநிற்கும் பரி பாடை நாமங்கள் வெவ்வேறு என்றவாறு. (36)

இங்ஙனம் கூறிய முப்பொருளையும் இன்றென்பாரும் உளராகலின், அது பற்றி முதற்கட் பரமுண்டென்று மேற் கூறுகின்றார்.

---

1. இறைவன், உயிர், தளை.

37 நிருமல பூரண நித்தாதி நீங்கா
ஒருபரந் தானுள துந்திபற
உலகங்கள் தோற்றலா னுந்திபற.

என்பது, நிருமலம் பூரணம் நித்தம் அதிசூக்குமம் சச்சிதானந்தம் என்று கூறும் இவை முதலிய குணங்களைச் சொரூப விலக்கணமாகவுடைய ஒரு பரம் பொருளுண்டு. அதனிடத்து நின்றும் சராசரப் பிரபஞ்சங்கள் உற்பவித்தலின் என்றவாறு.

இது [1]அநீசுரவாதிகளை மறுத்தது. அது எங்ஙன மென்னில், ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் பிரபஞ்ச மானது ஒரு கர்த்தாவை யுடையது, தோன்றி நின்றழியுங் காரியமாதலின்: எங்ஙனம்? கடம் போல். அஃதொக்கும்; மாதாபிதாக்கள் காரணமெனின், அன்னோர் புத்திரோற்பத்தி வேண்டிய காலத்து உண்டாகாமையினாலும், வேண்டாத காலத்து உண்டாகுதலாலும், ஆணிச்சிக்கப் பெண்ணாகு தலாலும், பெண்ணிச்சிக்க ஆணாகுதலாலும், இருவகை யிச்சையும் அன்றியிலே அலியாயும் [2]குரூபியாயும் தோன்றுதலினாலும், உற்பத்தி யானதும் ஆகாததும் உடனே உணரப்படாமையினாலும், ஒருவர் பண்ணக்காணாதிருக்கவும் மாதாவுதரத்தில் மாதங்கடோறும் உரு வாய் வளர்ந்து கருப்பாசய முதலிய துன்பங்கட்கு இறவாது இங்ஙனம் தோன்றுதலாலும், கடோற்பத்திக்குத் தண்டசக்கராதிகள் போல் மாதாபிதாக்கள் சுதந்தர மின்மையாலும், அஃதன்றியும் உற்பீச்சத்தோற்றங்கள் மாதாபிதாக்கள் சையோகம் இன்றியே வித்துக்காரணமாக உண்டாகையினாலும், அன்னோர் காரண மென்பது கூடாது. அஃதொக்கும்; சுக்கிலம் காரணமாய்த் தேகங் கள் உண்டாதலின் [3]உத்தரோத்தரசரீரங்களுக்குப் பூர்வ சரீரபீசம் காரணமெனின்; பாம்பின் வாயிலே கல்லும், கல்லின் வாயிலே தேரையும் நராதிதேகங்களிலே தோன்றிய புழு முதலியவைகளும் மரங்களில் தோன்றும் கிருமி கீட புல்லுருவி முதலானவைகளும் காளான் முதலியவையும் நிலத்தில் சலத்தில் தோன்றும் கிருமியாதி வடிவங்களும் ஆகிய சுவேதசத் தோற்றங்களுக்குப் பூர்வ சரீரபீசம் காரணம் அல்லாமையால் வித்தே காரணமென்பது கூடாது. சுவேதசத் தோற்றங்களும் பூ பூதராதி பிரபஞ்சத்தினின்றும் உற்ப விக்கையால் அவையே சரீரோற்பத்திக் காரணமெனின்; [4]சுவேத சோற்பத்திக்குச் சராசர உருவம் இரண்டும் காரண மாகையினாலும் மற்றுமுள்ள மூவகையோனிகட்கும் அப்பூ.பூதராதி காரணமென்கை

1. இறைவன் இல்லை என்பார்
2. அழகற்றவன்
௩. மேல்வரும் உடம்பு
4: வியர்வையிற் பிறப்பன

காணப்படாமையினுலும் அது கூடாது. அங்ஙனமன்று, ஒரு தீபத்தில் ஒரு தீபமாகப் பாரம்பரியத்தில் அனேக தீபம் உண்டாயினும் அத்தீபத்தினது [1]தாபசத்தி அக்கினியின்கண் காணப்படுகையால் அதற்குக் காரணம் அக்கினியே ஆனாற்போலத் தேககுணங்கள் பூ.பூதராதிசரத்தில் கிருமி புழு முதலியவும், அசரத்தில் காளான் முதலியவும் காணப்படுகையால் அவைகட்குப் பிருதிவியாதி சாதுர்ப்பூதமே காரணமெனின் அப்படித் தோன்றுவித்ததென்கை ஓர்காலத்தும் ஓரிடத்தும் ஒருவராலும் கண்டோமென்கை கேட்கப் படாமையினுலும் அது கூடாது. ஆயினும் அங்ஙனமன்று, விளக்கு உண்டாவதற்கு முன்னே அக்கினி விளக்கைத் தோன்றுவிக்க வேண்டுமே அல்லாமல் விளக்கு உண்டானதின் பின்பு அதுவும் இருக்க வேறொரு விளக்கை அக்கினி தோன்றுவிக்க வேண்டுவதில்லை; அதுபோல் தேகாதிகள் இல்லாத காலத்திலே சாதுர்ப் பூதம் தேகாதிகளைத் தோன்றுவிக்கும் அல்லாமல் இப்பொழுது தோன்றுவியாது எனின், இப்பொழுதும் பிருதிவியாதிகளில் சுவேதச உருவம் தோன்றுகையினுலும், அஃதன்றிக் காட்டத்தில் அக்கினியை, அக்கினியில் விளக்கை ஒருவன் முன்பு தோன்றுவித்துப் பின்பு ஒரு விளக்கில் ஒரு விளக்கைத் தோன்றுவிக்குதல் அன்றிக் காட்டத்திற்கும் அக்கினிக்கும் விளக்கிற்கும் தானே வேறொன்றைத் தோன்றுவித்தல் கூடாமைபோல் சராசர பிரபஞ்சங்கள் சடமாதலின் அவைகளை மாயையினின்றும் தோன்றுவித்தவன் ஒரு கர்த்தா உண்டெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் : சிவஞானசித்தியார்

"ஒருவனோ டொருத்தி ஒன்றென் றுரைத்திடும் உலகம் எல்லாம்
வருமுறை வந்து நின்று போவதும் ஆத லாலே
தருபவன் ஒருவன் வேண்டும் தான்முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே"

என வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (37)

சீவர்கள் உண்டென்று மேற்கூறுகின்றார்.

38 பல்சித்தி முத்தி பரனுல் அடைதலால்
தொல்சீ வருமுளர் உந்தீபற
சுதந்திர ஈனரென்(று) உந்தீபற

---

1 சுடுகின்ற ஆற்றல்.

என்பது, அனேக சித்திகளையும் முத்தியையும் அப்பரம்பொருளினது அருளினால் இவ்விடத்து அடைவார் உளராகலின், அநாதியாய் அநேக உயிர்கள் உளர். அவ்வுயிர்களும் சுதந்திரமிலர் என்றவாறு.

பல்சித்தி என்றதனால் மாயாவாதியை மறுத்தது. அஃது எங்ஙனம் எனில் பரகாயப் பிரவேசமும் சித்தியாதலின் எனக்கொள்க. முத்தி என்றது சீவர்க்கே, சீவர்க்கல்லது பரத்திற்குப் பந்தம் கூறுதல் ஒருவர்க்கும் ஒவ்வாமையின் எனக்கொள்க. உயிர்களை அநாதி என்றது பரத்தினது சிருட்டியாதி விளையாடல் அநாதி ஆதலின் எனக்கொள்க. அநேகம் என்றது ஏகாத்மவாதிக்கும் விவகாரத்தில் இவ்வண்ணமே கூறப்படுதலின் எனக்கொள்க. சுதந்தரகீனர் என்றது பரதந்திர சுதந்திரர் என்றது எனக்கொள்க. அஃதன்று பரதந்திரரே எனில் தாமே வினை செய்குதல் கூடாது. அதுவும் பரமே செய்விக்கும் எனில் பரத்திற்கு அவிகாரி என்றும் பேரருள் உடையோன் என்றும் வேதாதிகள் கூறுதல் அப்பிரமாணமாம். அன்று, சுதந்திரரே எனில் முத்தியை அடைய வேண்டுவதில்லை. முத்தியில் உயிர்க்குச் சுதந்திரமோ பரதந்திரமோ எனில் அது மேற்கூறப்படும் செய்யுளினது அர்த்தங்களாலே கண்டுகொள்க. ஆதலாலே, பந்தம் உடையராய் அநாதியாய் அனேக சீவர்கள் உளர் என்று கூறினார் எனக்கொள்க. (38)

பந்தம் உண்டென்று மேற்கூறுகின்றார்.

39. பல்லுயிர் முத்தி யடைதலால் பந்தமும்
சொல்லுவர் எல்லோரும் என்றுந்தீபற ·
தொன்மையதுவுமென்(று) உந்தீபற

என்பது, பல்லுயிர்களுக்கும் முத்தி அடைகுதல் உளதாதலின் அவ்வுயிர்களை அநாதியாய் மறைத்து நிற்பது ஒரு பந்தம் உண்டென்று ஆன்மவாதிகள் அனைவரும் கூருநிற்பர் என்றவாறு.

பந்தத்தை அநாதி என்றது சீவர்கள் உள்ள அன்றே உளதாதலின் எனக்கொள்க. (39)

பந்தம் திரிவிதமாய் இருக்கும் என்று மேற்கூறுகின்றார்.

40. அஞ்ஞான மாயைகன் மம்பந்தமா மிவற்(று)
அஞ்ஞானம் ஓர்முதல் உந்தீபற
அன்றாகும் என்பரால் உந்தீபற

என்பது, ஆன்ம ஞானத்திற்கு இங்ஙனம் பந்தம் என்று சொல்லப்படுவது யாதெனில் கேவல அவத்தையைக் காட்டா நிற்கும் அஞ்ஞானமும் அவ்வவத்தையை நீக்கிச் சகல அவத்தையைக் காட்டா நிற்கும் மாயையும் சகலாவத்தையில் மஞே வாக்கு காயத்தால் உயிர்கள் [1]ஆர்ச்சிப்பதாகிய கன்மமுமே. இந்த மூன்றினுள்ளும் அஞ்ஞானம் மிகவும் நுண்ணியதாகையால் அதனது சுபாவம் தோன்ருமையால் அஞ்ஞானம் தனியே ஒரு முதலன்று, சிவத்தினது [2]திரோபாவசத்தியே என்பாரும் ஆன்மாவினது குணமே என்பாரும் காரணமாகிய மாயையே என்பாரும் கன்மத்துள் தீவினையே என்பாரும் பலவாய் இருக்கும் என்பாரும் ஒன்ருய் அநாதி நித்தமாய் இருக்கும் என்பாருமாய் இப்படி அனேக விதங்களாலே கூறுநிற்பர். இவ்வண்ணம் மயக்கத்திற்கு இடம் கொடுத்ததும் அஞ்ஞானமே ஆதலின் அஞ்ஞாஞதி திரிவித பாசம் உண்டு என்றவாறு. (40)

இத்திரி பதார்த்த நிச்சயம் எல்லார்க்கும் ஒக்குமாயினும், அவரவர் கோட்பாடுகள் வெவ்வேறென்று மேற்கூறுகின்ருர்.

**41.** பல்லோர் துணிவும் பராதிமூன் றுந்தேர்தல்
அல்லால்வே றில்லேனும் உந்தீபற
அவரவர் கொள்கைவேறு உந்தீபற

என்பது, வீட்டுநெறி ஆராயும் பல சமயிகளினது துணிவும் பரசீவ பந்தங்கள் மூன்றையும் விசாரித்தலே யன்றி வேறில்லையென்ருலும் அத்திரிவித பதார்த்தங்களினது உண்மைகளை அவரவர் கருதிக்கொள்ளும் கோட்பாடுகள் வேறு என்றவாறு.

பல சமயிகளினது துணிவும் திரிபதார்த்த விசாரணையே என்பது எங்ஙனமெனின், எல்லா நூல்களாலும் உயிர்கட்குக் கூறப்பட்ட தருமாதி நால்வகைப் பயனில் வீடு என்பதற்குப் பொருள் விடுதலை. விடுதலையாவது பந்த நீக்கமாதலின், பந்தம் ஒன்று உண்டென்பதும், அஃது உண்டாகவே பந்தத்திஞலே கட்டுப்பட்டிருந்து அதினின்றும் விடப்படுவான் உண்டென்பதும், பந்தம் சடமாகையிஞலும் பந்தமுடையோன் சுதந்திரகினன் ஆகையிஞலும் உயிர்களுக்குப் பந்தத்தை நீக்கி முத்தி கொடுப்பான் ஒரு சுதந்திர கர்த்தா உண்டென்பதும் சர்வமத சம்மதம் எனக்கொள்க. அங்ஙனமாயினும், அவரவர் கோட்பாடுகள் வெவ்வேறு என்பது எங்ஙனமெனின், ஆன்மாக்களுக்குக் கன்மபேதம் அநேகமாதலின்,

---

1. ஈட்டிக்கொள்ளுதல். 2. மறைப்புச் சக்தி.

அவற்றினுக்கு ஏற்க வேதாதிகள் கூறிய பொருள்களைத் தத்தங் கருத்தினுக்கு ஏற்பத் துணிந்து கோடல். அஃதாவது பிரமாதி சிவாந்தமாகச் சொல்லப்பட்ட வடிவங்களுள் ஓரொரு மூர்த்தியைப் பரம்பொருள் என்று துணிந்து அப்பரம்பொருளுக்குப் பசுபாசங் களைப் பேதம் என்றும், அபேதம் என்றும், பேதாபேதம் என்றும் கொள்வார் எனக்கொள்க. (41)

அங்ஙனம் சீவ பரங்களுக்குச் சமயிகள் சொல்லும் பின்னுபின்னத்துவவாதம் எத்தால் உண்டாயிற்று என்பாரைப் பற்றி மேற்கூறுகின்றார்.

42. சீவபரம்அத் துவிதமென் திண்சொலான்
ஓவா தனைவரும் உந்தீபற
ஒன்றிரண் டென்பரால் உந்தீபற.

என்பது, சீவபரங்களை ஏகமும் என்னுமல், துவிதமும் என்னுமல், அத்துவிதம் என்று அவாதிதமாகிய சுருதி கூறுகையால், இரண்டாகில் முத்தியில் ஒன்றுதல் கூடாது. கூடுமெனில், ஒன்று கெட்டு ஒன்றுதல் வேண்டும், கெடும்பொழுது முத்தியின்மையால் இரண்டென்பதே கூடாது. பொன்னும் பணியும்போல இரண் டாகத் தோன்றுதலின் ஏகம் என்னுது அத்துவிதம் என்றதெனக் கொண்டு அப்பதத்திற்குத் தாற்பரியம் ஏகமே என்பாரும், அங்ஙன மன்று ஒன்றுகில் வஸ்துவுக்குப் பந்தமோட்சம் சொல்லவேண்டும் அஃது இன்மையால் ஒன்றென்பதே கூடாது. உடலுயிராதிய போல் பேதம் தோன்றுமையின் துவிதம் என்னுது அத்துவிதம் என்னு நின்றது--அதற்குத் தாற்பரியம் துவிதக் கலப்பே என்பாரும் ஆகி எல்லாச் சமயிகளும் கூறுவர் என்றவாறு.

அனைவரும் என்றமையால் எல்லாச் சமயிகளும் பேதம் அபேதம் என்பனவற்றையே அனுசரித்து நிற்கையால், அவ்விரண்டையுமே கூறினர் எனக்கொள்க. பேதாபேதம் என்பாரும் உளர். அங்ஙனம் ஒரு பொருள் இருப்பது விருத்தம் ஆதலினுலும், அதுவும் துணிவின் கண் முற்கூறிய இரண்டினுள் ஒரு பட்சத்து அடங்குமாதலின் அதனை ஓர் பட்சமாகத் தொகுத்துக் கூறினரில்லை எனக் கொள்க. (42)

இங்ஙனம் கூறியவற்றுள் ஏகவாதம் சாதித்தல் கூடாதென்று மேற்கூறுகின்றார்.

43. ஒன்றெனின் வீடும்இன்று உண்டேனும் வீலையால்
பின்னையும் சாரும்என்று உந்தீபற
பெத்தம் அநித்தம்விடு உந்தீபற.

என்பது சீவபரங்கள் ஏகம் என்னும் பட்சத்தில் வத்துவுக்கும் பந்தம் இன்மையால் முத்தியே இல்லை. பந்தம் உண்டாயினும் முத்தி இல்லை. பரத்தினது லீலையால் பந்தமோட்சம் உண்டாயினும் பின்னும் லீலையால் பிறப்பின்கண் சாராநிற்பர். சாரும்பொழுது முன்பு முக்தியடைந்தது அவமாகப் பந்தம் நித்தியமாய்விடும் ஆதலின் ஒன்றென்பது கூடாது என்றவாறு.

அஃது எங்ஙனம் எனின், சீவபரங்கள் ஏகமே என்னின் இங்ஙனம் துவிதபாவனை வருவானேன்? பந்தத்தால் எனின், வத்து நின்மலன் ஆகையால் பந்தம் உண்டென்பதே கூடாது. உண்டென்னில், அப்பந்தம் வத்துவுக்கும் பின்னமோ அபின்னமோ? பின்னம் என்னில் வத்துவைவிடப் பந்தம் வேறே ஒரு முதலாக உண்டாதலினுல் அவ்வத்துவுக்கு ஏகம் என்பதே கூடாது. அதுவும் அன்றிப் பந்தம் உடைய பொருட்குச் சுதந்திரம் இன்மையால் அப்பந்தத்தை நீக்குவான் நின்மலனுக ஒரு கர்த்தாவும் மேலே உண்டாக வேண்டும். அங்ஙனம் கர்த்தா இன்மையால் அப்பந்தம் நீங்குதலே கூடாது. அங்ஙனமன்று, அப்பந்தம் வத்துவுக்கு அபின்னமே எனின், அபின்னம் தன்னியல்பாகையால் ஒரு காலும் பந்தம் நீங்காது. இங்ஙனமாதலால் வத்துவக்குப் பந்தம் உண்டாயின் முக்தியும் இல்லை. அதற்குப் பந்தமே இல்லை என்றல், அதற்கு முன்பே முத்தியும் இல்லை. அஃது ஒக்கும். அந்த வத்துவுக்குச் சுபாவத்திலே பந்தம் முத்தி இல்லாவிட்டாலும் அதனது சுதந்திர லீலையாலே பந்தம் முத்திகள் உண்டென்னின், அங்ஙனமாயின் சீவர்கள் வீடு கூடினும் பரத்தினது லீலையால் பின்னும் பிறப்பின்கண் சாரா நிற்பர். சாரும்பொழுது முன்பு முத்தி அடைந்ததும் அவமாகப் பந்தம் நித்தியம் ஆதலால், சீவபரங்கள் ஏகம் என்று கூறுதல் கூடாது எனக்கொள்க. (43)

ஏகவாதத்துள் பந்தத்தைப் பிராந்தி என்பாரைப் பற்றி மேற் கூறுகின்றார்.

44. ஆகும்உயிர் பந்தத்தத் தான்அது மித்தையேல்
ஏக அமலன்கண் உந்தீபற
எவ்வா றுளதாமென்று உந்தீபற

என்பது பிரதிபிம்பம் அவிச்சின்னம் இவைபோலும் சீவர்கள் மாயையில் உண்டாகா நிற்பர், அம்மாயையும் பிராந்தி என்னில், அப்பிராந்தி ஏகத்துவம் நிருமலத்துவம் உள்ள பிரமத்திற்கு உண்டாகுதல் கூடாமையால், ஆத்மர்க்களது அஞ்ஞானதிபந்தம் மித்தையன்று என்றவாறு.

அது எங்ஙனம் என்னின், மித்தையாவது விடயாதி தோடத்தால் தோன்றும் [1]சுத்திகா ரசதாதி பிராந்தி ஞானம். அப்பிராந்தி ஆத்மாவுக்கே எனின், ஆத்மாவும் கட[2]தர்ப்பணாதிகளிலே தோன்றும் [3]அவிச்சின்னம் பிரதி பிம்பம் இவைபோலும் மாயையின் கண் நின்று தோன்ற வேண்டும். அதனால் மாயையினால் சீவர்களும் சீவர்களால் மாயையும் என்று [4]அன்னியோன்னியாச்சிரய தோடம் வரும். அதனால் ஆன்மாவுக்குத் தோன்றியதென்பது கூடாது. ஆனால் பிரமத்துக்கே தோன்றிற்றென்னில், அதுவும் கூடாது. பிரமம் ஏகம் ஆதலால் விடய தோடமும், நிருமலம் ஆதலால் [5]கரண கர்த்திருதோடமும் தோன்றுதல் இன்மையால், பிராந்தி ஞானமே உற்பவித்தல் இல்லை. அஃது இன்மையாகவே, சீவர்களும் இல்லையாக, அதற்கு முன்பே பந்தம் சொல்லுகிறதும் இல்லையாய்விடும். அதனாலே பந்தம் மித்தை அன்று என்றதெனக் கொள்க. (44)

இனித் துவிதவாதமும் சாதித்தல் கூடாதென்று மேற்கூறுகின்றார்.

**45.** ஓரிரண்டேல் இறைக்கு உற்ற கருணையால்
சேர்வரன்றே இன்றும் உந்தீபற
சேர்தலெஞ் சீவர்விடு உந்தீபற

என்பது சீவபரங்கள் துவிதமாய் இருக்கும் எனில் பரத்தினது கருணையால் அநாதியே எல்லா உயிர்களும் முத்தியே அடையா நிற்கும். இப்போது சிருட்டியாதி தொழில் பண்ணுதற்கு இடமே இல்லை. அவை உண்டாயிருத்தலின், சீவர்களைப் பரத்திற்குப் பேதம் என்று கூறுதலும் கூடாது என்றவாறு.

அஃது எங்ஙனம் எனின், வத்து பின்னமாய் ஓராத்மா இருக்கில், அவனும் சித்தாதலால் அவனுக்குப் பந்தம் வருவானேன்? அதுவும் செம்பிலே களிம்பு போல் சகசம். அப்பந்தமும் ஆத்மாவே நீக்கிக் கொள்ளில் அநாதியே நீங்கிப்போம். அஃதின்மையால்

1. சுத்தி—இப்பி ; ரசதம் — வெள்ளி ; இப்பியில் வெள்ளி தோன்றுதல் முதலிய மயக்க அறிவு.
2. கடம்—குடம் ; தர்ப்பணம்—கண்ணாடி.
3. நீர்க்குடத்துள் தோன்றும் நிழல் உரு.
4. ஒன்றனை ஒன்று பற்றுதல் என்னும் குற்றம்.
5. கருவியால் வரும் குற்றம். கருத்தாவால் வரும் குற்றம்.

வத்துவே நீக்குகின்ருனென்னில் வஸ்து [1]ஆனந்த சொருப சர்வ திருப்தனுதலால், அவன் தனக்கு ஒரு பயனும் வேண்டான். அவன் ஆத்மாக்களால் அடையும் பயன் யாது? அங்ஙனம் பயனைக் குறித்த தன்று; வத்து ஒப்பற்ற பேரருள் உடையோன் ஆதலின். ஆத்மாக் களிடத்து வைத்த கருணையே எனில், அங்ஙனமாயின் உடனே பந்தம் நீக்க வேண்டும். நீக்குதல் கூடாதென்னில், அசத்தனுதல் வரும். மெள்ள மெள்ள நீக்குவன் எனில், பேரருள் உடையோன் என்பது கூடாது. இதுவன்றியும் ஆத்மாக்கள் நித்தியம் ஆதலா லும், முத்தியடைந்தோர்கள் பிறப்பின்கண் திரும்பாமையாலும், அநாதியே பஞ்சகிருத்தியம் ஒழிய வேண்டும். அங்ஙனம் அன்று, ஆத்மாக்கள் மிகுதியினுலும் ஒரொருவர்க்கு இருவினையொப்பும் மலபரிபாகமும் [2]வருதல் கிளியீடாதலினுலும், பஞ்ச கிருத்தியம் ஒழியாதென்னில், எண்ணிறந்த ஆத்மாக்களும் சிருட்டிக்கு ஒருவர் முத்தியடையினும் எண்ணிறந்த சிருட்டியில் எண்ணிறந்த ஆத்மாக் கள் முத்தி அடைதலால், என்ருயினும் ஓர்காலேயில் பஞ்சகிருத்தியம் ஒழியா நிற்கும். அப்படி ஓர் காலத்தில் பஞ்சகிருத்தியம் ஒழியின் தோடம் ஏதெனில், பதியும் பசுக்களும் நித்தியமாதலால் முன் இறந்த காலத்திற்கு அளவின்மையால் அநாதியே பஞ்ச கிருத்தியம் ஒழிய வேண்டும். ஒழியாமையால் இனி ஓர் காலத்தில் ஒழியும் என்பதற்குப் பிரமாணமே இல்லே. அல்லது ஒழியும் என்னில், பஞ்ச கிருத்திய காரணுரம்பத்திற்கு அவதி கூற வேண்டும். அது கூடா மையால் பஞ்சகிருந்தியம் ஒழியும் என்பது கூடாது. அங்ஙனம் அன்று ஆத்மாக்கள் இடைவிடாது முத்தி அடையினும், [3]உலவாக் கிழிபோல் தொலேவற்றிருக்குமெனின், அக்கிழி தெய்விகத்தினுலே பின்னும் இடையருது [4]வர்த்தித்தல் போலே பசுக்களைப் பதி முத்தி யடைவித்தல் செய்ய மேலும் மேலும் அதற்கு அதிபதியாகிய ஒரு பதி வர்த்திப்பியா நிற்கிறதென்ருலும், அது இல்லே. இப்பதியே தற்காருண்யத்தினுல் உண்டு பண்ணிக் கொள்கிற தென்ருலும், அன்றி ஆத்மாக்களே சகசமாய் உண்டாகா நிற்கிறதென்ருலும், உற்பத்தியே காட்டா நிற்றலால், ஆத்மாக்கள் நித்தியம் என்பது வரத்திரியும். இதுவன்றியும், ஆத்மாக்கள் எண்ணிறந்ததென்னும் உரை ஆத்ம போதத்துக்கு எட்டாது என்பது ஒழிந்து சிவத்திற்கும் அங்ஙனம் கூறுதல் கூடாது. அதற்கு அங்ஙனந்தானே யெனின், ஒரோராத்மா பண்ணியிருந்துள்ள [5]சங்கித கர்மங்களுக்கு அள

1. இன்பவடிவினனுய் எல்லாவற்ருலும் நிறைவு உடையவன்.
2. எங்கோ ஒன்று நிகழ்தல்.
3. எடுக்க எடுக்கக் குறையாத பொதி,
4. வர்த்தித்தல்—வளர்தல்.
5. வினைத்தொகுதிகளுக்கு.

வில்லையாதலின், எண்ணிறந்த ஆத்மாக்கள் செய்த எண்ணிறந்த கர்மங்களையும் அதற்குக் கோரிக்கும் பலன்களையும் சர்வமுத்தியும் ஏககாலத்தில் அளவிடாநிற்கும் அப்பதிக்கு ஆத்மாக்களது தொகை தெரியாதென்னில், வகை கண்டவனுக்குத் தொகை காணப்படா தென்பது கூடாது. வினையும் அளவறுக்கப்படாது. அவரவர்க்கும் அவரவர் கர்மங்களுக்கும் அடையாளம் கண்டே கூட்டுவ னென்னில், [1]சர்வஞ்ஞன் என்பது கூடாது. எண்ணிறந்த பொருளை எண்ணிறந்ததென்றறிகிறதே சர்வஞ்ஞத்துவமென்னில், எண்ணிறந்ததென்பது ஆத்மலட்சணமன்று. பலமரம் கூடினது ஒரு சோலை என்பது போல் எண்ணிறந்ததென்பது ஆத்ம சமுதாயத்துக்கு உண்டானது. ஆத்மாவுக்கு லட்சணமானது சத்து, சித்து, நித்திய, [2]விபு என்னும் இலக்கணங்கள். இவை ஓராத்மாவிடத்தும் பல ஆத்மாவிடத்தும் இருத்தல் போலே எண்ணிறந்ததென்னும் இலக்கணமும் அங்ஙனம் இருக்கவேண்டும். அது கூடாமையால் [3]அசங்கியம் ஆத்மலட்சணம் என்பது கூடாது. இதுவன்றியும், மூவகை உயிர்களுக்கும் சிருட்டி காலத்தில் பதியினால் தனுகரணங்கள் கொடுத்து முடியுமோ முடியாதோ? முடியு மென்னில் அளவில்லை என்பது கூடாது. இதுவன்றியும், வரத்தும் இல்லாமல் செலவும் உண்டாயிருக்கிற பொருள் சிலகாலம் அளவு படாவிட்டாலும் சில காலத்தில் அளவுபட்டுச் சில காலத்தில் ஒழியும் என்பதே யதார்த்தமாதலால் செலவு உண்டாய் ஒழியாத பொருட்கு வரத்துண்டென்பது வரத் திரியும். ஆத்மாக்கள் நித்தியமாதலால் பதியால் அளவுபடுமென்னில், அளவு கண்டதற்கு முடிவில்லை என்பது கூடாது. ஆதலால் எவ்விதமும் பஞ்சகிருத்தியத்துக்கு ஒழிவு தோன்று நிற்கும். அங்ஙனமன்று ஆத்மாக்களெல்லாம் நித்திய சமுசாரியும் அநித்திய சமுசாரியுமாய் இருப்பார்கள். அநித்திய சமுசாரிகளெல்லாம் முத்தியடைந்து போனாலும் நித்திய சமுசாரிகள் இருக்கையால் சிருட்டியாதி தொழில் ஒழியாதென்னில், அநாதியே அநித்திய சமுசாரிகள் எல்லாம் முக்தியடைந்துபோய் நித்திய சமுசாரிகள் மாத்திரம் இருக்க வேண்டும் ஆதலால், இப் பொழுது முத்தி அடைவார் இல்லையாம் என்பது வரத்திரியும். உண்டாயிருத்தலின், அநித்திய சமுசாரிகளை இல்லை என்பது எங்ஙனம்? ஆதலால், சீவபரங்களைத் துவிதம் என்று கூறுதல் கூடாதெனக் கொள்க. (45)

துவிதவாதத்துள் பந்தத்தை நித்தியம் என்பாரைப் பற்றி மேற் கூறுகின்றார்.

---

1. முற்றும் உணர்ந்தோன்.
2. வியாபகத்தன்மை. 3. எண்ணிக்கை இல்லாதது.

46. உதியா இருளை உதித்தவை கூட்டிப்
பதிபந்தஞ் செய்யுமேல் உந்தீபற
பதிசத்தி என்னுமென்று உந்தீபற

என்பது ஆத்ம பந்தமாய் இருந்துள்ள [1]அஜன்னியமாகிய ஆணவமலத்தை சன்னியமாகிய மாயா காரியங்களால் முதற் [2]பிரதிபந்தஞ் செய்வித்துப் பின்பு தனது ஞானசத்தியால் பிரதி பந்தஞ் செய்யாநிற்கும் சிவம் என்னில், அப்பொழுது அச்சிவத் திற்கு அசத்தனுகுதல் வாராநிற்கும் அதனுல், பந்தம் நித்தியம் என்பது கூடாது என்றவாறு.

அஃது எங்ஙனமெனின், யாது நித்தியம் அஃது அஜன்னியம். அங்ஙனம் அசன்னியமாகிய ஓர் ஆணவமலம் கண்ணுக்கு இருளும் செம்பிற் களிம்பும்போல் அநாதியே ஆத்மஞான சக்தியைப் பிரிவறக் கலந்து மறைத்து நிற்குமாயின், பிரகாசத்தோடு கூடிய கண்ணுக்கு இருளும் ரசகுளிகையுடன்கூடிய செம்பிற்குக் களிம்பும் இன்மை போலும் நித்திய பூரண சுத்தமாயிருந்துள்ள சிவத்தோடு கூடி நின்றுள்ள ஆத்மாவை அஞ்ஞானமாவரித்தல் கூடாது. கூடு மென்னில், சிவம் அஞ்ஞானவிரோதியென்பது கூடாது. அது நிற்க, ஆணவமலம் நித்தியமாகின் முத்தி எங்ஙனம் கூடும்? அது பிரதிபந்தப்படுதலின் முத்தி கூடுமென்னில், அங்ஙனம் பிரதிபந்திப் பது யாது? மாயா காரியங்களினுல் பிரதிபந்தமென்னில் அநாதியே அவை கூடியிருக்கவும் முத்தியெய்தாமையின் அது கூடாது. அங்ஙனமன்று, முத்திக் காலத்தில் சன்னியமாகிய சுதவதிட்ட சையோக மாயா காரியங்களினுல் பிரதீபந்தமென்னில், அவை இரண்டும் சன்னியமாதலால், யாது ஜன்னியம் அது அநித்தியம் என்று அவைகளுக்கு நட்டம் எய்தாநிற்கும். அப்பொழுது முத்தி யினும் அஞ்ஞானம் [3]ஆவரியா நிற்கும். அங்ஙனம் அன்று. அவை யிரண்டினுலும் சிவஞானம் ஆவரியாத அஞ்ஞானத்திற்குப் பிரதி பந்தம் வரும். அப்பொழுது சிவஞானம் ஆத்மாவுக்கு விஷயமாம். அச்சிவஞானம் நித்தியமாகையால், அஞ்ஞானத்திற்கு என்றும் பிரதிபந்தமென்னில் சிவஞானம் அஞ்ஞானத்திற்கு விரோதியேயா மாகில், அநாதியே முத்திவரும். அஃது இன்மையால், இங்ஙனம் பிரதி பந்தப்படுத்தும் என்பது கூடாது. அங்ஙனம் அன்று, அநாதியிலே சிவஞானம் ஆத்மாவுக்கு விஷயமாகாமையின் முத்திக் காலத்து ஆகுதலின், அங்ஙனம் பிரதிபந்தம் படுத்துதல் கூடுமாயின், சிவஞானமும் மாயாவலியின் ஆத்மாவிற்கு விடய

1. தோற்றம் இல்லாதது.
2. தடை.
3. பற்றுதல்.

மாகுதலின் சூரியப் பிரகாசத்தில் கண்ணிற்கு விடயமான கடம் அப்பிரபை நீககத்து இருளைப் பிரதிபந்தம் செய்து பின்னும் விடய மாகுதல் கூடாமையின், மாயா நீக்கத்தில் ஆணவமலத்தை அது பிரதிபந்தம் செய்குதல் கூடாது. அதனுலும், மாயாகர்மங்கள் இல்லாவிடில் ஆத்மாவின் ஆணவமலத்தை நீக்குதல் கூடாது என்பதினுலும், சர்வ சக்தியும் உடைய வஸ்த்துவுக்கு அசத்தனு குதல் வாராநிற்கும். அதனுல் பந்தம் நித்தியம் என்பது கூடாது என்றதெனக் கொள்க. (46)

இங்ஙனம் திரிபதார்த்த நிச்சயம் பண்ணுவதொழிந்து இத் தசைக்கண் மனமுதலாகிய மாயா காரியங்களைக் கொண்டு துவி தாத்துவித [1]நிண்ணயம் சாதித்தல் கூடாதென்று மேல்வரும் செய்யுள் இரண்டாலும் கூறுகின்றார்.

**47.** பந்தாந்தம் மூன்றும் பகர்வதல் லால்இவை
சிந்தித் துரைக்கொணுது உந்திபற
சித்தமும் பெத்தமால் உந்திபற.

என்பது பரசீவ பந்தங்களென்று சொல்லப்பட்ட திரிபதார்த்தங் களையும் உண்டென்பதே இந்நூலினது துணிவாயினும் அவற்றினை ஒன்றுக்கொன்று பேதமென்றும், அபேதமென்றும், பேதாபேத மென்றும் சமயிகள் கூறு நிற்பர். அவ்வுண்மை நிச்சயித்துக் கூறுதல் ஒருவருக்கும் முடியாது. நினைத்தற்குக் கருவியாகிய சித்தமும் மாயா காரியமாய் இத்தசைக்கண் சீவனுக்குப் பந்தமாய் விடுதலின் என்றவாறு.
(47)

அஃது எங்ஙனமெனின், இத்தசைக்கண் நிச்சயிப்பதெல்லாம் மனத்தைக் கொண்டாதலாலும், பரசீவ பந்தங்களினது உண்மை வாக்கு, மனத்துக்கு எட்டாதென்று சுருதியாதிகள் கூறுகையாலும் எனக்கொள்க.

**48.** மின்மினிச் சோதியால் வீடிருட் கூடுவான்
தன்மைபோல் மாயைகொடு உந்திபற
தத்துவம் தேர்வதென் றுந்திபற.

என்பது, மிகுந்த அந்தகாரத்தின்கண் வழிகாணுது மிகவும் வருந்திய ஒருவன் மின்மினி விளக்கத்தைக் கருவியாகக் கொண்டு தனது இல்லிடத்தைக் கூடுவான் நினைத்துச் செல்வது போலும்

---

1. வரையறை.

பேரந்தகாரமாகிய அஞ்ஞான இருளில் மறைந்துள்ள சீவன் [1]கிஞ்சித்தாகிய மன விளக்கத்தைக் கொண்டு தனது உண்மையை விசாரிக்கத் துணிந்தது என்றவாறு.

இச்செய்யுள் இரண்டிற்கும் பிரமாணம். திருக்கடைக்காப்பு

"ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும்
கேட்பான் புகில்அளவில்லைகிளக்க வேண்டா
கோட்பாலனவும் வினையும் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்கத் தக்கார்,"

அன்றியும்,

"ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி
மாதுக்கம் நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீர் இறையேவந்து சார்மின்களே."

என்றும், திருமந்திரம்

"உரையற்றது ஒன்றை உரைசெய்யும் ஊமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற்று நின்றான் புரிசடையோனே."

என்றும், திருவாசகம்

"இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந் தேய்ந் தொன்றாம்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை அன்றி யொன்றில்லை
யாருனை அறியகிற் பாரே."

அன்றியும்,

---

1. சிறிது.

" நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க,
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க,
சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க."

என்றும், தத்துவராயர்

" ஆகியும் அழிந்தும் போகும் உற்பவத்
துன்பந் துடைத்திங் கின்பங் கொடுக்கத்
திருவுருப் புணர்ந்த குரவன் சொருபன்
பொற்பதஞ் சூடிச் சிற்பத வீடு
கையிற் கனியெனக் காணார் ஐயவோ
தர்க்க நெறியிற் சார்வார் தர்க்கம்
சொல்லல தில்லை யாகும் சொல்லும்
மனனல தில்லை யாகும் மனனும்
கனவஞ் ஞானக் காரிய மாகும்
அஞ்ஞா னத்தால் ஆகிய இருள்நெறி
மெய்ஞ்ஞா னத்தை விளக்கு மாறென்
இலதுளது ஏகம் அநேகம் என்பது
அலதில் தர்க்கம் அறைவது இலதெனில்
இலது முத்தி எய்துதல் இன்பம்
மலடி மைந்தன் எய்துதல் நிலையாம்
உள்ளதும் முன்னே உள்ளது ஆதலின்
எள்ளறு முத்தி என்செய உள்ள
தன்னின் மாசு தானொழித் திடுதல்
என்னின் ஏறிய மாசோ முன்னே
உள்ள மாசோ ஒழிப்ப தென்னின்
விள்ளா முன்னே உள்ள தாகின்
இடையோர் காலத் தென்னின் முத்தி
யடைவோர் திறத்தின் அடையும் பின்னும்
ஒழிவறு பரம்பொருள் ஒன்றே யாகின்
இழவு பேற தில்லை விழைய
வேறே ஒருவன் உண்டெனின் வேறு
கூறின் முத்தியிற் கூடா றாகும்
இங்ஙன மான பின்னர்
எங்ஙனம் சொல்வார் இகற்சம யிகளே."

அன்றியும்,

" பின்ன பின்னம தெனவே நின்று
பிணங்கா நிற்பர்கள் பேச்சிற்கும்

உன்னு நின்றிடும் மனனுக்கும் இவையுடையான்
எனவரும் உணர்விற்கும்
முன்னு நின்றிடு சொருபா னந்தனை
மொழிவான் அரிதென முதுவேதம்
சொன்னல் அறிகிலர் அவனுரருளடி
சூடா தவர்மதி கேடாயே:"

என்றும், பிரமகீதை

" வேதம் ஆகமம் புராணம்:
மிருதிகள் வேரும் மார்க்கர்
ஓதும் ஆகமங்கள் தர்க்கம்
ஒன்றெடொன் றெவ்வா தாகும்
ஈதெலாம் ஒக்கப் பண்ண
லாவதன்று இதய துக்கம்
ஆதலால் அனைத்தும் விட்டிங்கு
அனைத்துமாம் சிவனைப் பார்ப்பான்."

அன்றியும்,

" சம்புவின் அருளா லன்றி மாலயானும்
சகல தேவதைகளும் அந்த
உம்பனை உணரோம் அருள்பெரும் பொருட்டே
ஓதிய யாவையும் உளவாம்
செம்பொருள் தன்னை அருளினு லொழியத்
தெரிவினுல் தெரிகுவ ராக
நம்பும் மானுடவர் கையினுல் நாற்றம்
அறிவரோ நாசியா லொழிய."

என்றும், ஞானவாசிட்டம்

" பேதமுறு புந்தியே மாயையாகும் பெரிது
வருந்தியு மிதனைப் பேர்த்தல் வேண்டும்
போதமுறும் பேற்றினு லன்றி மாயைப்
பொருநதியின் கரைதோன்று பொருந்தத் தோன்றில்

ஏதமறும் அப்பதமே இறவா வீடாம்
இம்மாயை பிறப்பிடம் ஏதென்ன வேண்டாம்
சேதமுறக் கொல்வழியே தென்று தேர்வாய்
சிதைவுற்ருல் அதன் இயல்பு தெரியு மன்றே."

என்றும், அஞ்ஞவதைப்பரணி

" ஒன்றென்று நின்றசில பலவென்று நின்றசில
உபயத்து நின்ற சிலபேய்
அன்றென்று நின்றதனை ஆம்என்று சொல்லி
யுடனடகிட்டு விட்ட சிலபேய்."

என்றும், சிவஞானசித்தியார்

" பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்க ளல்லான்
அந்தமும் ஆதியில்லான் அளப்பிலன் ஆகலாலே
எந்தைதான் இன்னன்என்றும் இன்னதாம் இன்னதாகி
வந்திடான் என்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்றம்இன்றே.;'

என்றும், நெஞ்சுவிடுதூது

" பண்ணின் பயன்சுருதி ஆகமங்கள் பார்த்துணர்ந்து
நண்ண அரியதொரு நாடுடையான்."

என்றும், சிவானந்தமாலை

" இந்திரசா லங்காட்டும் அஞ்சனக்கண் ணேடிருந்து
முந்தஉல கங்காண மூளுவதாம் — சிந்தனையும்
சிற்றறிவும் நீக்கியருட் சேராது பாதிகொடு
தற்பத்தைத் தேடுமது தான்."

என்றும், ஒழிவிலொடுக்கம்

" மணிப்பாம் பிருளின் மறைந்திருக்கத் தேடும்
கணக்காம்தற் போதத்தைக் காட்டி—உணர்த்துகினும்
நீரிற் கிணறும் நிழலுயுத்த மும்போலாம்
ஆரித்தை நீக்கியிருப் பார்."

என்றும், மற்றும் வருவனவற்ருற் காண்க. (48)

இங்ஙனம் கூறிய உண்மையை அறிதற்பொருட்டு மனேலய சாதகம் செய்ய வேண்டுமென்று மேற்கூறுகின்ருர்.

**49.** **ஆதலால் பந்த மறுப்பான் மனோலய**
**சாதகம் செய்வனல் உந்தீபற**
**தற்பரம் தோன்றுமாறு உந்தீபற.**

என்பது பெத்த தசைக்கண்ணே சீவாதிகளினது உண்மை தெரிதல் ஒருவருக்கும் கூடாமையால், அப்பந்தத்தை நீக்குதற் பொருட்டுச் சிவதரிசனம் வரும்படி மனோலய சாதகம் செய்ய வேண்டும் என்றவாறு.

இதன் கருத்துப் பந்த நீக்கத்திற் சிவதரிசனமும், சிவதரிசனத் தின் மனோலயமும் ஒருதலையாக வேண்டப்படும் என்பதாயிற்று. மனோலயம் செய்ய வேண்டும்மென்பதற்குப் பிரமாணம்: திருமந்திரம்

" மனமாயை மாயை யிம்மாயை மயக்க
மனமாயை தான்மாய மற்றொன்று மில்லை
பிணமாய வேண்டா பிதற்றவும் வேண்டா
தனையாய்ந் திருப்பது தத்துவம் தானே."

என்றும், தேவிகாலோத்தரம்

" கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டாகும்
விரித்தபொருள் இதுஎன்ன அறிவுடைய மேதக்கோர்
திருத்தகு நல்லறிவாலே சித்தத்தைத் திறம்பாமல்
அருத்தியுடன் நிலைநிறுத்தும் அதுஅறிவின் பயனுமால்."

என்றும், ஞானவாசிட்டம்

" சனன கருமங்களின் வித்தாய்த்
தருவை யசைக்கும் காற்றேபோல்
தினமும் உடலை அசைப்பதுவும்
சித்தம் இதனைத் தீர்வதுவே

அனக சகலத் தியாகமதாம்
அதுவே பரம ஆனந்தம்
வினவு பிறஎல்லாம் மிகவும்
வெருவு கின்ற வெந்துயரே."

என்றும், பிரபுலிங்கலீலை

" விரிந்த நெஞ்சம் கருவியாம்
விடயம் உணர விரியாமல்

ஒருங்கும் நெஞ்சம் கருவியாம்
தன்னை உணர ஒருங்காமல்
விரிந்த நெஞ்சம் உடையானை
விடாது பிறவி என்றுணர்க
ஒருங்கும் நெஞ்சம் உடையானை
உறுது பிறப்பென் றுணர்கவே.''

என்றும், மோகவதைப்பரணி

'' வீயுமோ கிளை வேரறுமல்
விடஞ்செய் மோகன் விவேகனுல்
மாயுமோ உயர் மாயையாரும்
மனத்தி னுரும் இருக்கவே.''

என்றும், ஒழிவிலொடுக்கம்

'' குடையும் செருப்பும் கொடுநடப்ப தல்லால்
படியும் விசும்பும் பரப்பி—இடையாடும்
மாத்திரம்போ லேசமய வாதமனம் போதாத
சாத்திரங்கற்று ஆர்வீடுற் றார்.''

என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க. மனோலயம் உண்டாகவே திருவருள் தோன்றும் என்பதற்குப் பிரமாணம் :

திருக்கடைக்காப்பு

'' கள்ள நெஞ்ச வஞ்சக் கருத்தைவிட்டு அருத்தியோடு
உள்ளம் ஒன்றி உள்குவார் உளத்துளான் உகந்தவூர்
துள்ளி வாளை பாய்வயல் சுரும்புலாவு நெய்தல்வாய்
அள்ளல் நாரை ஆரல்வாரும் அந்தண் ஆரூரென்பதே.''

என்றும், தேவாரம்

'' வெள்ளத் தார்விஞ்சை யார்கள் விரும்பவே
வெள்ளத் தைச்சடை வைத்த விகிர்தனுர்
கள்ளத்தைக் கழியம் மனம்ஒன்றி நின்று
உள்ளத்தில் ஒளியைக் கண்டது உள்ளமே.''

என்றும், திருப்பாட்டு

'' குண்டலம் குழைதிகழ் காதனே என்றும்
கொடுமழு வாட்படைக் குழகனே என்றும்

வண்டலம் பூம்மலர்க் கொன்றையன் என்றும்
வாய்வெரு வித்தொழு தேன்விதி யாலே
பண்டைநம் பலமன முங்களைந்து ஒன்றாய்ப்
பசுபதி பதிவின விப்பல நாளும்
கண்டலங் கழிக்கரை ஓதம் வந்துலவும்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே."

என்றும், பட்டினத்துப்பிள்ளையார்

"இருக்கும் மருதினுக்குள் இமையோர்களும் நான்மறையும்
நெருக்கும் நெருக்கத்து நீளகத்திற்சென்று மீளஒட்டாத்
திருக்கும் அறுத்துஐவர் தீமையுந்தீர்த்துச் செவ்வேமனத்தை
ஒருக்கும் ஒருக்கத்தின் உள்ளேமுளைக்கின்ற ஒண்சுடரே."

என்றும், அருணகிரிநாதர்

"அராப்புனை வேணியன் சேயருள் வேண்டும்
அவிழ்ந்த அன்பால்
குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டும்
கொடிய ஐவர்
பராக்கறல் வேண்டும் மனமும் பதைப்பறல்
வேண்டும் என்றால்
இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை
எளிதல் லவே."

என்றும், தத்துவராயர்

"இசையான் அலன்எனை ஆளுடையான்
இந்தியங் களுடன்
அசையாத நெஞ்சம்கொண்டு அன்பால்
நினைந்தழியும் உடம்பின்
நசையானது இன்றிநலம் செய்வராயின்
நற்றாள் தலையின்
மிசையார வைத்தென்றும் மெய்யான
தன்னை வெளிப்படவே."

என்றும், தேவிகாலோத்தரம்

"மருவிய பொருள்மேல் அன்பாய்
வானரம்போல் சரித்துத்

திரியும்அச் சித்தந்தன்னைத் திரித்துச்
சூனியத்தே நின்றால்
மருவினோர் பிறிதல்இன்றி வானவர்
அறிவுக் கெட்டாப்
பொருவிலா நித்தசுத்தப் பொருளினை
அடைவ ரன்றே.''

என்றும், பகவத்கீதை

''வேண்டல்வேண் டாமை யின்றி
மிகைசெலாப் புலன்க ளாலே
மாண்டபோ கங்கள் துய்ப்பான்
மனம்கலக் குறுன்மற் றத்தால்
ஈண்டிய தெளிவுண் டாமால் தெளியவே
ஏல்லை யின்றிப்
பூண்டநோய் நீங்கும் நீங்கப் புலனலாப்
பொருளுந் தோன்றும்

என்றும், பிரமகீதை

''பரப்பினுன் இந்தியங்களைப் பராக்குறப்
பரம்பரன் உள்ளாகி
இருத்தலால் அறிவுண்கிலன் புறம்புள
இதரமே காண்கின்றுன்
திருப்பினுன நாட்டத்தினுல் அப்பொருள்
தெரியவே பெறுந்தீரன்
ஒருத்தனே அவிநாசி யுரம்பர
ஒளியாயவன் ஒளிர்கின்றுன்.''

என்றும், பிரபுலிங்கலீலை

''பொறியில் புறத்து மனம்செல்லில்
புலனே தோன்றியிடும் அகத்தில்
செறியில் காணம் பரானந்த
சிவமே தோன்றும் சிவம்தோன்ற
அறிவில் பரந்த விடயமயம்
ஆகும் உலகம் தோன்றுமல்

பிறவித் துயரக் கடல்கடந்து
பேரின்பம் சார்குவன் என்றும்.''

என்றும், திருக்களிற்றுப்படியார்

"அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாமல்
நின்றபடி யேநிற்க முன்னிற்கும்—சென்று
கருதுவதன் முன்னம் கருத்தழியப் பாயும்
ஒருமகள்தன் கேள்வன் உனக்கு.''

என்றும், சிவானந்தமாலை

"ஓயாமல் ஐம்புலன் சேர்வாயில் ஓடியெறிந்தங்கு
ஆயா மனத்தை அலைவறுத்து—மாயாதே
பண்டை அறிவொழிந்து பண்டையறி வாய்ப்பரத்தை
மொண்டமுழுந்திப் போவது முத்தி.''

என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க. மனோலயத்தில் தோன்றிய திருவருளால் பந்தம் நீங்கும் என்பதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர்

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.''

என்றும், தேவாரம்

"பொன்னுள் ளத்திரள் புன்சடை யின்புறம்
முன்னுள் ளத்திரள் வெண்பிறை யாய்இறை
நின்னுள் ளத்தருள் கொண்டிருள் நீங்குதல்
என்னுள் ளத்துள தெந்தை பிரானிரே.''

என்றும், திருவாசகம்

"என்புருகள் ளுருக்கி இருவினையை ஈடழித்துத்
துன்பம் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து
முன்புள்ள வற்றை முழுதழிய உள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.''

என்றும், பட்டினத்துப் பிள்ளையார்

"உற்பவந் துடைத்தல் நிற்பிடித் தல்லது
பிறிதொரு நெறியும் இல்லை.''

என்றும், தத்துவராயர்

" இதையாலயத்தில் இருப்பார் அறிய இரந்துருகிப்
பதையா திருப்பதென் பாவிநெஞ்சே பரனு ரருளால்
சிதையா தொழியில் சிலுகாய் விளையும்இச் சில் சமயக்
கதையால் மனக்கணக்கால் விடுமோ இக்கடும் பிறப்பே."

என்றும், பிரமகீதை

" இந்த யாக்கையில் இயம்பிய பரம்பொருள் அறியில்
அந்த மானுடன் மெய்யதாய் அபேத மாகியநிர்த்
தொந்த மாம்பரம் அடைந்திடும் தோன்றிடா தாகில்
பந்தமாம் பவக்கடல்படும் பரகதி அடையான்."

என்றும், சிவானந்தமாலை

" வெய்யோன் வரவரவே மெய்ந்நிழலும் தம்முளே
பைய ஒடுங்கும் பகுதிபோல்—ஐயன்
அருள்வந் தணுகவே ஆணவமாம் போத
மருளும் கெடும்போய் மறிந்து."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

மனோலயத்தால் பரத்தை உணர்ந்தோன் மற்றைய அனைத்தையும் உணர்ந்தோன் என்றுமேற் கூறுகின்றார். (49)

50. உணர்ந்தோர் அனைத்துமாம் ஓர்பொருள் தன்னை
உணர்ந்தோர் அனைத்தும்என்று உந்தீபற
உள்ளங்கை நெல்லிஈது உந்தீபற

என்பது, தானன்றிப் பிறிதொரு பொருளும் இன்மையால் அனைத்துமான ஒரு பரம்பொருளை யாவரொருவர் உணர்ந்தார், அவரே எல்லாப் பொருள்களையும் ஒருங்கே உள்ளங்கையின் நெல்லிக் கனிபோல் ஐயந்திரிபின்றிப் பிரத்தியட்சமாக உணர்ந்தோர் என்றவாறு.

இதற்குப் பிரமாணம் : திருவாசகம்

" பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடு மாகாதே
பாவனை ஆய கருத்தினில் வந்த பராவமு தாகாதே
அந்த மிலாத அகண்டமும் நம்முள் அகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுடர் அண்ணுவ தாகாதே

செந்துவர் வாய்மட வாரிட ரானவை சிந்திடு மாகாதே
சேலன கண்கள் அவன்திரு மேனி திளைப்பன ஆகாதே
இந்திர ஞால இடர்ப்பிற வித்துயர் ஏகுவ தாகாதே
என்னுடை நாயகன் ஆகிய ஈசன் எதிர்ப்படு மாயிடிலே."

என்றும், பட்டினத்துப்பிள்ளையார்

" மங்கை பங்க கங்கைநா யகநின்
தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயைப் படலம் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றனன் பெற்றபின்
நின்பெருந் தன்மையும் கண்டேன் காண்டலும்
என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன்
நின்னிலை அனைத்தினும் கண்டேன் என்னே
நின்னைக் காணு மாந்தர்
தன்னையும் காணுத் தன்மை யோரே."

என்றும், திருவாய்மொழி

" மனிதரும் மற்றும் முற்றும் மாயப் பிறவி பிறந்த
தனியன் பிறப்பிலி தன்னைத் தடங்கடல் சேர்த்த பிரானைக்
கனியைக் கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனை அமுதை
முனிவின்றி ஏத்திக் குனிப்பார் முழுதுணர் நீர்மையி னரே.',

என்றும், பிரமகீதை

எப்பொருள் களுக்கும் தோற்றமும் நிலையும்
இறுதியும் இதன்கணே ஆகி
ஒப்பிட ஒன்றும் இன்றியே என்றும்
உள்ளதாய் உரையுணர் விறந்த
அப்பொருள் நேரே அறிந்தபோ தெல்லாப்
பொருள்களும் அறிந்தவாம் அந்த
மெய்ப் பொருள்தானே எப்பொருள் களுமாய்
விளங்கலால் வேறிலா மையினுல்

அன்றியும்,

ஈசனை அறிந்த அந்த இடத்திலே என்றும் எல்லாப்
பாசமும் நசித்தல் தானும் பணியறப் பவத்தின் தீர்வும்

காசறும் அகிலமாய கங்குலின் கழிவுந்தானே
ஆசறும் அகண்டரூபி யாகையு மணைத்து மெய்தும்.

என்றும் வரும். மற்றும் வருவன வற்ருற் காண்க. (50)

மனோலய சாதகம் செய்யும் நீர்மை மேற்கூறுகின்ருர்.

51. அந்நிட்டை நீயும் அடைகுதற்கு ஊனுயிர்ப்
பின்னத்தை முன்னுணர்ந்து உந்தீபற
பேதைமை நீங்கிடென்று உந்தீபற.

என்பது. பந்த நீக்கத்துக்கு ஏதுவான அந்த மனோலய நிட்டை கூடுதற்குப் பந்தத்தை முன்பறிந்து நீங்க வேண்டலின் தேகேந்திரியாந்தக்காரணங்களை நேதி நேதி என்று ஒன்ருென்ருக்க் களைந்து தன்னுண்மை காணுவதாகிய ஊனுயிர் வேறுபாடு முன்புணர்ந்து உனதறியாமையை நீக்குவாய் என்றவாறு. (51)

என்னுண்மையாவது இத்தேகத்தின் வேறில்லை: இத்தேகமே நானென்று கூரு நிற்கும் மாணுக்களை நோக்கித் தேகம் நீயல்லை என்று மேற்கூறுகின்ருர்.

52. ஓயும் மரணந்த காலத்து உருத்துவெந்
தீயட லானும்இங்கு உந்தீபற
தேகம்நீ தானல்லை உந்தீபற.

என்பது, இளைத்தேன் பருத்தேன் என்று தேகத்தைச் சொல்லுதலினும் இதனுள் சோதிக்கும் இடத்தும் இதற்கு வேருக ஓர் ஆத்மாவைக் காணுதபடியினுலும் தேகமே யான் என்னில், அது கூடாது. என் மாடு, என் வீடு என்கிற போது சொன்னவனுக்கு அவை வேருய் இருத்தல் போல் என்னுடம்பு என்றலாலும் யோகிகள் கூடுவிட்டுக் கூடுபாய்தலினுலும் மரண காலத்தில் அக்கினி மிகவும் பற்றிக் கடத்தைப்போல் சுடுதலினுலும் தேகம் நீயில்லை; வேறே என்றவாறு.

அடலானும் என்ற உம்மையால் மற்றைய மறுதலையும் வருவிக்கப்பட்டதெனக் கொள்க. (52)

பிராண வாயுவும் ஆத்மா அல்ல என்று மேற்கூறுகின்ருர்.

53. உணர்வின்றி நாளும் உறக்கத்து அடைந்த
மணம்நுக ராதானும் உந்தீபற
வாயுவும் நீயல்லை உந்தீபற.

என்பது, தேகத்திலே பிராணவாயு இருக்கிற போது இது குளிர்கிறது, இது சுடுகிறது என்றறிந்தும் அது நீங்கினபோது கடம் போலத் தேகம் சுடப்படுதலினுலே பிராணவாயுவே யான் என்னில் உணர்வின்றித் தினந்தோறும் நித்திரையில் அஃது இரா நின்றும் அப்போது அடைந்த கந்தாதியை உணராமையினுலும் பிராண வாயுவும் நீயல்லை என்றவாறு. (53)

இந்திரியங்கள் ஆத்மாவல்ல என்று மேற்கூறுகின்றூர்.

54, ஒன்றுணர் போழ்துஒன்று உணராமை யானும் வேறு
ஒன்றுணர்ந்து ஓதலான் உந்தீபற
உணர்வு இந்திரியங்களன்று உந்தீபற

என்பது, [1] கந்தாதியைக் [2] கிராணுதி உணரா நிற்கின்றன. அவை அடங்கின நித்திரையிலே தேகமும் பிராணவாயுவும் இருக்கப் பாம்பு வரினும் சத்துரு வரினும் அறியாமல் கிடத்தலால் ஞானேந்திரியங்களே யான் என்னில், இந்திரியங்களுள் ஒன்று உணர் போழ்து ஒன்று உணராமையாலும் ஒன்றை ஒன்று உணராமையாலும் ஒன்று அறிந்ததை ஒன்று அறியாமையாலும் அவைகளுக்கு வேருய் ஒன்று இருந்து நான் கண்டேன், கேட்டேன் என்று கூறுதலாலும் கண்ணிற்குத் தீபம் போல உனக்கு விஷய கரணம் அல்லது அவைகள் நீயல்லை என்றவாறு

ஒன்றுணர் போழ்து ஒன்று உணராமையானும் என்றமையால் துவக்கிந்திரியமே ஆத்மா என்பாரையும் மறுத்தாராயினுர். அஃது எங்ஙனமெனில், துவக்கிந்திரியம் சரீரம் எல்லாம் வியாபித்திருத்தலின் இஃதே மற்றைய நான்கு கொள்கையின் நின்று சத்தாதியை உணரா நிற்கின்றதெனில், அது கூடாது. அங்ஙனமாயின் ஐம்புலனும் ஒருங்கே உணர்தல் வேண்டும்; அஃது இன்மையால் துவக்கிந்திரியமும் ஆத்மா அன்று என்று மறுக்கப்பட்டதெனக் கொள்க. (54)

---

1. சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்.
2. மெய்வாய் கண் மூக்கு செவி.

வாக்கிந்திரியமும் ஆத்மா அல்ல என்று மேற்கூறுகின்றார்.

55. ஏன்எனு ஊமற்கும் யான்எனது என்று அபி
மானம் இருத்தலான் உந்தீபற
வாக்கு நீதானல்லை உந்தீபற.

என்பது, இந்திரியங்கள் உணர்ந்ததை தான் கண்டேன், கேட்டேன் என்று வாக்கிந்திரியம் கூருநிற்கின்றது. தான் அறிந்ததைக் கூறுமல்லது அறியாததைக் கூருமையால் வாக்கிந்தரியமே யான் என்னில் அது கூடாது. வாக்கில்லாத ஊமனிடத்தும் யான் எனது என்கிற அபிமானம் இருத்தலால் அது வசன கரணமல்லது நீயல்லை என்றவாறு. (55)

ஆங்காரமும் புத்தியும் மனமும் ஆத்மா அல்ல என்று மேற்கூறுகின்றார்.

56. ஆங்காரம் நிச்சயித்து அப்புத்தி பற்றலான்
ஓங்குள ளுன்மனம் உந்தீபற
ஒன்றுநீ யன்றிவற் றுந்தீபற.

என்பது. ஊமனுக்கும் யான் எனது என்கிற அபிமானம் இருத்தலால் இங்ஙனம் செய்வது அகங்காரமாதலின் அதுவே யான் என்னில், அதுகூடாது; ஒரு பொருளின்கண் நிச்சயம் இல்லாதவிடத்து இஃது என்னதென்றும் யான் உடையேன் என்றும் அபிமானித்தல் கூடாமையால் அஃது உனக்குக் கிரியா கரணம் அல்லது நீயல்லை. ஆயின் நிச்சயிப்பது புத்தியாதலால் அஃதே யான் என்னில் ஒரு பொருளின்கண்ணே பற்றுதல் இல்லாவிடத்து அப்பொருளை நிச்சயித்தல் கூடாமையால் அஃது உனக்கு ஞான கரணம் அல்லது நீயல்லை, ஆயின் அங்ஙனம் செய்வது மனம் ஆதலின் அஃதே யான் என்னில் நெஞ்சு நினைவெழாவிடத்து அஃது ஒன்றையும் பற்றுதல் இன்மையால் அஃது உனது இச்சாகரணம் அல்லது நீயல்லை என்றவாறு. (56)

சித்தமும் ஆத்மா அல்ல என்று மேற்கூறுகின்றார்.

57. அறிவால் நினைவும் அடங்கலால் சித்தம்
அறிவன்று அசித்தாம் என்று உந்தீபற
அறிவுன் றுருவமென் றுந்தீபற

என்பது. அங்ஙனம் நினைப்பது சித்தம் ஆதலால் அதுவே யான் என்னில், அது கூடாது; நெஞ்சின்கண் நினைவும் எழாமல் அடக்குவோர் உளராகலின் வேறே ஓர் அறிவு இருந்துகொண்டு சித்தத்தையும் அசைவின்றித் தடுத்தலால் அச்சித்தமும் நீயல்லை. இவையெல்லாம் யானலன் ஆகில் எனது உண்மை மற்று யாது என்னில் தத்துவாதீதமாகிய ஞானமே நினது வடிவம் என்றவாறு. (57)

மேல் அவ்வாத்மாவினது பரிபூரணம் கூறுகின்றார்.

58, எங்குமாய் முத்தியில் ஈசனோ டெய்தலான்
மங்கா உயிர்விபு உந்தீபற
மற்றைய கூறொணாது உந்தீபற.

என்பது. அழிவின்றி வழங்கா நிற்கும் ஆத்மா பரமுத்தியில் பூரணமாகிய பரத்தோடு கூடிப் பூரணமாகையால் அதனுக்கும் மகத்பரிமாணம் அல்லது மற்றைய பரிமாணங்கள் கூறுதல் கூடாது என்றவாறு.

அஃது எங்ஙனமெனில், உள்ளதன்றி இல்லது ஒருகாலும் உண்டாகாமையின் முத்தியில் விபுத்துவம் உடைய ஆத்மா பந்தத்திலே அஞ்ஞானத்தினால் ஆர்ப்புண்டதாதலின் கருமத்தளவில் அணுபரிமாணமாயும் மத்திய பரிமாணமாயும் விளங்கா நிற்கும். உண்மை மகத்பரிமாணமே என்பது துணிவு என்றது எனக் கொள்க. (58)

மேல் தன்னுண்மை அறிதற்கு முற்பழகிப் போந்த வாசனைகளை நீக்கவேண்டும் என்று மேற்கூறுகின்றார்.

59. இந்தடை வால்நின் இயல்பை மறைத்தஅப்
பந்தங்கள் போக்கநீக்கு உந்தீபற
பழவாதனை எலாம் உந்தீபற

என்பது. ஞான வடிவமாய் இருந்துள்ள நினது உண்மையைச் சற்றும் தெரியவொட்டாமல் அநாதியே மறைத்து நிற்கும் அஞ்ஞானாதி பாசங்களை வேரறக் களைதற்கு நின்னோடு பழகிப்போந்த சகல வாசனையும் பற்றற விடுவாய் என்றவாறு.

இதற்கு உதாரணம், தேவிகாலோத்தரம்

மந்திரம் செபம் தியானம் பூசனை வணக்கம் வேண்டா
அந்தமில்லாத முத்தி உபாயமே அறிதல் வேண்டும்
சிந்தனை புறமே செல்லின் துயரமே திரிய மீட்கில்
பந்தமாந் துன்பம் நீக்கிப் பரமான இன்பம் சேர்வாய்.

என்றும், பிரமகீதை

சதுமறை யொழிந்த வாதனை பொலாத
தர்க்க வாதனை யுலகத்தின்
மதமுற ஒழுகும் வாதனை தாரம்
மக்கள் சுற்றத்தின் வாதனையும்
இதமுறு பொருளில் வாதனை தேகேந்
தியம்மனம் புந்தி நற்பிராணன்
முதல வாதனையும் வித்தை வாதனையும்
முடிவில் போகத்தில் வாதனையும்.

அன்றியும்,

ஏறுடை யானைத் திருநெடுமாலை இகழும்
வாதனையும் வேதத்தில்
கூறிடும் ஞான சாதனமாகக் கொள்ளும்
உத்தூள புண்டரத்தை
மாறுடன் இகழும் வாதனை பாவவாதனை
யாவும் மானுடர்க்கு
வேறடும் பரமாத்துவித ஞானத்தை விலக்குறும்
விரோதி யென்னவரே.

அன்றியும்,

ஆதலால் வீடதனில் ஆசை யுள்ளோன்
அதின்மிக்கும் தாற்பரிய முக்கிமுன்னம்
ஓதும் வாதனைகள் எல்லாம் இகந்து எப்போதும்
உற்ற பரமாத்துவித ஞானியாவான்
வேத வேதாந்தங்கள் உரைக்கப்பட்ட மேலான
அத்துவித ஞானமான
நாதனும் பிரமத்தை நவில லாமோ
நாம்மௌனத் திருப்பதலால் நாகத்தீரே.

என்றும், ஞானவாசிட்டம்

மறுகு வாதனைகள் தீர்ந்த மௌனத்தை ஒழிய வேறோர்
உறுகதி நல்லதில்லை உணர்வன உணர்ந்த தாகும்
துறுதிசை பத்தும் சுற்றி மீண்டதாம் தொல்லை ஞாலத்து
அறுதியாம் உண்மைகண்டோர் சிலர் நின்றோர் அவத்தின்
மாய்வோர்.

என்றும், சிதம்பர புராணம்

அன்றிஉரைக் கரும்அனந்த கோடிபிறப்
பிடைக்கருமம் ஆற்றி னாலும்
துன்றரிது பரகதியைச் சைமினிசொல்
வேதாந்தச் சொற்கள் தேர்ந்து
நன்றிதரு பொருள்தெளிவாம் சிவஞானம்
சிவனருளால் நண்ணின் முத்தி
ஒன்றல்எளிது ஆதலினால் முதுணர்வால்
இதற்கேற்ற உறுதி ஓர்வாய்.

என்றும், சிவஞான தீபம்

சாத்திரம் புத்தகம் பூசை சமயம் மதம் தருக்கம்
தந்திரம் மந்திரம் யோகம் தவம் விரதம் சீலம்
ஏத்தரிய பாவனை எண்சித்திகளே முதலாம் எப்பயனும்
முத்தி விலக்கு என ஒருசொல் லதனால்
தீர்த்தவன் மெய்த்தேசிகனும் அவனருளால் அகலாச் சித்தமலம்
அறுத்து உலகில் தீமை நன்மை செயினும்
வாய்த்த கதிரவன் செயல்போல் இசைந்திசையா தொழுகும்
வண்மையரே மெய்ஞ்ஞான உண்மை நிலையினரே.

என்றும், சிவானந்தமாலை

பூசனையும் வாசனையும் புத்தகமும் சாத்திரமும்
வாசகமா மந்திரமும் தந்திரமும் — தேசும்
இறக்கின்ற சிந்தனையும் எல்லாம் பொருளை
மறப்பென்று மாறா மதி.

என்றும, ஒழிவில் ஒடுக்கம்

கிரியை கிளைத்துவந்து கேட்டவர்க்குச் சும்மா
இரியச் சுகம்விளைத்த சீமான் — குருவன்றிச்
சற்றே பதைப்பைத் தரினும் சகம்படைக்கக்
கற்றானும் காலனுமாம் காண்.

அன்றியும்,

> சுகாதீதம் வேண்டித் தொழில்செய்வோம் என்றால்
> நகாரோ துயில்வார் நடந்தோ—விகாரமனச்
> சாத்திரமும் பூசைச் சமாதிகளும் சார்போதக்
> கோத்திரங்காண் மாயக் குழாம்.

என்றும், வள்ளல் வாக்கு

> வார்த்தையால் அர்ச்சனையால் மந்திரத்தால் பாவகத்தால்
> சாத்திரத்தால் தந்திரத்தால் தர்க்கததால்—ஊத்தையுடல்
> உற்பவமும் ஓயாதுஇங்கு உன்றனை மாணவக
> தற்பரமும் கிட்டாது தான்.

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க. (59)

வாதனைகளெல்லாம் நீங்கிய மாணாக்கனுக்குச் சமாதி கூடுதற்கு ஆசனம் மேற்கூறுகின்றார்.

60. ஒட்டற முத்தித் தடையாய் உளவெலாம்
விட்டனையேலினி உந்தீபற
மேவொண் சுகாசனத்து உந்தீபற.

என்பது. முத்திவிலக்கென்று இங்ஙனம் கூறப்படும் சகல வாசனையும் மாசற ஒருங்கே நீத்தனையாயின் மேற்சமாதி கூடுதற்கு அனுகூலமாகியதுயாதொரு சுகாசனம் அவ்வாசனத்தைப் பொருந்துக என்றவாறு.

இதற்கு உதாரணம் : பகவற்கீதை

> தலையும் கழுத்தும் உடம்பும்இவை
> செவ்வே தளரா தேஇருக்கும்
> நிலையில் இருந்து கண்களைத்தன்
> மூக்கின் நுனிமே லேநிறுத்தி
> அலையும் கடல்போல் காமமும்மெய்ப்
> பயமும் தன்னை விட்டகல
> உலையும் மனம்உள் ளடங்களனை
> உணர்ந்தே இருக்குமது யோகம்.

என்றும், பிரமகீதை

தக்க ஞானத்தைத் தான்பெறற் பொருட்டுத்
தனியிடந்தனை யடைந்திதய
துக்கம் மேவாமல் சுகாதனத்திருந்து
தோள்தலை கழுத்து உடம்பு இவைநேர்
ஒக்குமாறு இருத்திப் பூதிகொண்டுஇந்த
உடம்பை உத்தூளனம் பண்ணி
மிக்கவாய்வரும் இந்தியங்களை எல்லாம்
விடயமேல் எழாவகை மீட்டு.

என்றும், அமுதசாரம்

செவ்வே யுடலும் கழுத்தும் சிரமும்உற
எவ்வா தனத்தே இருந்தெவர்க்கும்—கைவந்தால்
வாதம் முதல்நோய் நலியா மதியுடையோர்
ஆதனம் என்பது அது.

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (60)

மேல் இச்செய்யுள் தொடங்கி உண்மை நிட்டை கூறுகின்றார்.

61. வாங்கிப் பொறியைந்துள் நின்ற மனம்தன்னை
நீங்கா தகத்திருத் துந்தீபற
நினைவு மெழாமலென் றுந்தீபற.

என்பது, ஐம்பொறிகளோடு கூடிற் சத்தாதி விடயங்களைக் கவரா நிற்கும் மனத்தினை அவற்றினை விட உள்ளே வாங்கிப் பின்பு அவற்றின் வழி போகாமல் நெஞ்சிலே வைத்து அவ்விடய வாசனைகளும் எழாதபடி அடக்க வேண்டும் என்றவாறு.

இதற்கு உதாரணம் : தேவாரம்

"பொறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை
நெறிப்ப டுத்து நினைத்தவர் சிந்தையுள்
அறிப்பு றும்அமு தாயவனே கம்பங்
குறிப்பி னுற்சென்று கூடித் தொழுதுமே.

என்றும், திருவாய்மொழி

"புலனைந்து மேயும் பொறியைந்து நீங்கி
நலமந்த மில்லதோர் நாடு புகுவீர்
அலமந்து வீய வசுரரைச் செற்றான்
பலமுந்து சீரிற் படிமினோ வாதே."

என்றும், பகவத்கீதை

"வாங்கி யைம்பொறி நின்ற மனந்தனை
நீங்கி டாவகை நெஞ்சுள் இருத்தியே
தீங்கி யாவையும் சிந்தை செயாவணம்
பாங்கி யாதது வேபயில் வாயரோ."

என்றும், ஞானவாசிட்டம்

"மனமணி பேத சேற்றின் மறைந்தொரு வருக்குந் தோன்றா
கனமுற விவேக நீரால் கழுவினாற் சித்தி காட்டும்
வினவுறு விவேக வன்பான் மெய்ம்மையை மதியாற் கண்டு
சினமுறு பொறியை வென்று தீர்வரும் பிறவி தீர்வாய்."

என்றும், பிரபுலிங்க லீலை

"இந்திய மோரொன் றாவிட்டிடின் மற்றை யொன்றுசாரு
முந்திய மனமழிப்ப முற்றும்போ மணிய பாம்பின்
ஐந்தலை களிலுளொன்றை யரிந்திடின் மற்றொன் றாலம்
சிந்திடு மிடறரிந்தால் தீர்ந்திடும் ஒருங்கு மாதோ."

என்றும், சிவானந்தமாலை

"பூதம் சுழலும் பொறிபுலனந் தக்கரணம்
போதம் கழித்துநாள் போக்காதே—போதச்
சிறையா நிறைவகலச் சின்மயமே யத்தே
நிறையா நிறைவாகி நில்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றாற் காண்க. (61)

62. பதைத்தெழா துள்ளம் புதைப்பாய் பதைக்கில்
வதைப்பரயாங் கங்கேயென் றுந்தீபற
மாயு மனப்பே யென்றுந்தீபற.

என்பது, சித்தத்தைச் சற்றும் அசையாத வண்ணம் அடக்கக்
கடவாய். அங்ஙனம் அடங்காது அசைந்து ஒரு பொருளைப் பற்று

மாயின், பற்று முதிர்ந்து நிச்சயிப்பதற்கு முன் விவேகத்தால் உடனே அழித்து முன்னின்ற நிலையே நிற்கக்கடவாய்; அப்பொழுது அலகை போல் உழலாநிற்கிற மனம் இறந்திடும், என்றவாறு.

இதற்கு உதாரணம், தேவிகாலோத்தரம்

" பற்றிறுற் சலிக்கு முள்ளம் பற்றுமற் பண்ணிக்கொள்க
நிற்றலின் றெனினும் தத்த நிலையினி னிறுத்திக்கொண்டால்
பெற்றன மென்று பேணிப் பின்னைப்பே ராமற்காக்கு
நற்றவ ரன்றி இந்த வுலகினி னல்லார் யாரே."

என்றும், ஞானவாசிட்டம்

" எந்த வெந்த வாதனைகளிதயத் தெழுந்த வவைவெல்லாம்
அந்த வந்த விடத்தழிக்கி னதுவே மாயைக் கழிவாகு
முந்து போக மோகமென மொழியு மிருவாதனை விட்டு
வந்த பாவா பாவமற மாற்றி விகற்ப மறமகிழ்வாய்."

அன்றியும்,

" எங்கே யெங்கே மனமோடி
யின்னையோ ரென்ன வீழ்ந்தழுந்தும்
அங்கே யங்கே நின்றெழுப்பி
அகண்ட அறிவின் அடைவித்தான்
சங்கே தமதா லிவ்வாறு
சாதித் துளமா மதகரியை
வெங்கே தமறத் தனைத்தெல்லா
விசாரத் தாலும் விடணைவாம்."

என்றும் வரும், மற்றும் வருவனவற்றுற் காண்க. (62)

63. அசைவறச் சித்த மடங்குமேற் பின்னர்
அசையாமற் காத்திடென் றுந்தீபற
அறிவால் வருந்தியு முந்தீபற.

என்பது, அசைவொழியாத சித்தம் யாதொரு காலத்து அசைவொழிந்து அடங்குமாயின் பின்னர் அசையாதபடி அதன்கண் அசைவு பிறப்பித்தற்கு உரியன எவையேனும் அவற்றை அறிவினது வீரப்பாட்டால் அக்கணமே நீக்கித் திடசித்தம் பண்ணிக்கொள் என்றவாறு.

இதற்கு உதாரணம், திருவள்ளுவர்

" எண்ணிய எண்ணியாங் கெய்துப ; எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்."

அன்றியும்,

" துன்ப முறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை."

என்றும், தேவிகாலோத்தரம்

" ஆராத சித்த மியா தோர்காலத்தில் அடங்கு மாறைல்
பேராமல் வருந்திக் காத்துப் பின்னைச்சிந் தனைகள் சென்று
சாராமல் வல்ல வாறு தடுத்துச் சார்வான வெல்லாம்
சேராமன் மயக்கம் நீக்கித் திரமாகச் செய்துகொள்வான்."

என்றும், ஞானவாசிட்டம்

" வருந்தி முயன்று மனந்தன்னை
மாற்றி யில்லை யுண்டென்று(து)
இருந்த பதத்தி லிருந்திடுவாய்
இடர்தீர் செல்வம் இடரின்றிப்
பொருந்தல் வேண்டு மனம்வென்றாற்
புவன, மூன்றும் துரும்பாகும்
திருந்த வினிதென் றனவெல்லாம்
தீதாய்த் தோன்றின் மனமாளும்.

என்றும், நாலடி நானூறு

" ஊக்கித்தாங் கொண்ட விரதங்க ளுள்ளுடையத்
தாக்கரும் துன்பங்க டாந்தலை வந்தக்கால்
நீக்கி நிறூஉ முரவோரே நல்லொழுக்கங்
காக்கும் திருவத் தவர்."

என்றும், அருட்பிரகாசம்

" கடைதரு தீப்புகை கால்வருந்
தங்கொடு கைநெகிழ்ந்து
விடினவிந் தாக்க வொறுத்துயர்
எய்தலின் வெம்பொறிவாய்ப்

படர்தரு சித்த மொருகால்
அடங்கிற் பிணைப்படராத்
தடைசெயல் வேண்டும் படர்ந்தால்
எவர்பின் தடுப்பவரே."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (63)

64. ஆங்கறி யாமையும் சாரா தறிவொடும்
தூங்குவாய் நாளுமென் றுந்தீபற
தோன்றும் பரம்பொரு ளுந்தீபற.

என்பது, விகற்பவுணர்வாகிய சித்தசலன மற்றிருந்துள்ள அவ்விடத்து அறியாமையாகிய கேவலமும் பொருந்தாமல் உன்னுடைய சுபாவ அறிவொடுங்கூடி இரவும் பகலும் இடைவிடாது சாதகம் செய்வாயாகில் அங்ஙனம் உனக்கு மேலாகிய பரம்பொருளே தோன்றும், என்றவாறு.

இதற்கு உதாரணம், திருமந்திரம்

"அறிவறி யாமை யிரண்டு மகற்றிச்
செறியறி வாயெங்கும் நின்ற சிவனைப்
பிறிவறி யாத பிரானென்று பேணுங்
குறியறி யாதவர் கோனறி யாரே."

அன்றியும்,

"பொங்கு மிருணீக்கும் புண்ணியக் கூத்தனை
யெங்குமாய் நின்றாடு மேகம்பக் கூத்தனைக்
கங்குல் பகலினும் காணாத கூத்தனை
யிங்கெ னிடமாக யான்கண்ட வாறே.

என்றும், பட்டினத்துப் பிள்ளையார் பாடல்

"சினந்தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று
நினைந்தது மற்று நினையாததுமற்று நின்மலமாய்த்
தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற
அனந்தலி லென்றிருப் பேனந்த னேகயி லாயத்தானே."

என்றும், தேவிகாலோத்தரம்

"நித்திரையும் பராக்கினையு நீக்கிச் சித்த
மொருநிலையு நீங்காம னிறுத்திக் கொண்டால்

சித்தமொரு பொருளினையும் சேரா தாக்கிச்
சேரும்வகை சேராமற் செல்ல நின்று
மத்தமன முதலாய வவத்தை யொன்று
மருவாத வகைநிற்கு மதுவே யாகு
முத்திநெறி யென்று மறையிடை விடாது
முறையிடவு மாகமங்கண் மொழியுங் காணே."

என்றும், திருவுந்தியார்

" இரவுபக லில்லா இன்பவெளி யூடே
விரவி விரவிநின் றுந்திபற
விரைய விரையநின் றுந்திபற."

என்றும், சிவஞானசித்தியார்

" அறியாமை அறிவகற்றி யறிவி னுள்ளே
யறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்
பிறியாத சிவன்றானே பிறிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெலாந் தானாய்த் தோன்றி
நெறியாலே அவையெல்லா மல்ல வாகி
நின்றென்றும் தோன்றிடுவனி ராதார னாயே."

என்றும், திருவம்மானை

" உற்ற மறப்புநினைப் பற்றேன் காணம்மானை
யோவாத சித்தத்தே யொத்தேன் காணம்மானை."

என்றும், ஒழிவிலொடுக்கம்

" அறிவா யிரீர்மயக்க மாகா தசையில்
விறிசாய் விடாதோ விகற்பம்—பிறியாத்
தராசுநிலை போலே சமாதிவரின் ஞான
விராசனுமக் கொப்பா ரெவர்."

என்றும், மோகவதைப்பரணி

" ஆங்குணரா மையுமுணர்வு மாகியகோள ளறவிருந்து
தூங்கினர்காண் சுகமடைவார் சும்மேலோ சும்முலக்காய்,"

அன்றியும்,

"நீங்குதலில் லாவறிவே நிகழ்ந்தக்கால் விழிப்பதுவும்
துாங்குவது முண்டாமோ சும்மேலோ சும்முலக்கர்ய்."

அன்றியும்,

"ஒழித்தே யுள்ள முணர்வுடைய வொழியா
வொருவன் வருமளவும்
விழித்தே யுறங்கும் விளங்கிழையீர்
மேவுங்கபாடந் திறமினோ."

என்றும் வரும். மற்றும் வருவன வற்றுற் காண்க. (64)

65. அந்தப் பரத்தோ டிரண்டற் றயிக்கமா
மந்தநன் னிட்டையே யுந்திபற
அத்து விதவிடென் றுந்திபற.

என்பது, அங்ஙனம் சுத்தாவத்தையிற்றோன்றிய பரத்துடன் காண்பானும் காட்சியும் இன்றி வேறறக் கலந்து நிற்கும் அந்தச் சிறப்பினையுடைய நிஷ்டையே அத்துவிதமாகிய முத்தியெனப்படும் என்றவாறு.

இதற்கு உதாரணம், திருமந்திரம்

"குறியாக் குறியினிற் கூடாத கூட்டத்
தறியா அறிவில் உகந்தேக சித்த
நெறியாம் பரானந்தி நீடரு டோன்றிச்
செறியாச் செறிவைச் சிவமென லாமே."

அன்றியும்,

"நித்தம் பரனோ டுயிருற்று நீண்மனஞ்
சத்த முதலைந்து தத்துவம் தானீங்கிச்
சுத்த மசுத்தந் தொடரா வகைநினைந்(து)
அத்த னவன்பா லடைதல்சித் தாந்தமே."

என்றும், கந்தரலங்காரம்

"போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவு முடிவுமில் லாவொன்று வந்து வந்து

தாக்கு மனோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
ஆக்கு மறுமுக வாசொல்லொணா தீந்த வானந்தமே.''

என்றும், கந்தரனுபூதி

"ஆறா வமுதே யயில்வே லரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானா கியவென் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே.''

அன்றியும்;

"வானோ புனல்பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவினான் மறையோ
யானோ மனமோ வெனையாண்ட விடந்
தானோ பொருளா வதுசண் முகனே.''

என்றும், திருவாய்மொழி

"நன்றாய் ஞானங் கடந்துபோய்
நல்லிந்திரிய மெல்லாமீர்த்
தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா
ழுலப்பிலதனை யுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்பதுன்பங்கள் செற்றுக்
களைந்து பசையற்றா
லன்றே யப்போதே வீடதுவே
வீடு வீடாமே.''

என்றும், பகவற்கீதை

"யாதொன்றிந்தப் புலனறியா வள்ளி
லின்ப மாயிருக்கும்
யாதொன்றினைச் சென்றடைந் தோர்கள்
பின்னையதனி னிரண்டாகார்
யாதொன்றினைப் பெற்றவரிதனின் மிக்க
தொப்புண் டென்னார்கள்
யாதென்றிந்த வறிவிற்கே யறிவாய்
நிற்கு மதினின்றோர்.''

என்றும், பிரமகீதை

" சுழுத்தியத னிற்றுயர் துவக்குமூட றன்னின்
றெழுப்பியுள தன்வடிவி னுலிறையை யெய்துற்
றழுத்தமுற யாவனது வாகுமவ னெங்கு
முழுத்தியுள தற்பரம தாகிமுடி வுற்றான்."

என்றும், பிரபுலிங்கலீலை

" ஞேய ஞான ஞாதிருவெனு மிவைபல நிற்கு
மாயின் வேறறு முத்தி யன்றதுசக மாமென்
றேயுமா றிதுவதுவெனும் சுட்டிலா வியல்பை
மாயை மாறிய தேவிபா லருளினன் வள்ளல்."

என்றும், ஞானவாசிட்டம்

" முடிவுகன வஞ்ஞான மில்லாநீ
டுயில்துவா மும்மை யாகு
மடர்தருஞா திருஞான ஞேயமெழுந்
தொடுங்குமிட மதுவே யாகும்
திடவிசும்பன் றுயிருந்தும் விசும்பான
நிலையதுவாம் சித்தம் புத்தி
படர்மனம் போய்த் தாவாவுள் ளறிவுபெறி
லொப்பாமப் பரம ரூபம்."

என்றும், சிவப்பிரகாசம்

" பொறிப்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்
சொற்பெறு மதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்ற
சிற்பர மதனு ளுள்ளச் செயலுறுத் திடவு திக்குந்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே."

என்றும், சிவநெறிப் பிரகாசம்

" ஞானமுடன் ஞேய ஞாதிருவென்னு மூன்று
நாடாமற் றனதுவாய் நண்ணியிட றனே
ஊனமிலா வுன்மனைக்கு மேலான முத்தி
யுற்றதுநின் மலதுரியா தீதமென வுரைப்பர்
ஆனவிதே சுத்தமா முத்தி யாகு
மன்றிவே றுரைக்குமுத்தி யவைக ளெல்லா

ஈனமா முத்தியது தன்னை யெல்லா
மியம்புவா மறிந்ததனை யிசையா வாறே.''

என்றும், திருவம்மானை

"சத்திய மானது சத்தே காணம்மானை
தற்போதம் போனவிடந் தற்பரமே யம்மானை.''

என்றும், சிவானுபூதி விளக்கம்

"எரிசுத்தங் கொண்ட விரும்புபோ லெங்கும்
பரிசுத்த மான பராபரமே யானதே.''

என்றும், நெஞ்சொடு மகிழ்தல்

"நீரொடுதண் ணுலிவிண்டு நீரான வாறேபோ
லூரொடுபே ரில்லாதே டொன்றினுய் நெஞ்சமே.''

என்றும், சிவானந்தமாலை

"மித்தையுடற் கட்டறுத்து மெய்யருளாய் மெய்யொழிக்குந்
தத்துவமும் கேவலமும் சார்வகற்றிச்—சுத்தத்
தனியாகி தானும்போய்த் தற்பரமாய் விட்டாற்
செனியா னிதுசத் தியம்''

என்றும் வரும், மற்றும் வருவன வற்றுற் காண்க. (65)

**66.** எம்மதத் தோரெவ் வகைநிட்டை சொல்லினும்
சம்மத மேயெமக் குந்திபற
தற்போத மாய்க்குமே லுந்திபற.

என்பது, இங்ஙனம் கூறியது ஒழிந்து பின்னும் நானுவிதமாக முத்தி நிஷ்டை கூறுவாரும் உளர். யாதொரு சமயி கூறிய யாதொரு நிஷ்டை யேனும் ஆத்மாவினது தற்போதத்தைக் கெடுத்துச் சிவத்தோடு இரண்டறக் கலப்பிக்குமாயின் அந்நிஷ்டைகளும் எமக்கு அவிரோதமே என்றவாறு.

இதற்கு உதாரணம், சிவானந்தமாலை

"நாலாய தற்பதமு நல்ல வவுத்திரியு
மாலாய தந்திரமு மந்திரமு—மேலாய
சிற்போத வுண்மைத் தெரிசனமு மெல்லாமுன்
தற்போத நட்டமெழத் தான்.

என்றும், வீராகமம்

" வேத வாகமமும் தீக்கை விதிகளும் சரியை யாதி
மேதகு பாத நான்கு மிதுபத முத்தி நான்கும்
தீதின்மா ணவக மற்றும் செப்பிய வனைத்து முன்றற்
போத நிருக நாதன் புந்திசெய் தமைத்த வாமே."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (66)

67. நானற்ற போதத்தே நானுன முத்தியை
நானெங்ங னஞ்சொல்வ துந்தீபற
நான்மறைக் கெட்டாதென் றுந்தீபற.

என்பது, காண்பானும் காட்சியும் இறந்து அத்துவிதமாகிய பரசுகாதீதத்தை இவ்வண்ணம் இருந்ததென்று இங்ஙனம் கூறுவது எங்ஙனம் அந்நிலை வேதாதீதமாதலின் என்றவாறு.

இதற்கு உதாரணம், திருமந்திரம்

" முகத்துக்கண் கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்துக்கண் கொண்டு பார்ப்பதே யானந்த
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்முற் சொல்லுமா றெங்ஙனே."

என்றும், தேவாரம்

" மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி மயானத்தான்
வார்சடையான் என்னி னல்லான்
ஒப்புடையன் அல்லன் ஒருவனல்லன் ஒரூரன்
அல்லனோ ருவம னில்லி
யப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே
கண்ணாகக் காணி னல்லால்
இப்படியன் இந்நிறந்த னிவ்வண்ணத்த னிவனிறைவ
னென்றெழுதிக் காட்டொ ணாதே."

என்றும், திருவாய்மொழி

" நின்றவொன்றையுணர்ந்தேனுக்கதனுணோர்மையதுவிதுவென்
றென்றுமொருவர்க் குணரலாகா துணர்ந்து மேலுங்காண்பரிது
சென்று சென்று பரம்பரமா யாதுமின்றித் தேய்ந்தற்று
நன்று தீதென் றறிவரிதாய் நன்றாய் ஞானங் கடந்ததே.

என்றும், பிரமகீதை

" ஒழிவிலாப் பரமயோகிய ரனுபவ முள்ளவாறு
ரைத்திட வெனக்கோர்
வழிபெறேன் நெடுமான் மகேசன்மா முனிவர்
வானவ ருரைத்திட மாட்டார்
விழிமிகுஞ் சிவஞல் விஞ்சையாஞ் சிவையால்
விளம்பவும் படாதது விளம்ப
மொழியெல் லாம்வந்து மோன பாவத்தே
முடியுமந் நிலமிதே முடிவு."

என்றும், நித்தியானந்த சரிதம்

" மோகித்த காமத்தின்கண் முயற்சியிற் சுகமுந் தண்ணீர்
தாகித்த தாகத்தையுந் தாகித்தோ னறிவ தல்லால்
ஏகத்த பொருள தாகி இடைவிடா தமுத மூறும்
போகத்தை நுகர்வ தல்லாற் போதத்தாற் புகலலாமோ."

என்றும், சிவானந்தமாலை

" சொல்லுவான் சுட்டுவான் போனசுகா தீதத்தைச்
சொல்லுவா யென்றுலென் சொல்லுகேன்—புல்லிவிடா
அண்மைக்குஞ் சேய்மைக்கு மப்பாலா மத்துவித
வுண்மைக்கோ ருத்தர முண்டோ."

என்றும், திருவம்மானை

" உண்டுதேக் கிட்டெங்கும் ஒன்றுனே னம்மானை
உண்மைக்கோர் உத்தரந்தான் இல்லைகா ணம்மானை.'

என்றும், ஒழிவிலொடுக்கம்

" சத்தாதி தத்துவம்போய்த் தானுமெதி ருங்கழன்றுற்
சித்தாந்த வேதாந்தச் செம்மையிலே—முத்தி
அநிர்வசன மின்ப மதீதமெனி லாங்கே
பினமிடுதல் கன்மம் பிளாய்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (67)

68. பெத்தர்க் கொருசிவ மின்மையிற் பேரருண்
முத்தர்க் குலகுமின் றுந்தீபற
முழுதுஞ் சிவமாத லுந்தீபற.

என்பது, பெத்தராயினோர்க்கு உலகமே யன்றிச் சிவந் தோன்றாது; அதுபோலும் பேரருளினை நீங்காத முத்தராயினோர்க்குச் சிவமேயன்றி உலகம் தோன்றாது ; அச்சிவத்தை யன்றி வேறொரு பொருளுமின்மையால் என்றவாறு.

இதற்குப் பிரமாணம் பிரமகீதை

" தன்னின் வேறிலா மையிற்பர முத்தியைத்
தனதுபுத் தியினாலே
அன்னி யங்களாய்த் தோற்றுமா பாசரு
பங்களி லறிகின்றான்.
முன்ன மெப்படி மூடமாந் தசையிற்றன்
மோகத்தா லெலாம்பந்தம்
என்ன வுற்றனன் முத்தியு மப்பரி
சிருக்கும தியல் போகம்."

என்றும், சிவப்பிரகாசம்

" அகம்புற மெனவிரண் டா லருச்சனை புரியு மித்தச்
சகந்தனி லிரண்டுமின்றித் தமோமய மாகி யெல்லா
நிகழ்ந்திட மகிழ்ந்துவாழு நீர்மையார்போல ஞானந்
திகழ்ந்தகம் புறமென்றத செம்மையோர் நன்மையோரே."

என்றும், அறிவானந்த சித்தியார்

" பெத்தனைச் சேதிக்க வென்றே மொழியவிப் பேருலகம்
இத்தனையும் மிறுமென் றனக் கில்லையெனு மதுபோன்(று)
அத்தன்சொ லொன்றி லெனைமாயச் சேதிக்க வன்றெனக்குச்
சித்த மயலுல கெல்லா மிறந்ததென் செப்புவதே."

என்றும், சிவானந்தமாலை

" நின்செயலற் றெப்போது நம்முடனே நிற்குநிலை
யுன்செயலற் றோதியிட வுற்றுக்கே—ளென் சுவடங்
கொன்றுமற வொன்றாகி யொத்துடனான் பந்தத்தி
னின்றதுபோன் முத்தியிலு நில்."

• என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (68)

69. எல்லாஞ் சிவமேயென் றெண்ணினு நின்போதம்
அல்லாலஃ துண்மையன் றுந்திபற
ஆங்கது நீங்கிடென் றுந்திபற.

என்பது, உள இல என்பன வெல்லாப் பொருள்களும் சிவமே யெனக் காணுமிடத்தும் காண்பதும் நின்போதமாதலின் அதுவும் உண்மையன்று ; எவ்விதத் தேனும் நின்போதம் எழாமல் அடக்கு தலே உண்மை நிட்டை என்றவாறு.

ஆங்கதும் என்ற உம்மையால் நானாவிதமாகி யெழா நிற்கும் ஆத்ம போதமெல்லாம் அடக்குக வென்பதாயிற்று.

இதற்கு உதாரணம், சிவானந்தமாலை

" பற்றிவிழப் பாயகலும் பார்க்கிலவ னுண்டாகு
முற்றுணரில் வேருரு மொன்றுமெனின்—முற்றும்
பிறியாப் பொருள்பிறியும் பேசுமுரைக் கெட்டாக்
குறியாக் குறியாங் குறி."

அன்றியும்,

" கண்ட வறிவு கடமே யெனிலதமங்
கண்டழித்துக் காணுமை காணுமது—கொண்டுணரின்
மத்திமமே யந்தவகுப் பொன்றுங் காணுத
துத்தமமா மென்றே யுணர்."

என்றும், ஒழிவிலொடுக்கம்

" கட்டிய நாண்விட்டாலுங் கந்தகலாக் கன்றுகளைத்
தட்டிப் புறப்படுத்துந் தன்மைபோ—லொட்டொழித்து
நின்ருற்போ னீசிவமாய் நில்லென்று நீக்கமறுத்
தொன்ருக்கி லொன்றிரண் டாகும்."

அன்றியும்,

" குரங்கை நினையா திருமென்று கூறத்
திரும்பி யதுவே தியானம்—வருங்கதைபோல்
நீசிவமாய் நில்லென்ருல் நீங்கியதுவா நினைந்து
மாய்வை யதுவன்ரே மலம்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (69)

70. பாவனை தீதநினை வின்மை யுண்டெனிற்
பாவனை யாகுமென் றுந்தீபற
பன்னூற் கருத்துமீ துந்தீபற.

என்பது, பாவனைக்கு அதீதமாகிய உண்மை நிட்டையாதென்னில் உன்னுடைய நினைவிறந்து நின்றவிடம். அஃது ஒரு சற்றுண்டேனும் அதுவே பாவனை என்று சொல்லப்படும், எல்லா நூல்களினது துணிவும் இதுவே என்றவாறு.

இதற்குப் பிரமாணம், சிவப்பிரகாசம்

"பாவிக்கின் மனுதி வேண்டும் பயனிலை கரண நீத்துப்
பாவிப்ப னென்னி லென்னை பழுதுள பாவ கத்தாற்
பாவிக்க வொண்ணு தென்று பாவிப்ப னென்னி னீயென்
பாவிக்க வேண்டா ஆண்ட பரனருள் பற்றி னோர்க்கே."

என்றும், ஒழிவிலொடுக்கம்

"[1]குறங்கு குத்திக்கொண்டு குரேக்கை கத்திக்கூட்டை
மறந்தழைத்தாற் றாக்கம் வருமோ—வெறுங்கெடுவீர்
தன்னை யழித்தெழுந்த சச்சிதா னந்தத்தை
யுன்னி லொழித்துவிடா தோ."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க. (70)

71. ஒன்றிய கேவல மென்றே யுனத்தகுந்
துன்றிரு ளொன்றிலா துந்தீபற
சுத்த மிதாயதென் றுந்தீபற.

என்பது, சகல கரணங்களும், ஆத்ம போதமும் அடங்கினவிடத்துத் தோன்றா நிற்கும் சுத்தாவத்தையும் உயிர்களுக்குச் சகசமாயுள்ள கேவலாவத்தை யென்றே எண்ணப்படும். அக்கேவலத்திற்கு உண்டாகிய பேரிருளொன்றும் இன்மையின் இது சுத்தாவத்தை யென்னும் பேருடைத்து என்றவாறு.

இதற்குப் பிரமாணம், கந்தரலங்காரம்

"வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித்தவா பஞ்ச பூதமுமற்

---

1. தொடை.

றுரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே.''

என்றும், மோகவதைப்பரணி

" யாதுமா யறிவிறந்த விருளொன்று மிலதே
யாதுமா யறிவிறந்த வொளியொன்று முளதே.''

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

வாங்கிப் பொறியைந்து மென்ற செய்யுள் தொடங்கி இச் செய்யுள் காறும் உண்மை நிட்டை கூறினுரெனக் கொள்க. (71)

இங்ஙனம் கூறிய உண்மை நிட்டைக் குளிருந்தும் துவித பாவனை தோன்றுமாகில் அஃது ஒழிந்து முன்னிலை கூடுதற்கு மேலும் ஒருபாய நிட்டை கூறுகின்றுர்.

72. பாவனு தீதம் பதியா விடத்தேக
பாவனை பற்றிநின் றுந்திபற
பழுத்தா லொழித்திடென் றுந்திபற

என்பது, முற்கூறிய சகசநிட்டை பதியாவிடில் அங்ஙனம் தோன்றிய நினைவு அநேக பாவனைகளைப் பற்றி மயங்காமல் எல்லாப் பாவனைகளும் தன்னுள் அடங்குவதாகிய ஒரேக பாவனையைப் பற்றி நின்று அப்பாவனை முதிர்ந்து பற்றெரு பாவனையும் தோன்றுத விடத்து அதனையும் மெள்ள மெள்ள நீக்கவே முன்கூறிய உண்மை நிட்டை கூடும் என்றவாறு.

பழுத்தா லொழித்திடென்றது மேற்கூறுவனவாகிய உபாய நிட்டைகளுக்கும் ஒக்குமெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், திருவாசகம்

" அளவிலாப் பாவகத்தா லமுக்குண்டிங் கறிவின்றி
விளைவொன்று மறியாதே வெறுவியனுய்க் கிடப்பேனுக்
களவிலா வானந்த மளித்தென்னை யாண்டானைக்
களவிலா வனவருந் தொழுந்தில்லை கண்டேனே.''

என்றும், ஞானவாசிட்டம்

" பொய்ய தாமுயற் கொம்பினைப் பற்றவும்
போக்கவு நினைப்பாரார்

ஐயனேபர போதபூ ரணத்திலே
யயலொன்று வருமாறென்
பொய்ய தாகிய வனேகபா வனையினைப்
பொருந்தல்புன் பிறப்பாகும்
ஐய மின்றிய வேகபா வனையினி
லழுந்துதல் பவந்தீர்தல்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க,

பழுத்தா லொழித்திடென்றதற்குப் பிரமாணம் திருவள்ளுவர்

"சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்."

என்றும், சிவதருமோத்தரம்

"நீங்கின ரிந்த வுண்மை நிலையினை நெஞ்சந் தன்னிற்
ருங்குக சகளந் தன்னைச் சங்கரன் றன்னை யுன்னி
நீங்குக சகளந் தன்னை முன்னியி னிலையி னிடித்
தூங்குக திரியிற் பின்னுஞ் சகளமா தரிக்கை சூழ்ந்தே."

என்றும், திருக்களிற்றுப்படியார்

"பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து
பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற—பற்றதனிற்
பற்றுவிடி லந்நிலையே தானே பரமாகும்
அற்றமிது சொன்னே னறி."

அன்றியும்,

"சார்புணர்ந்து சார்புகெட வொழுகி னென்றமையால்
சார்புணர்தல் தானே தியானமுமாஞ்—சார்பு
கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (72)

ஏகபாவனை இது என்று மேற்கூறுகின்ருர்.

73. பாராதி யெட்டுமப் பாலுமொர் பானுமா
யோர்சோதி யேநின்ற துந்தீபற
உன்னுவே தில்லையென் றுந்தீபற.

என்பது, பிருதிவியாதி அட்டமூர்த்தமும் அவற்றினுக்குப் பரமாகியுள்ளனவும் பின்னும் வாக்கு மனத்திற்கு எட்டுவனவும் எட்டாதனவுமாய் விரிந்து நிற்பது ஒரு சோதியே வேறொரு பொருளும் இல்லையென்று பாவனை பண்ணுவாய் என்றவாறு.

இதற்குப் பிரமாணம் : திருமந்திரம்

"தானே கடன்மலை யாதியு மாய்நிற்குந்
தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே யுலகிற் றலைவனு மாமே."

அன்றியும்,

"எங்குந் திருமேனி எங்குஞ் சிவசக்தி
எங்குஞ் சிதம்பர மெங்குந் திருநட்டம்
எங்குஞ் சிவமாய் இருத்தலால் எங்கெங்குந்
தங்குஞ் சிவனருள் தன்விளை யாட்டே."

என்றும், திருக்கடைக்காப்பு

"பட்டிசைந்த அல்குலாள் பாவையாளோர் பாகமா
வொட்டிசைந்த தன்றியு முச்சியாளொ ருத்தியாக்
[1]கொட்டிசைந்த வாடலாய் கூடலால வாயிலா
யெட்டிசைந்த மூர்த்தியா யிருந்தவாறி தென்னையே."

அன்றியும்,

"அரிய காட்சிய ராய்த்த மதங்கைசேர்
எரிய ரேறுகந் தேறுவர் கண்டமுங்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே."

என்றும், தேவாரம்

"அருந்தவர்க டொழுதேத்தும் அப்பன் தன்னை
அமரர்கடம் பெருமானை அரனை மூவா

1. மத்தளத்தின் முழக்கம்

மருந்தமரர்க் கருள்புரிந்த மைந்தன் தன்னை
மறிகடலும் குலவரையு மண்ணும் விண்ணும்
திருந்தொளிய தாரகையும் திசைக ளெட்டும்
திரிசுடர்க ளோரிரண்டும் பிறவு மாய
பெருந்தகையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.''

அன்றியும்,

'' மாலாகி நான்முகனாய் மாபூதமாய் மருக்கமா
யருக்கமாய் மகிழ்வு மாகிப்
பாலாகி யெண்டிசைக்கு மெல்லை யாகிப்
பரப்பாகிப் பரலோகந் தானே யாகிப்
பூலோக புவிலோக சுவலோ கமாய்ப்
பூதங்க ளாய்ப்புரா ணன்றானே யாகி
யேலா தனவெல்ல மேல்விப் பானு
யெழுஞ்சுடரா யெம்மடிக ணின்ற வாறே.''

என்றும், திருப்பாட்டு

'' ஊனாயுயி ரானாயு டலானாயுல கானாய்
வானாய்நில னாய்கட லானாய்மலை யானாய்
தேனார்பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூரட்டுறை
ஆனாயுனக் காளாயினி யல்லேனென லாமே.'' [யுள்

அன்றியும்,

'' கார்க்குன்ற மழையாய்ப் பொழிவானைக்
கலைக்கெலாம்பொரு ளாயுடன் கூறிப்
பார்க்கின்ற வுயிர்க்குப் பரிந்தானைப்
பகலுங்கங் குலுமாகி நின்றானை
ஓர்க்கின்ற செவியைச்சுவை தன்னையுணரும்
நாவினைக் காண்கின்ற கண்ணை
ஆர்க்கின்ற கடலை மலைதன்னை
யாரூரானை மறக்கலு மாமே.''

என்றும், திருவாசகம்

" நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன்
புலனுய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்ரு
னுலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ."

அன்றியும்,

" வேதமும் வேள்வியு மாயினார்க்கு
மெய்ம்மையும் பொய்மையு மாயினார்க்கு
சோதியு மாயிரு ளாயினார்க்குத்
துன்பமுமா யின்பமா யினார்க்குப்
பாதியு மாய்முற்று மாயினார்க்குப்
பந்தமு மாய்வீடு மாயினாருக்
காதியு மந்தமு மாயினார்க்கு
ஆடப்பொற் சுண்ண மிடித்துநாமே."

என்றும், பொன்வண்ணத்தந்தாதி

" அலையார் புனலனல் ஞாயி றவனி மதியம் விண்கால்
தொலையா வுயிருடம் பாகிய சோதியைத் தொக்கு மினே
தலையாற் சுமந்துந் தடித்துங் கொடித்தே ரரக்க னென்னே
கலையா னொருவிரற் ருங்ககில் லாவிட்ட காரணமே "

என்றும், திருப்புகழ்

" அதல விதலமுத லந்தத் தலங்களென வவனி
யெனவமர ரண்டத் தகண்டமென
அகில சலதி யெனவெண் டிக்கில்
விண்டுவென வங்கி பானு
அமுத கதிர்களென வந்தத்து மந்த்ரமென வறையு
மறைகளின ருந்தத்து வங்களென
அணுவி லணுவென நிறைந்திட்டு நின்றதொர்
பரப்பிர காசம்,"

என்றும், திருவாய்மொழி

" ஏகமூர்த்தி யிருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தி
ஆகியைந்து பூதமாயிரண்டு சுடரா யருவாகி

நாகமேறி நடுக்கடலுட் குயின்ற நாராயணனேயுன்
ஆகமுற்று மகத்தடக்கி யாவியல்லன் மாய்த்ததே."

அன்றியும்,

" துன்பமும் இன்பமுமாகிய செய்வினை
யாயுலகங் களுமாய்
இன்பமில் வெந்நர காகியினிய நல்வான்
சுவர்க்கங் களுமாய்
மன்பல் லுயிர்களு மாகிப்பல பலமாய
மயக்குகளாய்
இன்புறு மிவ்விளை யாட்டுடை யானைப்பெற்றேது
மல்லலி லேனே."

என்றும், தத்துவராயர்

" மாற்றங் களுமன னும்வினை யாவையு மற்றந்தவான்
காற்றங்கி நீர்நிலன் முற்று மவற்றுட் கலந்துநின்ற
நாற்றஞ் சுவையொளி யூறோசையு நண்ணு மிவ்வுலகில்
தோற்றங் களுஞ்சொரு பானந்த நாதர் சுடர்வடிவே.

என்றும், தேவிகாலோத்தரம்

" ஆனநிலை யாவுடைய பூதங்க ளனைத்துநா
னேனையவை யாவையுள வவையுநான் றாலநுண்மை
யானவெவை யவையுமலே னெனையறியி லறிவோர்க்கு
ஞானமொன்று மென்னுருவநானே யெவ் வுயிர்க்குறவும்."

அன்றியும்,

"ஒன்றுடனும் தோய்வில்லா னெத்தார்மிக் காரில்
லானுலக மில்லான்
நின்றநினை வுக்கெட்டான் நித்தன் காணப்படான்
நெஞ்சு ணிற்பான்
பொன்று பிறப்பிலி முதலாமறிவினிட்களன்
பழையோன் பொருள்களில்லோன்
என்றுநினைந் தடிக்கடியும் பிரமமென நோக்குதலே
யியல்ப தாமே,"

என்றும், சிவதருமோத்தரம்

"சராசரத் தமலனீங்காத் தன்மைய னுதலாலே
சராசர ம்மலஞ்மேனி யெனவுணர் தக்கோர் தாமுஞ்
சராசர வுயிர்க்குத் தாயாஞ் சங்கர னுலகஞ் சார்ந்து
சராசர மொடுங்கும் போது தற்பரன் தாளுஞ் சார்வார்.'

என்றும், பகவற்கீதை

" மண்ணு நீருமெரி தீயும் வாயுமவ்
வானிஞேடு மனம் புந்தியும்
எண்ணு நீர்மைகளின் யானெனும்பதமு
என்னும் எட்டுமிவை யன்றியே
பண்ணு நீர்மைகளின் மேலதா யுலகில்
யாவையுங்கொடு பரித்துடன்
கண்ணு நீடுயிரு மாகியென் னுடையமாயை
நிற்பதுகை வேலிஞேய்."

அன்றியும்,

" யாவஞெருவ னெனை யெல்லா வுயிர்க
ளிடையு மென்னிடையே
மேவவெல்லாவுயிர்களையும் வேரு
காமே மெய்காண்பான்
தேவர்பகைமுன் செகுத்தோனே யவன்யா
தேனும் செய்திடினும்
ஆவஅவனு கின்றேன் யான்அது
நீயேதும் மையுறேல்."

என்றும், பிரமகீதை

" உலகம் யாவு முயிர்பலவு
நானே சிறிதும் வேறில்லை
அலகில் அறிவா லாய்ந்திடினு
ஆயா விடத்து மருத்தமிதே
திலக மாய மறைதுணிந்து
திகழ்ந்தும் பொருளு மிதுவென்றன்
இலகுந் தன்மை யனுபவமும்
இதிலோ ரைய முளதன்ருல்."

அன்றியும்,

" அங்கிதலை வாய்விவித மானமறை பானு
திங்கள்விழி யெண்டிசைக ளுஞ்செவிகள் வாயு
தங்குமுயிர் தன்னிதய மேசகல முங்கால்
இங்கவனி சங்கர னிருக்கும்வடி வீதால்."

என்றும், ஞானவாசிட்டம்

" திக்குங் காலமு முதலிய வசத்துறு
சிறுவடி வறத்துன்பந்
தொக்க வன்னவற் ருன்மறை யாமலே
சூக்கமாய் நொய்தாகி
மிக்க சோதியா யனைத்துமா யொன்றுமாய்
மெய்யறி வொன்றேயாந்
தக்க விந்நிலை நில்லென வுரைத்தனன்
தலைமையா முபதேசம்."

அன்றியும்,

" கிஞ்சிலாகி விரிந்துசகத் திரளாய்க் கிளைத்த விளைவயெல்லாம்
விஞ்சு பிரம மேயறிவு பிரம மிம்மே தினிபிரமம்
பஞ்ச பூதம் பிரமநாம் பிரம நமது புகைபிரமந்
தஞ்ச நட்புக்கிளை பிரம சங்கராதி நிச்சயமே."

என்றும், திருவுந்தியார்

" எட்டுக்கொண்டார்தமைத் தொட்டுக்கொண்டே நின்றார்
விட்டா ருலகமென் றுந்தீபற
வீடேவீ டாகுமென் றுந்தீபற."

அன்றியும்,

" சொல்லும் பொருள்களும் சொல்லா தனவுமங்
கல்லவு மானனென் றுந்தீபற
அம்பிகை பாகனென் றுந்தீபற."

என்றும், திருக்களிற்றுப்படியார்

" ஈருகி யங்கே முதலொன்று யிங்கிரண்டாய்
மாருத வெண்வகையாய் மற்றிவற்றின் — வேருய்

உடனு யிருக்கும் உருவுடைமை யொன்றுங்
கடனு யிருக்கின்றான் காண்."

அன்றியும்,

"அவனே அவனிமுத லாய்நின்றான் தானும்
அவனே அறிவாய்நின் றானும்—அவனேகாண்
ஆணாகிப் பெண்ணாய் அலியாகி நின்றானுங்
காணாமை நின்றானுங் கண்டு."

என்றும், சிவஞானசித்தியார்

"உலகமே யுருவமாக யோனிக ளுறுப்பதாக
இலகுபே ரிச்சாஞானக் கிரியையுட் கரணமாக
அலகிலா உயிர்ப்புலன்கட் கறிவினை யாக்கியைந்து
நலமிகு தொழில்க ளோடுநாடக நடிப்பனுதன்."

என்றும், சிவஞான தீபம்

"அத்துவா வடிவாமெம் மிறைமுடிதான் கலைகள்
ஐந்தாகும் சாந்திமுத லானநான் குரமாம்
வித்தைமுதன் மூன்றிரண்டாம் பிரதிட்டாதி யுந்தி
வியன்பாத நிவர்த்தியதா மிளிர்துவக்கக் கரங்கள்
வைத்தபுவ னங்கண்மயிர் மந்திரங்க ணெய்த்தோர்
வளந்திகழும் பதங்களருந் தசையாகு மதித்த
தத்துவங்கள் சுக்கிலமோ டத்தி நிணமூளை
சத்திகடா நேத்திரமூ வைந்தாமித் தகையே."

அன்றியும்,

"அனுக்கிரகஞ் சதாசிவன்ற னுதத்தா லுளத்தில்
அருமறைப்புச் சிந்தையினில் விந்துவினின் மகேசன்
துனித்தமனத் துருத்திரன்றன் மகாரத்தா லழிக்குந்
துழாய்முடியோன் புத்தியினின் றுகாரத்தால் அளிக்கும்
பனிப்பதும் னகாரத்தா லகங்காரம் பொருந்திப்
படைத்திடுவ னோங்காரப் படிவமுமா மதனால்
அனைத்துலகு மிலிங்கமய மாமெவையு மிதுவே
யாக்கியளித் தழித்துமறைத் தனுக்கிரகஞ் செயுமே."

என்றும், சிவானுபூதி விளக்கம்

" எட்டுருவ மென்று மிறையுருவ மென்னுமது
சிட்டா மறையும் சிவகாமமுஞ் செப்பியதே."

அன்றியும்,

" பத்துத் திசையும் பதினுலு லகும்விடத்
தத்திக் கரைபுரளும் சாகரமே யல்லவோ "

என்றும், நெஞ்சுவிடுதூது

" பாருந் திசையும் படரொளியா லேநிறைந்தான்
தூருந் தலையுமிலாத் தோன்றலான்—வேராகி
வித்தாகி வித்தின் முளையாய் மேவுதனுச்
சத்தாதி பூதங்கள் தானுகிச்—சுத்த
வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக் கப்பால்
உருபொருளாய் நின்ற ஒருவன்."

என்றும், காசிகாண்டம்

" ஐம்பெரும் பூதமாகி யவற்றுறு குணங்களாகி
ஐம்பொறி யாகியந்தக் கரணமா யறிவுமாகி
ஐம்பெருங் கருமமாகி யனைத்தினும் தோய்ந் தும்தோயா
ஐம்பெருங் கடவுளாகு மாதிநின் னடிகள் போற்றி."

அன்றியும்,

" உயிர்ப்பரு மறைக ளோவிவ்
வுலகெலாஞ் செய்ய பொற்ருள்
பயிர்ப்புறு நிலநின் சென்னி
பரமவா காயமாகும்
வியப்பறு சுழிகொ ளுந்தி
நடுவெளி யாகு மெய்யின்
மயிர்த்தொகை யனைத்து மெண்ணில்
வான்தருக் குலங்க ளாமால்."

என்றும், பெரியபுராணம்

" ஆயி னும்பெரி யாரவ ரென்பது
மேய விவ்வியல் பேயன்றி விண்முதல்

பாய பூதங்கள் பல்லுயிர் அண்டங்கள்
ஏயும் யாவு மிவர்வடி வென்றதாம்.''

என்றும், திருவம்மானை

'' பார்த்த விடமெல்லாம் பரமேகா ணம்மானை
பாராம லிந்நாளும் பாழ்பட்டே னம்மானை.''

என்றும், நெஞ்சொடு மகிழ்தல்

'' மண்ணிறந்து நீரிறந்து வளியிறந்து தீயிறந்து
விண்ணிறந்து நின்றதிலே மேவினையே நெஞ்சமே.''

அன்றியும்,

'' பார்த்தவிடந் தோறும் பரந்துபரந் தெஞ்ஞான்றுங்
கோத்திருந்த பாழ்தனிலே குடியிருந்தாய் நெஞ்சமே.''

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுங் காண்க. (73)

அட்டமூர்த்தமும் சிவமேயென்று வேதாதிகள் கூறினும் உலகின்கண் வரைந்து நீக்குவனவாகிய தீயனவற்றையும் அங்ஙனம் காணுதல் கூடுமோ ? என்பாரைப் பற்றி மேற்கூறுகின்றார்.

74. உதித்தச் சிவத்தோடேய்ந் துள்ளதேன் மாயை
அதற்கன் னியமென்று ளுந்தீபற
அதினன்கு தீதியா துந்தீபற.

என்பது, சகத்காரணமாகிய மாயை நித்திய பூரணமாகிய சிவத்தினிடத்திலே நின்றுந் தோன்றி அதனையே கலந்து கொண்டிருத்தலால் அச்சிவத்திற்கு அம்மாயையை அன்னியமென்று சொல்லார் அறிவுடையோராதலின் மாயையினுண்டாகிய புவன கோடிகளின் ஒரொரு பதார்த்தங்களை இது நன்று இது தீதென்று கூறுதல் கூடாது. அவையும் சிவமே யாதலின் என்றவாறு.

அஃது எங்ஙனமெனின் ? மாயையைச் சிவத்திற்குப் பேதமென்றும், அபேதமென்றும் கூறுவார் உளராயினும் முத்திதசையில் அனைவர்க்கும் அபேத மென்பதே உண்மை. அஃது எப்படியென்னில் ? பேதமென்று காண்பார்க்கும் சுத்த சித்தாகிய வத்து பூரணமாகையால் வேறொரு மாயை யுண்டாயினும் அவனிடத்து நின்றுந் தோன்றி அவனையே கூடி நிற்பதல்லது அன்னியமாய்த்

தோன்றுதற்கும் நிற்றற்கும் இடம் இன்மையாலும், உப்பளத்தில் கனலில் [1]பரிசன வேதியாதியிற் கூடிய [2]திருணாதிகள் தத்தந்தன்மை கெட்டு அவற்றினது தன்மையாய் விளங்குதலின் மாயையும் சிவமேயாய் விளங்கா நிற்பதாதலின் அச்சிவத்தின் கண்ணே தோன்றா நிற்கிற ஓசையாதி விடயங்களை இது நன்று இது தீதென்று பற்றுதல் விடுதல் கூடாது; கூடுமேல் பூரண நிட்டையும் கூடாது; இது வன்றியும் ஒரொரு கால தேசங்களில் நிருமல பாவனை பற்றித் தீயனவற்றையும் நல்லனவெனக் காணுநிற்கிற—அபரிச்சின்ன நிட்டைகளும் கூடாது; காலதேசங்களும் அவைகளிற் காணப் படுகிற பொருளும் மாயையாதலின். இதுவன்றியும் நன்மை தீமை களாய் விளங்கா நிற்கும் புவன போகங்கள் [3]தம்மதீனமாகிய தனு கரணங்களை அடைவது ஒழிந்து நிரவயவனாகிய ஆத்மாவைப் பற்றாமையாலும், ஒருவன் தனக்கு அன்னியமாகப் பற்றிய சரீரத் தினும் இகழப் படு பொருள் வேறின்மையாலும் ஒருவகைப் பொரு ளிலே பேதம் தோன்றுதல் சீவகற்பனை யாதலினாலும் [4]கற்பனாரகித மாகிய பூரண நிட்டைக்கு அஃது இல்லை யென்றதெனக் கொள்க.

மாயாப் பிரபஞ்சமெல்லாம் சிவத்தில் தோன்றி ஒடுக்குதலின் அம்மாயையும் சிவத்திற்கு அன்னிய மாகாதென்பதற்கு பிரமாணம், **தேவிகாலோத்ரம்**

"புறனகங் கீழ்மேல் பக்கம் புணர்வதோர் பொருளு மில்லை
திறனுடை யுருவ மெல்லாந் தாணுகித் தேக மின்று
யறன்முறை யடங்கு ஞான யோகினு லறியப் பட்ட
விறன்மலி ஞானனந்த மேன்மையால் விளங்கா நிற்கும்."

அன்றியும்,

"கன்மபல மேதுமிலை சுபாவமே காணுங்கால்
தொன்மையுமொ குயிரில்லை தோன்றுவதெலாமசத்து
நன்மையினைத் தோற்று வித்துப் பற்றிலதாய் நணுகரிய
தென்னவறிந் தானுலகு மிலதாகிச் சுத்தனுமாம்."

என்றும், **பிரமகீதை**

"எப்பொருளு மாயையினு லெனச்சிலவ ரியம்புவர்கண்
மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா யையுமில்லை

---

1. பொன்செய்யும் மூலிகை, 2. புல் முதலியன.
3. தம் சார்பாகிய. 4. கற்பனையொடு கூடாத.

ஒப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகில்
அப்பெரிய பரன்பெருமைக் கதுநேரே யழிவன்றே.''

அன்றியும்,

'' ஒழிந்ததொரு பொருளில்லை யுள்ளதெல்லா மவனேமுன்
கழிந்த பொருள் மேலும்வரக் கடவபொரு டானுமவன்
மொழிந்தனனிப் பவவிச்சை யவிச்சையெனு முற்றுமவன்
இழிந்தபிறப் பறவேறோர் வழியில்லை யிவனொழிய.

என்றும், ஞானவாசிட்டம்

'' நானுவாம் பணதிகளு ணண்ணுகினு மொருமையே
நண்ணுங் கற்போல்
ஆனுத சகங்களையுள் அடக்கினும்வேற் றுமைமேவா
தறிவொன் றேயாங்
கானுர்பங் கயமெல்லாம் வேறன்றிக் கன்மயமாங்
கணக்கேபோல
வானுர்சிற் சொருபத்தைப் பிறியாது தன்மயமாம்
வைய மெல்லாம்.''

அன்றியும்,

'' தனிமெய்யா மாயையில தென்றிவ்வாறு நாடுவாய்
ஞானியாம் ஞானம் பெற்றுற்
றுனிசெயுமீ துளமாயை யறிதியன்றே துகளிலா
நற்போதந் தோன்று மட்டும்
பனிமாயை யில்லையென என்சொல்லாலே பழுதில்லா
வுறுதியுறப் பற்றிநிற்பாய்
புனிதமுறு பிரமமே யெல்லாமென்று புந்தியிற்கண்
டோர்முத்தி பொருந்தினோரே.

என்றும், சிவானுபூதி விளக்கம்

'' பதிபசு பாசப் பரப்பறிந்து பார்க்கம்
பதிபசு பாசப் பரப்பா யிருந்ததே.''

அன்றியும்,

'' பார்த்தே னுலகப் பரப்பெல்லாம் பார்த்தளவில்
பேய்த்தேர் போலில்லையாப் பேரறிவே கண்டனமே.''

என்றும், திருவம்மானை

“மெய்யான தொன்றுமே மெய்யான தம்மானை
மெய்யன்றி மற்றெல்லா மித்தைகா ணம்மானை.”

என்றும், சிவானந்தமாலை

“எங்குஞ் சிவமொழிய வில்லையவன் தன்றுணை
அங்கந் திரள்கருவி ஆணவமாம்—பொங்குமிருள்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
பொய்பொய்பொய் பொய்பொய்பொய் பொய்.”

என்றும், காசிகாண்டம்

“கானலிடைத் தெண்ணீருங் கயிற்றினில் வாளரவும் அலை
கடலிற் பட்ட
கூன்முதுகு இப்பியிற்றேன்றும் வெள்ளியுமம் முதலுண்மை
குறிக்கில் தீரும்
ஆனவைபோ னினையறியிற் றேன்றுசக மனைத்துநில்லா
தழியு மாற்றல்
தேனவிழ்பூங் கடுக்கையணி செல்வனின தறைகழற்றன்
சென்னி சேர்ப்பாம்.”

என்றும், தத்துவராயர்

“உலகமாந் தோற்றம்போ யோரொளியாய் நேரே
இலகிறு மென்கண்ணி னிற்கட்—புலனொழித்துக்
கையாற் றடவினர்க்குக் காண்கின்ற வோவியங்கள்
பொய்யாய்ச் சுவராணுற் போல்.”

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

பிரபஞ்சமெல்லாஞ் சிவமேயாதலின் இப் பிரபஞ்சத்தின் கண்ணே தோன்றிய பொருள்களில் யாதொன்றையும் இது நன்று இது தீதென்று பற்றுதல் விடுதல் கூடாதென்பதற்குப் பிரமாணம், திருக்கடைக்காப்பு

“குற்றம்நீ குணங்கள்நீ கூட லால வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்துநீ யருத்தமின்ப மென்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் னுரைப்ப தென்முகமனே.”

என்றும், திருவாசகம்

" கூறும் நாவே முதலாகக் கூறுங்கரண
மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புமநீ தீமை நன்மை
முழுதும்நீ
வேறோர் பரிசிங்கொன்றில்லை மெய்ம்மையுன்னை
விரித்துரைக்கிற்
றேறும் வகையென் சிவலோகா திகைத்தாற்
தேற்ற வேண்டாவோ."

என்றும், பொன்வண்ணத்தந்தாதி

" தவனே யுல்குக்குத் தானே முதல்தான் படைத்த வெல்லாஞ்
சிவனே முழுதுமென் பார்சிவ லோகம் பெறுவர் செய்ய
அவனே யடல்விடை யூர்தி கடலிடை நஞ்சமுண்ட
பவனே வெனச்சொல்லு வாரும் பெறுவரிப் பாரிடமே."

என்றும், தத்துவராயர்

" நிகழ்கின்ற வெல்லாமு நின்மலமே யானல்
இகழ்கின்ற வேறுதா னியாதோ—புகழ்பின்றி
நாடப் படாவெங்கள் நாயனுர் சீர்பாதஞ்
சூடப் படாதார்தஞ் சொல்."

அன்றியும்,

" யாதொன்று நீயன்றி யில்லாத பின்பிங் கெவற்றைநன்று
தீதென்ப தெங்கள் சிவக்கனியே செய்ய வேண்டுவது
மாதொன்றிய நின்றிருமேனி கொண்டிங்ஙன் வந்தவிந்தப்
போதொன் றியகழலே வழுவாது புகழ்விப்பதே."

என்றும், பகவற்கீதை

" நன்றே ஞான வருமறையோ னன்று யந்நாய்
இறைச்சிதனைத்
தின்றே யுழலு மவன்யானை யாவென் றறிந்த
திறத்தெல்லாம்
அன்றே யென்று தாமென்று தறிவாய் நின்ற
வெனையெங்கும்

ஒன்றே யாகக் காண்பானிவ் வுடம்போ டிருந்தே
யுடம்பறுப்பான்."

என்றும், பிரமகீதை

" போதமதாகித் தோன்றும் பொருளெலாஞ் சிவமே யாக
ஏல மிலறிவாற் காண்பா னெவனவ னுண்மை கண்டான்
தீதிலாச் சிவமன்றென்று சிறிதொன்றைச் சிந்தை செய்வான்
பேதமா மருளின்மேய பித்தனென் றறிய லாவான்."

அன்றியும்,

" சிவனிது வன்றே யென்று சிறிதொன்றைச் சிந்தை செய்யும்
அவனறி வுடையோர் தம்பா லதமனென் றறியப் பட்டான்
உவமனென் றில்லாவீசன் றனையிகழ்ந் தொழுகு வானும்
பவமதி லென்று மேவும் பசுவெனப் படுகின் றானும்."

அன்றியும்,

" தீதெனும் பொருள்கள் நன்றெனும் பொருள்கள்
செய்யலா வன்செயப் படாத
ஏதமா முடல மிந்தியம் பிராண னிசைமனம்
புத்தி யாங்காரம்
தீதுறு காமங் போகமே முதலாந் தீயன
சாந்திதாந் திகளே
யாதியா நலங்க ளடையவுந் தானே
யாகியே தோன்று மெய்யருளால்."

என்றும், ஞானவாசிட்டம்

" மேனியிற் புறத்தி னுள்ளின் மேலொடு கீழிற் றிக்கில்
வானில்லை யகத்தி லெங்கு நானன்றி மற்றென் றில்லை
யானிலா விடமு மில்லை யெனதிடத் திலாது மில்லை
தானிகழ் பொருள்வே றில்லை சச்சிதா னந்த மென்றான்."

அன்றியும்,

" மேவலுற் றபோ கத்தில்
விருப்பும் வெறுப்பு மெனக்கில்லை
யாவ தெய்து மதுக்குக
யாது போகு மதுபோக

பாவ மிகுமிவ் வஞ்ஞானப்
பகைவ னூலே விவேகமெனும்
ஏவ மில்லாப் பொருளெல்லா
மிழந்தே னுணர்வா லவைபெற்றேன்."

என்றும், மோகவதைம் பரணி

" சத்தமா திகளுமெலாந் தற்சொருப மானபரி
சுத்தமாய் விட்டதுகாண் சும்மேலொ சும்முலக்காய்."

என்றும், சிவானுபூதி விளக்கம்

" வெறுப்பு விருப்பென்று வேறுரைத்தா லெத்தை
யுறுப்பிற் குறையாதோ வுணர்வுடையோர் சொல்லுவரோ."

அன்றியும்,

" வேண்டலும்வேண் டாமலுமாய் மேவு வினைப்பயனும்
ஆண்டகையோ டுற்ற வனுபூதி யானதே.

அன்றியும்,

" எல்லாஞ் சிவமென் றிருக்கு மொழியுமுரை
யல்லாமல் வேறுமுண்டா மோ."

என்றும், திருவருட்பயன்

" உள்ளும் புறம்பு மொருதன்மைக் காட்சியருக்(கு)
எள்ளுந் திறமேது மில்."

என்றும், நெஞ்சொடு மகிழ்தல்

" உள்ளும் புறம்பும் உவட்டாத ஆனந்தக்
கள்ளருந்தி நின்ற களிப்பென்கொல் நெஞ்சமே."

என்றும், அருட்பிரகாசம்

" தெளியும் புழுவு மலமும்
பொதியு முலுநிமல
வொளியின் வடிவென வேவேத
மோதுத லோர்ந்து முண்மை

தெளியும் பரிசில ஞய்ச்சிவ
மன்றிது வென்ன வொன்றை
யெளியொன் றினைப்புசழ் வோனையு
ஞானி யெனப்படுமே.''

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

இந்நிட்டைக்கண் யான் பிறரென்னும் விகற்பங்களே தோன்று மாயின் அவற்றினை நீக்க உபாயம் மேற்கூறுகின்ருர். (74)

75. தோன்றுமேல் யான்பிறர் தோன்றுஞ் சுகாதிகள்
தோன்ருமல் நில்லுயிர்க் குந்தீபற
சுதந்திர மின்மைதேர்ந் துந்தீபற.

என்பது, இங்ஙனங் கூறிய நிட்டைக்கணின்றும் யான் பிற ரென்னும் விகற்பங்கள் தோன்றுமாயின் சுகதுக்கராகத் துவேச மென்னும் இருவகைத் துவந்துவங்களும் கூடவே தோன்ருநிற்கும், அவ்விகற்பங்கள் தோன்ருதபடி எல்லாவுயிர்கட்கும் சுதந்திர மின்மை தேர்ந்து உன்னையும் பிறரையும் காணுமல் நிற்பாய் என்ற வாறு.

தோன்ருமல் நில்லென்றமையால் அந்நிலை நிற்கவே சுகாதிகளும் தோன்ருது பூரண நிட்டையும் கூடுமென்பதாயிற்று. அஃது எங்ஙனமென்னின் ? எல்லாச் சீவர்கட்கும் தனுகரணங்களைக் கூடாதவிடத்து அறிவு உதியாமையால் அவர்கள் தாமே அவற்றினை கூடுகைக்குச் சக்தி இல்லாமையினுலும், அவைகள் உயிர்களைக் கூடாதவிடத்துப் [1]பிரேரகம் இன்மையவாகிய சடமாதலாலும், தாமே கூடாதனவற்றைக் கூட்டி உயிர்க்கு அறிவை விளக்குவான் சிவனே. நானும் பிறரும் சுதந்தரரல்லமென்று ஒருவன் சுகதுக்கங் கள் தோன்றினவிடத்தெல்லாம் தன்னையும் பிறரையும் காணுமற் சிவனையே கண்டு நிற்கவே அச்சிவன் மீது இவனுக்குப் பிரியா பிரியங்கள் தோன்றுவது இன்மையால் பூரண நிட்டை கூடுமென்ற தெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் : தத்துவராயர்

---

1. இயக்கம்.

" புகழ்ந்தென் புகழல்ல சொல்லியொன் ருகப்
புவியி லுள்ளோர்
இகழ்த்தென் னெனையவ ரென்செய்கி லென்னினி
யாவையு மாய்த்
திகழ்ந்தெங் கணுந்தன் செயலன்றி யின்மையைத்
தேற்றிச் சிந்தை
நிகழ்ந்திங் கெனையின்று நீங்காம னின்மல
னின்றனனே."

என்றும், சிவப்பிரகாசம்

" மருவிய பொறியி லொன்று மாபூத மைந்தி லொன்றும்
கருவிக ளுான்கு நீங்காக் கலாதிக ளைந்துங் கூடி
ஒருபுல னுகரு மிந்த வொழுங்கொழிந் துயிரு மொன்றைத்
தெரிவுரு தவெறிந்தத் திரள்களும் செயலி லாவே."

அன்றியும்,

" தனக்கென வறிவி லாதான் தானிவை யறிந்து சாரான்
தனக்கென வறிவி லாத வாயி ருனறி யாசாரந்
தனக்கென வறிவிலாதான் தத்துவ வன்ன ருபன்
தனக்கென வறிவா னுலிச் சகலமு நுகருந் தானே."

என்றும், சிவநெறிப் பிரகாசம்

" தன்மைமுன் னிலைபடர்க்கை மூன்றுவிதத் தாலே
சாருமுயிர்க் கறிவிப்ப னிறைவனதில் தன்மை
தொன்மையதா ஞானத்தைத் தடுத்திடுமா ணவத்தைத்
துரந்தெவையு முள்ளபடி தோற்றுவித்த லுளத்தே
நன்மையுடன் தீமையினை யவரவரா லறிய
நல்குவது முன்னிலையாம் நரகசொற்க மாதிப்
பன்மையதாம் பரலோக பாவபுண் ணியத்தின்
பலமதனை நூலினு னுணர்த்திடுகை படர்க்கை."

என்றும், சிவஞானதீபம்

" சத்தமுதல் விடயத்தைப் பகுத்தறித லவித்தை
தக்கதொழிற் படுத்திடுத லிசர்தொழில் ஞானம்
ஒத்ததுசா தாக்கியமாகுஞ் சத்திநசை யுறவே
யுருசிப்பித் திடுதல்சிவந் தற்செயல் பண்ணுவதாந்

தத்துவநா லொன்பதுவுஞ் சடமெனவிட் டகன்றே
தானறிவா காமலறி யாமையுமா காமல்
அத்தனுணர்த் திடவுணரு மறிவுயிரென் றருளால்
அறிந்தெவையு மிறைசெயலென் றுன்செயல் விட்
[டகலே.''

என்றும், உண்மை விளக்கம்

'' அக்கரங்கட் கெல்லா மகரவுயிர் நின்றாற்போல்
மிக்கவுயிர்க் குயிராய் மேவினும்—எக்கண்ணு
மில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லாகம மோது நாடு.''

என்றும், திருவருட்பயன்

'' ஊனறியா தொன்று முயிரறியா தொன்றுமிவை
தானறியா தாரறிவார் தாம்.''

என்றும், சைவசமயநெறி

'' உண்டோ வதீதத் துணர்வுதிக்க யாமுளத்திற்
கொண்டகுறிப் பின்றிவிளங் கும்.''

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (75)

எல்லாத் துவந்தவமும், உடலைப்பற்றி வருதலால் அதனது காவலைக் கைவிடல் வேண்டுமென்று மேற்கூறுகின்றார்.

76. படைப்பாதிக் கீச னதிகாரி பற்று
துடற்காவல் நீவிடுத் துந்தீபற
ஓவா தவனைநோக் குந்தீபற.

என்பது, அனைத்துயிர்க்கும் இத்தசைக் கண்ணுண்டாகிய சராசர தேகங்களும், அவற்றினைப் பற்றி வருகிற சுக துக்க போக மும் அத்தேகங்களினது நீக்கமும், உணர்வைப் பற்றி வருகிற மயக்கமும் தெளிவும், ஊழின் வலித்தன்மை யாதிகளாலே கூட்டிச் சிவனே ஐந்தொழில்களையும் பண்ணு நிற்கிற அதிகாரி யாதலின் யாதொன்றின் கண்ணும் யான் பிறர் அதிகாரியென்குதலையும், யான் இந்தவுடலைக் காக்கின்றேனென்னு மபிமானத்தையும்,

பற்றறக் கைவிட்டுச் சுதந்திரனுகிய பரனையே ஒழியாது நோக்கு வாய் என்றவாறு.

உடற்காவல் கைவிடென்றமையால், அதனைக் கைவிடவே அதன்கட் பற்றிவரும் இருவகைத் துவந்தமும் கூடவே நீங்குமென்ப தாயிற்று.

இதற்குப் பிரமாணம் : திருமந்திரம்

" எவ்விடத் துந்தம் பணியின்மை கண்டுளோர்
எவ்விடத் தும்பணி யீசன் பணியென்றே
அவ்விடத் தைங்கரு மத்தா லறிதலால்
உவ்விடத் தோருக் கோருபாய மில்லையே."

என்றும், தேவாரம்

" நன்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே."

என்றும், திருப்பாட்டு

" தேனைக் காவல் கொண்டு விண்ட
கொன்றைச் செழுந் தாராய்
வானைக் காவல் கொண்டு நின்றார்
அறியா நெறியானே
யானைக் காவி லரனே பரனே
யண்ணா மலையானே
பூனைக் காவல் கைவிட் டுன்னை
யுகப்பா ருணர்வாரே."

என்றும், திருவாசகம்

" நாயிற் கடையாச நாயேனை நயந்து
நீயே யாட்கொண்டாய்
மாயப் பிறவி யுன்வசமே வைத்திட்
டிருக்கு மதுவன்றி
யாயக் கடவே னானோதா னென்ன
தோவிங் கதிகாரங்

காயத் திடுவா யுன்னுடைய கழற்கீழ்
வைப்பாய் கண்ணுதலே."

என்றும், குகைநமச்சிவாயர் பிள்ளை

" ஐயா மரப்பாவை யாடுவதுஞ் சூத்திரிதன்
கைவசி யோபாவை கற்றதோ—வெய்யவினை
யென்னிச்சை யோஅருணை யீசா படைத்தளிக்கு
முன்னிச்சை யன்றோ வுரை."

அன்றியும்,

" நீயே படைத்தவுட னீகாப்பை காவென்ன
நாயேனுக் கென்பொறுப்பு நாயகனே—ஆயுமறைச்
சீர்கேட்குஞ் சோணகிரிச் சீமானே வைத்தவனை
நீர்கேட்குமோ மரங்கணின் று."

என்றும், தேவிகாலோத்ரம்

" கடைபடு முலகியல் தன்னைக் காண்குறீஇ
யுடையவ ரெனையிலை யானுடை யாரிலை
யடையவு கமனக்கிலை யானு மன்னதே
நடையிது நிலையெனிற் றமிய னுனரோ."

என்றும், சிவபோகசாரம்

" அன்றே யனுதி யமைத்தபடி யல்லதொன்
றின்றே புதிதா யிசையுமோ—என்றுஞ்
சலியா தியற்றுவான் தன்னையே நோக்கி
மெலியா திருந்து விடு."

என்றும், உப்பை

" கண்ணுமையாக் காட்டிற் கடுமுண் மரத்துக்கும்
உண்ணும் படிதண்ணீ ரூட்டுவா—ரெண்ணும்
நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர்
தமக்குத் தொழிலேது தான்."

என்றும், உறுவை

" சண்டப்பைக் குள்ளுயிர்தன் ருயருந்தத் தானருந்தும்
அண்டத் துயிர்பிழைப்ப தாச்சரியம்—மண்டி
அலேகின்றி வன்று யரனிடத்தி லுண்மை
நிலேகண்டு நீயறிந்து நில்."

என்றும் வரும். மற்றும் வருவன வற்றுற் காண்க. (76)

ஊழின் வழியால் வரும் இன்பத் துன்பங்களை யாவரொருவ ரேனும் அனுபவியாது நீங்குதல் கூடாதென்று மேற்கூறுகின்றார்.

77. இரும்பூ ரணஙின் மலன்வினே யெல்லா
மொருங்குணர்ந் தூட்டுமே லுந்தீபற
உண்ணு தொழிப்பதா ருந்தீபற.

என்பது, மகத்துவமாகிய பூரணத்தையும் நிருமலனுகையாற் சுதந்திரத்தையும் முழுதுணர்தலேயும் உடைய பரமேசுவரன் பல்லுயிர்களது வினேகளேயும் அதற்கேற்ற தனுவாதிகளேயும் ஏக காலத்து உணர்ந்து ஊட்டுமாயின், அவ்வினேப் பயன்களே அனுபவி யாது நீங்குவது யாவரால் ஆவது என்றவாறு.

அஃது எங்ஙனமென்னில்? அனேத்துயிர்க்கும் தத்தம் உபாய தந்திரத்தால் துன்பத்தை நீங்கி இன்பத்தைக் கூடவேண்டுமென் பது துணிவாதலின் பகவான் உணர்ந்து கூட்டா நிற்கும் இன்பத் துன்பங்களே ஒருவன் பற்றுதல் விடுதல் செய்வான் நினேத்தல் பழுது. அங்ஙனமன்று. எல்லா வினேகளும் சிவனே கூட்டுகின் ருனே? அவனே அறியாமல் வரும் இன்பத் துன்பங்களே நீங்க வேண்டாவோ? எனில், அவ்வஸ்துவுக்குக் கர்த்திருத்தவமும், சர்வஞ்ஞத்துவமும் உண்டென்பது கூடாது; அங்ஙனம் உண்டா யினும் அவ்வஸ்து அறிந்து கூட்டாநிற்கும் இன்பத்தைக் கைப் பற்றித் துன்பத்தை உபாயத்தால் நீங்கிவிடுவேனெனில், அவ்வஸ்து பூரணனுகையால் நீங்குதற்கு இடமே இல்லே; அங்ஙனமாயினும், அவ்வஸ்துவையன்றி எழுவகைத் தோற்றத்தும் ஒரொரு சீவர்களால் வரும் இடையூறுகளே என்னுபாயத்தினுலே நீக்கிக்கொள்வே னெனில், எல்லாவுயிர்களேயும் கன்மத்தளவில் இயக்கும் சுதந்திரன் சிவனேயாதலின் அவனேயன்றி உனக்கும் பிறர்க்கும் இயங்குதல் கூடாது. இவ்வாறு சுதந்திர ஹீனராகிய உன்னேயும் பிறரையும் சுதந்திரராகப் பாவித்தல் சிவ தூஷணமாதலின் சனனமரணங்களே ஒருக்காலும் நீங்குதல் கூடாது. ஆதலால், யாதோரிடத்தும் சிவத் தையே கண்டு யான் பிறரென்று காண்குதலே ஒழிந்து யாதொன்று

வரினும் எடுத்தவுடற்கு அடைத்த [1]பொறியளவே வந்து முடியா நிற்குமென்று தமது மனோவாக்குக் காயங்கள் அசையாமல் அடங்கி நிற்பர் மெய்யுணர்வுடையோர் என்றதெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், திருமந்திரம்

"செத்திலென் சீவிலென் செஞ்சாந் தணிகிலென்
மத்தகத் தேயளி நாட்டி மறிக்கிலென்
வித்தகன் நந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிகள் தன்மை குன்றுரே,"

என்றும், குகைநமசிவாயர்

"பேரா யிரமுடைய பெம்மானைச் சோணகிரி
யாரா வமுதை யறியாமல்—வாராது
தீதும் நலமும் தெரியுங்கால் நெஞ்சமே
யேதுமவ னென்றே யிரு."

என்றும், சிவஞானதீபம்

"சித்தமுறு நினைவுரைக டொழில்பொய் வாய்மை
தீமைநலம் விருப்புவெறுப் பின்பதுன்பம்
வைத்தபுசிப் பிகழ்ச்சி புகழ்தருமந் தான
மடிமுயற்சி பேறிழவு மற்றுமெல்லா
மத்தனறிந் தளவிலவ ர்வர்க்கு நாளு
மருங்கனவு நனவினுநின் றளிப்பதோரசர்
தத்தமறி வானுகருங் கருத்த ராகித்
தடுமாறி யுளமெலிந்து தளர்வ ரந்தோ."

அன்றியும்,

"உடலிலிரு வினையுதவு மிதமகிதப் பயனு
லுளவாகு மின்பதுன்ப முணவொழியா துயிர்க்கு
நடலைமரு ளறிவினுட னுமருந்தி லதுவே
நமன்றூத ருருத்துவதா நணுகிடுமேல் வினையுஞ்

---

1. ஊழ்.

சடமுடலம் வினைநுகரா தறிந்துயிர்தா னருந்தா
தலைவனவ னவளதுவா நிலைமையினு லுயிர்கட்
கிடமுடனின் றருத்துவனென் றுணர்ந்தருளா லருந்தி
லிறைபணியா மெதிர்வினையு மெரிசேர்வித்தாமே."

என்றும், திருப்பனுவல்

" ஈன னேனுடற் கின்பதுன் பங்கள்நீ
ஞான பூரண நல்கவு நானுனித்
தானி னைப்பதென் னேசென்னித் தண்கிரி
வானு ளோர்தொழும் மார்க்கமுட லிங்கமே."

அன்றியும்

" இன்ப துன்ப மெனக்குநீ நல்கவு
மன்ப கன்றினி யல்லும் பகலுநான்
உன்பிர தாப முணருத லோவினேன்
மன்ப ராபர மார்க்கண்ட லிங்கமே."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (77)

யான் பிறனென்னும் பாவனை நீங்கும் அவதி கூறுகின்றார்.

78. உறும்பொழு தவ்வீ டொருதன் னுழப்பா
அறும்பிறர் யானென்பொ யுந்தீபற
அலதொன் றினுஅரு துந்தீபற.

என்பது ஒருவனுக்கு முத்தியடையுங் காலையில் தன்னிடத் துண்டாகிய யான் பிறனென்னும் பொய்ப்பாவனை முயற்சியால் நீங்கா நிற்கும்; அஃதன்றி மற்றொறறுலும் அப்பாவனை நீங்கிச் சிவபாவனை தோன்றுது என்றவாறு.

அஃது எங்ஙன? மென்னில், ஈசுவரன் முழுதொருங் குணர்ந்தோ னுதலின் யாவரொருவர் முத்தியடையுங் காலம் அவனுன் மதிக்கப் படும். அங்ஙனம் அவன் நியமித்த காலத்தன்றி ஒருவர்க்கும் இடையே யானெனதென்னும் பாவனை நீங்கி முத்தி கூடுமோ வெனில் கூடாது. ஆயின் இவ்வுபாய நிட்டை கூறியது யார்க் கெனின்? நிருமலனுகிய பகவான் எல்லாவுயிர்களது பருவமும் ஒருங்கே நியமித்து அதற்கு ஏற்ப வேதாதி நூல்களும் அன்றே

கூறியதாதலின் முத்தியடையும் பருவமுடையோர்க்கு அவரது மனத்தின் கண்ணே பொய்மை நீங்கி மெய்ம்மை கூடுவதாகிய விழைவு தோன்றுதலின் அன்னோர்க்கு இத்திற நூல்கள் சம்மதமாய் அவைகளிற் கூறியபடியே முயற்சி உண்டாகா நிற்கும். இஃது இன்னும் பிறத்தற்கு உரியோர்க்கு யான் பிறரென்னும் பொய்ப் பாவனை நீங்குதற்குரிய முயற்சி உண்டாகாமையால் பிறப்பு நீங்குவது இல்லையாதலின் முத்திக்கு யான் பிறரென்னும் பாவனையைக் கெடுப்பதாகிய முயற்சியே நிமித்தமெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், பட்டணத்துப் பிள்ளையார் பாடல்

" உழப்பின் வாரா வுறுதிக ளுளவோ
[1]கழப்பின் வாரா கையற வுளவோ."

அன்றியும்

" நினையார் மெலியார் நிறையழியார் வாளா
புனைவார்க்குங் கொன்றை பொதுவோ—அனைவீரும்
மெச்சியே காண வியன்தில்லை யானருளென்
[2]பிச்சியே னாகா பெறும்."

என்றும், குகைநமசிவாய தேவர் பாடல்

" சும்மா கிடைக்குமோ சோறு சலன்பாதம்
அம்மால் விரிஞ்ச னறிகிலார்—நம்மால்
இருந்துகதை சொன்னக்கா லென்னாகு நெஞ்சே
பொருந்த நினையாத போது."

என்றும், தத்துவராயர் பாடல்

" ஒளியார் வளைகலை நாணிழ வாருரு வுந்திரியார்
தெளியாத பித்தென்று செப்பவிரார் நின்று தேங்கக்கண்ணீர்
குளியா ரினிய கொடிய வென்னார் குரவன் சொரூபன்
அளியா ரலங்க லெளிதோ புனைய வரிவையர்க்கே.

அன்றியும்,

" தொழிலா னதுன்பணியாத் தோத்தி ரஞ்செய் தோவா
தழலாகி னியஞ்ச லென்பா—வெழிலார்

---

1. சோம்பல். 2. பித்துடைய மகள்.

நிருபா திகனே நினையவுநான் மாட்டேன்
சொருபா வென்செய்கேன் சொல்."

என்றும், பிரமகீதை

"திரமாம் அருத்தத்தி ஞன்மைந்த ராஜனுந்
தீரா தவற்றின் தியாகத்தி ஞலே
யுரமான வேதாந்த மாவாக்கி யத்தா
லுற்பன்ன மாம்விச்சை யால்நிச்ச யத்தால்
பரமான வஞ்ஞான வந்தத்தி லேயப்
படிஞான வுபதேச மொன்ருலு மேயிப்
புரமா முடம்புக்கு ளேயந்த முத்திப்
பொருள்கண்டு விடெய்து வாரிப் புவிக்கே."

அன்றியும்,

"உலத்த லின்றியொழி வற்றபொரு ளுண்மை யதுவாஞ்
சலித்த லின்றியே தவத்தினர் தங்க ணெதிரே
திலத்தி லெண்ணெ யரணிக்கனல் ததிக்க ணிகழ்நெய்
நிலத்தி னீரென நிகழ்ந்து வெளியாகி நிலையாம்."

என்றும், ஞானவாசிட்டம்

"இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞான
மெளிதி னுண்டாம்
பனிச்சுடர்வெண் ணித்திலங்க ளுத்தமமா மூங்கிலலாற்
படுவ துண்டோ
செனித்தவரின் மேலோராய் நல்லோராய் மித்திரராய்
தெளிந்தோ ராகி
யனித்தமறு முத்தராய் ஞானிகளாங் குணமெல்லா
மவரைச் சாரும்."

அன்றியும்,

"சனன மஞ்சினர்க் கவருடை முயற்சியே சரணாந்
தினமு மிங்கிவ ருனெனும் சிறுமைதான் சிதையில்
அனக மாயுல கெங்குமாம் விசால முண்டாகு
மனனு றத்தன துயர்ச்சிதான் காண்புற வருமால்."

என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க. (78)

இப்பாவனு நிட்டையினது சிறப்பும் இதனுல் வரும் பயனும் மேற்கூறுகின்ருர்.

79. இப்பாவ னுநிட்டை மாயோக மீசற்கீ
தொப்பின்மா பூசையு முந்தீபற
உண்மையைக் கூட்டுமென் றுந்தீபற

என்பது, இங்ஙனம் கூறிய பாவனு நிட்டை மகா யோக மென்று கூறப்படுவது. இஃது அகண்டாகார சுத்த சைதன்னிய சிவத்தை அர்ச்சித்தது. இந்நிலை கைவரவே உண்மை நிட்டையும் எளிதிற் கிடைக்கும் என்றவாறு.

இந்நிட்டையே மகாயோக மென்பதற்குப் பிரமாணம், திருப்புகழ்

ஐந்து பூதமுமாறு சமயமு மந்த்ர வேத
புராண கலைகளு மைம்ப தோர்வித மானலிபிகளும்
வெகுரூப வண்ட ராதி சராசரமு முயர் புண்டரீகனு
மேக நிறவனு மந்தி போலுரு வானுநிலவொடு வெயில் [காலுஞ்
சந்த்ர சூரியர் தாமு மசபையும் விந்து நாதமு
மேகவடிவும் தன்சொருபம தாகி நிகழ்வது
சிவயோகந் தங்களாணவ மாயை கருமம லங்கள்போயுப
தேசபர குருசம்ப்ரதாயமொடேயு நெறியது பெறுவேனே.

என்றும், ஞானவாசிட்டம்

"பாசமன்றி யுள்ளுணர்வைப் பதினைங் கடிகை பூசிக்கில்
இராசசூய மிலக்க மிவ்வா றொருநா ளருச்சிக்கில்
ஆசிலாத பரவொளியி லமர லாகு மிதுதானே
ஏசில்பரம யோகமிது தானே பரம கிரியையுமே.

என்றும், அமுதசாரம்

"யோகத் தபாவமெனும் யோகமது கைகூடின்
ஏகப் பொருளதனு னெய்தியிடும்—ஏகம்
அதுவா மிதுவன்றெ னுவகண்ட மான
வதுவாகை மாயோக மாம்.

என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

இந்நிட்டையே சிவபூசையு மென்பதற்குப் பிரமாணம், பிரமகீதை.

" எப்பொருட் கண்ணு மன்னி யிலங்கிடு மறிவாமீசன்
அப்படி விளங்கு கின்ற தறிதலே சிவன்தனக்கு
மெய்ப்படு பூசை வேருேர் செயலினு லன்றுமெய்யே
இப்படி ஞானந் தன்னு லிறைஞ்சிடப் படுவானீசன்."

என்றும்,

" ஆன தாகாத் தெய்வமதே யடையும் விடய மிந்தியமாய்த்
தானு மாகித் தனைத்தன்னுல் தானே நுகருந் தன்மையது
ஊன மாகு ஞாதாதி யொழிந்தே யுள்ள வறிவதனுல்
தானே யாகக் கண்டிருத்தல் சத்தா யுள்ள பூசையது."

என்றும், ஞானவாசிட்டம்

" தேகமுதற் பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்
களிலத் தெய்வமுண்டோ
யாகமறப் பணதியற வடிமுடிவற் றுளவுணர்வே
பரம போதம்
ஆகலினு லதுதெய்வ மருச்சித்தற் குரியதாகு
மறிவி லாத
மூகருக்கு வடிவமுத லருச்சனையே யியல்பென்று
மொழியு மன்றே."

அன்றியும்,

" அறிவுசம பாவனை சந்தோடமெனு
மலர்களா லந்தத் தேவாம்
பிறிவரிய வான்மதத் துவத்தையருச்
சிப்பதே பெரிய பூசை
குறிவடிவிற் பூசனை பூ சனையல்ல வகண்ட
மெனக் கூறுந் தெய்வ
நெறிகொள்புறத் தொழில்களா னோராதிங் கிதனுலே
நிறையு மின்பம்."

அன்றியும், போதாமிர்தம்

“ ஓது பேதம் பேய்த்தே ரென்றுணர்த
லதுவொண் புனலாகும்
காத லின்ப மிடர்கனவென்றிடவே
கருதுபுகை யொளிதான்
வாதங் கழியமறித் துணர்தன் மலர்பூ
ஞைடமகிழ் சாந்த
மேத மின்றி யிருந்திடுத லிறைவற்
கெலேயில் பூசையதே.’

என்றும், சிவானந்தமாலே

“ எங்கும் சிவாலயமா மெங்குஞ் சிவமாகும்
எங்குஞ் சிவனடிமை யெங்குமாய்ப்—பங்கறவே
நிற்றல் சிவபூசை தின்றநிலே யாய்நிறைவின்
பற்றொழிதல் பூசா பலம்.’

என்றும் மற்றும் வருவனவற்ருற் காண்க.

பாராதி யென்னுஞ் செய்யுட்டொட்டு இச்செய்யுள் காறும் பூரண பாவஞை நிட்டை கூறியதெனக் கொள்க. (79)

இப்பூரண பாவனே கூடாதார்க்கு மேலும் ஓர் குறிப்புப் பாவனே கூறுகின்ருர்.

80. கொள்ளரி தேலக் குறியெம திவ்வுரு
உள்ளத்தி னுள்ளேவைத் துந்தீபற
ஓங்கார முச்சரி யுந்தீபற.

என்றது, முற்கூறிய பூரரண பாவனேக்கண் மனம் நில்லா விடத்து உன்னையாளும் பொருட்டாக நாம் கொண்டருளிய இக்குரு வடிவத்தை இதயத்தினுள்ளே தியானஞ் செய்து அவ்விதயத் தினுள்ளே பிரணவாட்சரத்தை யுச்சரி என்றவாறு.

பூரணனுகிய சிவன் ஒருவனுக்கு அனுக்கிரகஞ் செய்யுமிடத்துக் கொள்ளுந் திருமேனி குருவடிவே யாதலாலும் மற்றொரு குறிப்பு

வடிவங்களும் அவனருளால் பெறப்படுவ வாதலானும், இங்ஙனம் குருவடிவே குறிப்புருவமாகக் கூறினுரெனக் கொள்க.

குருத்தியானத்திற்குப் பிரமாணம், திருமந்திரம்

" குருவே சிவமெனக் கூறின னந்தி
குருவே சிவமென்பதுகுறித் தோரார்
குருவே சிவமாகிக் கோனுமாய் நிற்குங்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே."

அன்றியும்,

" கருட னுருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற்
குருவி னுருவங் குறிக்கொண்டு நோக்கத்
திரிமலந் தீர்ந்து சிவனவ னுமே."

என்றும், சிவானுபூதி விளக்கம்

" சீருருவங் கொண்டருளுந் தேசிகன் செம் மேனிபோல்
ஓருருவங் கொண்டங் குணரா துணர்த் தினனே."

என்றும்,

" வந்த குருவடிவை வந்தித்துப் பூசித்துத்
தந்த சிவானுபவந் தானருந்தப் பெற்றனமே."

என்றும், அமுதசாரம்

" உள்ளத்தி னின்று மொளித்தான் பரன்குரவன்
கள்ளந்தனைத் தவிர்த்துக் காட்டினன்—வள்ளல்
அருவான கோலமோ வக்கோலங் காட்டுங்
குருவான கோலமோ கூறு."

என்றும் மற்றும் வருவன வற்றுற் காண்க.

பிரணவ முச்சரித்தற்குப் பிரமாணம், திருமந்திரம்

" ஓமென்னு மோங்காரத் துள்ளே யொருமொழி
ஓமென்னு மோங்காரத் துள்ளே யுளபேதம்

ஓமென்னு மோங்காரத் துள்ளே யுருவரு
ஓமென்னு மோங்கார மொண்முத்தி சித்தியே."

என்றும், திருவாசகம்

" உய்யவென் னுள்ளத்து ளோங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா."

என்றும், பிரமகீதை

" தீமரந்தொறு மடைந்தழி வுருது தெரிவா
காமை நின்றரணி யால்வடிவு காணு மதுபோல்
ஆமு டம்பிலழி வின்றிமறை கின்ற வமலன்
ஓமெ னும்பொரு ளுணர்ந்திட வுடம்பில் வெளியாம்."

என்றும், ஞானவாசிட்டம்

" ஓங்குஞ் சின்மாத்திரப் பொருளா மோங்கா
ரைத்த யுண்ணிணைந்து
தூங்குந் தியான பரஞ்கித் தொடர்சங்
கற்ப மெல்லாம்போய்
வாங்குந் தொழிலே டணையைய மனன
ஞான ஞேயமிவை
தாங்கு ஞாதா வணைத்துமறத் தனிச்சித்
திரம்போ னெடிதிருந்தான்."

(80)

என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

81. அஞ்சுமுன் றஞ்சக்க ரமதியே தேனுமின்
வஞ்சமறுத் தோதென் றுந்தீபற
மனமிட்ட மானவொன் றுந்தீபற.

என்பது, பஞ்சாட்சரி அட்டாட்சரி முதலிய மந்திரங்களாயினும் உன் மனத்திற்கு இட்டமான வொன்றை ஏகாக்கிரசித்தம் பொருந்தி உள்ளத்தினுள்ளே உச்சரிக்கக் கடவாய் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், திருக்கடைக்காப்பு

வடிவங்களும் அவனருளால் பெறப்படுவ வாதலானும், இங்ஙனம் குருவடிவே குறிப்புருவமாகக் கூறினாரெனக் கொள்க.

குருத்தியானத்திற்குப் பிரமாணம், திருமந்திரம்

" குருவே சிவமெனக் கூறின னந்தி
குருவே சிவமென்பதுகுறித் தோரார்
குருவே சிவமாகிக் கோனுமாய் நிற்குங்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே."

அன்றியும்,

" கருட னுருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற்
குருவி னுருவங் குறிக்கொண்டு நோக்கத்
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே."

என்றும், சிவானுபூதி விளக்கம்

" சீருருவங் கொண்டருளுந் தேசிகன் செம் மேனிபோல்
ஒருருவங் கொண்டங் குணரா துணர்த் தினனே."

என்றும்,

" வந்த குருவடிவை வந்தித்துப் பூசித்துத்
தந்த சிவானுபவந் தானருந்தப் பெற்றனமே."

என்றும், அமுதசாரம்

" உள்ளத்தி னின்று மொளித்தான் பரன்குரவன்
கள்ளந்தனைத் தவிர்த்துக் காட்டினான்—வள்ளல்
அருவான கோலமோ வக்கோலங் காட்டுங்
குருவான கோலமோ கூறு."

என்றும் மற்றும் வருவன வற்றாற் காண்க.

பிரணவ முச்சரித்தற்குப் பிரமாணம், திருமந்திரம்

" ஓமென்னு மோங்காரத் துள்ளே யொருமொழி
ஓமென்னு மோங்காரத் துள்ளே யுளபேதம்

ஓமென்னு மோங்காரத் துள்ளே யுருவரு
ஓமென்னு மோங்கார மொண்முத்தி சித்தியே.''

என்றும், திருவாசகம்

'' உய்யவென் னுள்ளத்து ளோங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா.''

என்றும், பிரமகீதை

'' தீமரந்தொறு மடைந்தழி வுருது தெரிவா
காமை நின்றரணி யால்வடிவு காணு மதுபோல்
ஆமு டம்பிலழி வின்றிமறை கின்ற வமலன்
ஓமெ னும்பொரு ளுணர்ந்திட வுடம்பில் வெளியாம்.''

என்றும், ஞானவாசிட்டம்

'' ஓங்குஞ் சின்மாத்திரப் பொருளா மோங்கா
ரத்தை யுண்ணிணைந்து
தூங்குந் தியான பரனுகித் தொடர்சங்
கற்ப மெல்லாம்போய்
வாங்குந் தொழிலே டிணையைய மனன
ஞான ஞேயமிவை
தாங்கு ஞாதா வனைத்துமறத் தனிச்சித்
திரம்போ னெடிதிருந்தான்.''

என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க. (80)

81. அஞ்சுமூன் றஞ்சக்க ராதியே தேனுமின்
வஞ்சமறுத் தோதென் றுந்தீபற
மனமிட்ட மானவொன் றுந்தீபற.

என்பது, பஞ்சாட்சரி அட்டாட்சரி முதலிய மந்திரங்களாயினும் உன் மனத்திற்கு இட்டமான வொன்றை ஏகாக்கிரசித்தம் பொருந்தி உள்ளத்தினுள்ளே உச்சரிக்கக் கடவாய் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், திருக்கடைக்காப்பு

" தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நிரயம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்ந் தெய்து போழ்தினும்
அம்மையி னுந்துணை யஞ்செழுத் துமே."

என்றும், பெரியாழ்வார்

" ஏடு நிலத்தி லிடுவதன் முன்னம்வந்
தெங்கள் குழாம்புகுந்து
கூடு மனமுடை யீர்கள் வரம்பொழில்வந்
தொல்லை கூடுமினோ
நாடு நகரமு நன்கறிய நமோநா
ராய ணயவென்று
பாடு மனமுடைப் பத்தருள் ளீர்வந்து
பல்லாண்டு கூறுமினே."

என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க. (81)

நிருமலாந்தக் கரணத்தின் பொருட்டு மேலுங் கூறுகின்றார்.

82. மந்திர நிட்டையின் றேல்வாயு வாதியாற்
சிந்தைதூய் தாவதற் குந்திபற
செய்யோக மாதிய வுந்திபற.

என்பது. இங்ஙனங் கூறிய மந்திர நிட்டைகளில் மனசு நில்லா விடத்து அம்மனசு நிருமலமாய் நிலைகொள்வதன் பொருட்டு வாயு தாரணை முதலியவற்றால் யோகமாதிய தவங்களை யாயினும் செய்யக் கடவாய் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், திருமந்திரம்

" வாயு விருந்திட வாயு வருந்திடு
மாயு விருந்திட காய மிருந்திடு
காய மிருந்தாற் கருத்து மிருந்திடு
மேய வறிவுணர் வுற்றால் வினையின்றே."

என்றும், சிவதருமோத்தரம்

" இந்திய விருத்தி யெல்லாம் பிராணனே யியக்க வேயும்
இந்தியஞ் செயிக்க வெண்ணிற் பிராணனைச் செயிக்க பஞ்ச

விந்தியஞ செயித்தார் தாமே யெய்துவர் சமாதி தன்னை
யிந்தியஞ் செயிக்க மாட்டா ரெய்துவ தேது மின்றே.',

என்றும், ஞானவாசிட்டம்

" ஆதலா லுயிரசைவால் வாதனைப்பா லழுத்தத்தால்
விரிந்ததற்று ளடங்கு வாயேல்
ஓதுபிறப் பறுமறிவின் விரிவேயுள்ள முள்ளத்தா
லிவ்வனந்த வுயிர்கள் வாழ்வாஞ்
சேதனயோ கிகளெல்லாம் பிராணு யாமந்
தியானமருந் தூகத்தின் திறங்களாலே
பேதமன மொடுங்குவது பொருட்டா வன்றோ
பிராணவா யுவைநிறுத்திப் பிடிக்கின்றரே."

என்றும், பிரபுலிங்கலீலை

" ஓடு மாவை நிறுத்துறி லுள்ளுறக்
கோடு வாய்க்கலி னத்திணைக் கொள்ளுவார்
நீடு மாமன னிற்க நிறுத்துறில்
ஓடும் வாயுவை யுள்ளுற் வீர்ப்பரால்."

அன்றியும்,

" வாயு நிற்ப மனனின்று மனந்தா
னிற்பப் பொறிநின்று
பாய பொறிக ணிற்பவிடர் படுபுன்
புலன் கணின்ற னவால்
ஆய புலன்க ணின்ற மையான்
அகிலந் தோன்று துள்ளத்தே
தூய பரமா னந்தபரஞ் சோதி
தோன்றக் கண்டிருந்தார்."

என்றும், திருவுந்தியார்

" காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள்
ஆற்றுவ தாற்றலென் றுந்தீபற
அல்லாத தல்லலென் றுந்தீபற."

என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

அத்தன்மையையும் கூடாதார்க்குப் பின்னும் கூறுகின்றார்.

83. அயனாதி மூவரு மாங்கவர் தம்ம
தியைதரு வேடமு முந்திபற
எல்லாமு மியாமெம துந்திபற.

என்பது, அயன் அரி அரனென்னும் திரிமூர்த்திகளும் அம்மூர்த்திகளது வேடங்களும் யாமும் எமது வேடமும் பிறிதின்றெனக் கொள்வாய் என்றவாறு.

எல்லாமும் யாம் எமதென்றமையால் சிருட்டியாதி கிருத்தியங்களைப் பண்ணு மூர்த்திகளாயும் அம்மூர்த்திகட்கெல்லாம் காரணமாயும் நிற்பது ஒரு சிவமேயென்றதெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், திருக்கடைக்காப்பு

" படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினே."

என்றும், தேவாரம்

" ஆதி யும்மர னாயயன் மாலுமாய்ப்
பாதி பெண்ணுரு வாயபர மனென்
றோதி யுள்குழைந் தேத்தவல் லாரவர்
வாதை தீர்த்திடும் வான்மியூ ரீசனே."

என்றும், திருப்பாட்டு

" வாழ்வர் கண்டீர்நம் முளைவர் வஞ்சமனத் தீரே
யாவ ராலு மிகழப்பட்டங் கல்லலில் வீழாதே
மூவராயு மிருவராயு முதல்வ னவனேயாந்
தேவர்கோயி லெதிர்கொன் பாடியென்ப தடைவோமே."

என்றும், திருவாசகம்

" சுந்தரத்தின்பக் குயிலே சூழ்சுடர் ஞாயிறு போல்
அந்தரத்தே நின்றிழிந்திங் கடியவ ராசை யறுப்பான்
முந்துநடுவு முடிவு மாகிய மூவ ரறியாச்
சிந்துரச் சேவடி யானைச் சேவகனை வரக்கூவாய்."

என்றும், திருவாய்மொழி

" திருமா னுன்முகன் செஞ்சடையானென் றிவர்களெம்
பெருமான் றன்மையா ரறிகிற்பார் பேசியென்
னொருமா முதல்வா வூழிப் பிரானென்னை யாளுடைக்
கருமாமேனிய னென்பனென் காதல் கலக்கவே."

என்றும், பிரமகீதை

" புருட னென்றுரை செயப்படு வதுபரி
பூரண மாநின்ற
சொருப நின்றவா நிற்கவிங் கருளொரு
தோன்றவல் லவன் தன்னை
யரனு மன்றுமா லயனுமன் றெவர்க்குமுள்
ளாகியே யாவர்க்குந்
தெரிவ ருஞ்சிவ னவனையிங் கொருங்கிய
சிந்தையார் தெளிவாரே."

என்றும் வரும், மற்றும் வருவன வற்றுற் காண்க. (83)

இங்ஙனம் கூறிய திரிமூர்த்திகளினும் அவரவர் வேடமாகிய கணங்களினும் வழிபடுமுறைமை மேற்கூறுகின்றார்.

84. எத்தேவை ஈசமென் றிசைந்தா யதைத்தொழு
சத்திய பத்தியா லுந்தீபற
தனுவாதி யைக்கொடுத் துந்தீபற.

என்பது, இங்ஙனம் கூறிய முத்தேவர்களுள்ளும் யாதொரு வடிவத்தை நீ சிவமென்று துணிந்தாய் அந்த வடிவத்தையே நாடொறும் வழிபடக் கடவாய்; சத்திய பத்தியால் மனவாக்குக் காயத்தை அர்ப்பணஞ் செய்து என்றவாறு.

சத்திய பத்தியென்றது உலகர் சான்றொழிந்து தேவதை சான்றாக வழிபடுமிடத்துத் தனுவாதிகளை அர்பித்துத் தலைநிற்ற லெனக் கொள்க. தனுவாதி என்றது உடல் பொருளாவி யென்பாரு முளர். இது துறவிக்குக் கூறியதாகலின் அது சிறப்பன்றெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், தேவாரம்

"உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலாற்
கள்ள முள்ளவ ருக்கருள் வானலன்
வெள்ள மும்மர வும்விர வுஞ்சடை
வள்ள லாகிய வான்மியூ ரீசனே."

என்றும், திருவாய்மொழி

"உணர்ந் துணர்ந் திழிந்தகன்
றுயர்ந்துரு வியந்தவிந் நிலைமை
யுணர்ந் துணர்ந் துணரினும்
இறைநிலை யுணர்வரி துயிர்காள்
உணர்ந் துணர்ந் துரைத்துரைத்
தரியய னரனென்னு மிவரை
யுணர்ந் துணர்ந் துரைத்துரைத்
திறைஞ்சுமின் மனப்பட்ட தொன்றே."

அன்றியும்,

"மகிழ்கொள் தெய்வமு லோகமு லோகம்
மகிழ்கொள் சோதி மலர்ந்தஅம் மானே
மகிழ்கொள் சிந்தைசொல் செய்கைகொண் டென்றும்
மகிழ்வுற் றுன்னை வணங்கவா ராயே."

என்றும், சிவஞானசித்தியார்

"மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல
வினமலர் கையிற் கொண்டிங் கிச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுத லகற்றி வாழுஞ் செயலற மானால் யார்க்கு
முனமொ ருதெய்வ மெங்குஞ் செயற்கு முன்னிலையா மன்றே."

என்றும் மற்றும் வருவனவற்றுற் காண்க. (84)

யாதொரு போக மோட்சம் அன்பினாலன்றி மற்றொன்றால் யாவர்க்கும் அடைதல் கூடாதென்று மேற்கூறுகின்றார்.

85. மெய்யின்றி யாக முடியுமே வீடுபேர்
ஐவகை யாகமு முந்தீபற
அன்பின்றி யாகுமென் றுந்தீபற.

என்பது, யாது மோரிடத்தாயினும் நெய்யின்றி யாகம் முடியு மாயின், கருமயாகம், தவயாகம், மந்திரயாகம், பாவனுயாகம், ஞான யாகம் என்று இங்ஙனங் கூறிய ஐவகை யாகமும் அன்பின்றி ஒருவனுக்கு முடியும் என்றவாறு.

இதனுல் போக மோட்சத்திற் கெல்லாம் ஆதரமே காரண மென்றதாயிற்று.

இதற்குப் பிரமாணம், திருவள்ளுவர்

" அன்பிற்கு முண்டோ வடைக்குந் தாழார்வலர்
புண்கணீர் பூசல் தரும்."

என்றும், திருமந்திரம்

" அன்புஞ் சிவமுமிரண் டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலர்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே.

என்றும்,

" என்பே விறகா விறைச்சி யறுத்திட்டுப்
பொன்போ லெரியிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி யகங்குழைந் தார்க்கன்றி
என்பொன் மணியினை யெய்த வொண்ணுதே."

என்றும், தேவாரம்

" நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னூர்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்ப னவர்தமை நாணியே."

என்றும், திருப்பாட்டு

" இன்பமுண்டேற் றுன்பமுண் டேழைமனை வாழ்க்கை
முன்புசொன்ன மோழைமையான் முட்டை மனத்தீரே
அன்பரல்லா அணிகொள் கொன்ற யடிகளடிசேரார்
என்பர்கோயி லெதிர்கொள் பாடியென்பதடைவோமே."

என்றும், திருவாசகம்

" பத்தி வலையிற் படுவோன் காண்க."

அன்றியும்,

" தேவ தேவன்மெய்ச் சேவகன் தென்பெ ருந்துறை நாயகன்
மூவ ராலுமறி யொணாமுத லாய வானந்த மூர்த்தியான்
யாவ ராயினுமன்ப ரன்றி யறியொ ணாமலர்ச் சோதி யான்
தூய மாமலர்ச் சேவடிக் கணஞ் சென்னி மன்னிச் சுடருமே."

என்றும், திருவாய்மொழி

" நீர்மையி னாற்றுவர் வியவன் றைவர்க்
கருள்செய்து நின்று
பார்மல்கு சேனை யவித்த பரஞ்சுடரை
நினைந் தாடி
நீர்மல்கு கண்ணின ராகி நெஞ்சங்
குழைந்து நையாதே
ஊர்மல்கி மோடு பெருப்பா ருத்தமர்கட்
கென்செய் வாரே."

அன்றியும்,

" அமரர் தொழப்படு வானை
யனைத்துலகுக்கும் பிரானை
யமர மனத்தினுள் யோகு புணர்ந்தவன்
தன்னோ டொன்றாக
வமரத் துணியவல் லார்க ளொழிய
வல்லாதவ ரெல்லாம்
அமர நினைந்தெழுந் தாடி
யலர்த்துவ தேகருமமே

என்றும், சிவதருமோத்தரம்

" ஆதரவே பரமான வறமதாகு மாதிநடு
வந்தமிலற் றனைத்து மாகும்

ஆதரவற் றவர்கை யறமதாகா வாதலினுல்
ஆதரவே மூலமாகும்
ஆதரவே பிரகிருதி யான்மாவீச னெனும்
பொருளு மறிவிக்கு மமலன்ருளும்
ஆதரவே அடைவிக்கு மாதலாலே யனைத்தினுக்கும்
ஆதரவே மூல மாமே."

என்றும், அனுபவ சாரம்

"அன்பி லாததல் லறங்களு மைவகை
வேள்வியும் பிணமேயாம்
அன்பில் வாய்மையும் தானமும் ஒழுக்கமும்
விரதமும் பிணமேயாம்
துன்பின் ஞானமும் துகளிலெச் சமயமும்
சொல்லிடிற் பிணமேயாம்
அன்பி லாதிய லறம்பொரு ளின்பம்
விடனைத்திற்கு முயிருண்டோ."

என்றும், சொரூபானந்த நிலையம்

"அன்பு தோன்றுமற் றருஞ்சிவ மொன்றுமென்
றறிபவ ரறிவில்லார்
அன்ப தேசிவ மாயிருந் தமையறிந்
தவரிறை யருள்பெற்றார்
துன்ப வன்பவத் துவங்களில் வீடெனச்
சொல்லிடு மவையெல்லாம்
மன்ப தாமமு தினைமுழுந் திடவுரு
வயலவ ருரைதரனே."

என்றும், மெய்ஞ்ஞானவிளக்கம்

"தாமமது வெங்குளது வங்கனல தாமா
றேமமுற வேயிறைவ னுளுமவர் பாலுந்
தாமமைவி லாதுருகு தன்மைய ருளத்தே
யாமிறை வனுரிய தானுமென லோரே."

என்றும், மெய்ஞ்ஞான நிலையம்

" முழுதுந் தன்னையே தழுவிட நழுவிடு
மூலமா மிறைவந்து
பழுதொன் றின்றிய பத்திநல் வலையினில்
படுமெனு மதுகண்டால்
எழுது கல்வியும் இலங்குநற் றவங்களும்
யோக ஞானமுமெங்கே
அழிவொன் றின்றிய வன்பினன் பெருமை
யையறையவு முடியாதே."

என்றும், திருக்களிற்றுப் படியார்

" அன்பேயென் னன்பேயென் றன்பாலழு தரற்றி
அன்பே யன்பாக வறிவழியும்— அன்பன்றித்
தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாத்தும் பழமன்றே தான்,"

என்றும், சிவானந்தமாலை

" *சீரார் பதினெண் புராணஞ் செழுமறைநூல்*
*ஆராத வாகமங்கற் றுய்ந்தறிந்து நேராகச்*
*சங்கரன் றுளிணைக் கீழன்பிலனேற் சண்டாளன்*
*அங்கை யினிற்பாகீ ரதி.*"

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (85)

அன்போடு கூடாத நெஞ்சிற்கு உணர்த்துதல் மேற் கூறுகின்றுர்.

86. அஞ்சிவக் கன்புறு தைம்புலக் கோடுமேல்
நெஞ்சிற் கறிவுறுத் துந்தீபற
நீதுணை யல்லையென் றுந்தீபற.

என்பது, எல்லாச் சிறப்பினையுமுடைய சிவத்திற்கு அன்பு செய்யாது குற்றத்தினை விளைப்பதாகிய ஐம்புலவிடயங்களை இச் சித்து உன்னுடைய நெஞ்சம் செல்லுமாயின் அதனை நோக்கி நித்தியானந்தத்தினை நீத்துச் சிறிதாய் அழிதருஞ் சத்தாதி விடயத்தைக் கருதா நிற்கும் நெஞ்சமே நீ எனக்குத் துணையாகக் கடவாயோ அல்லை யென்று வலியுறுத்தி அறிவுறுத்து என்றவாறு.

இதற்குப் பிரமாணம், திருவாசகம்

ஆடு கின்றிலை கூத்துடையான் கழற் கள்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோறலறிலை செய்வதொன் றறியேனே.

என்றும், பட்டினத்துப் பிள்ளையார்

" பேசு வாழி பேசு வாழி
ஆசையொடு மயங்கி மாசுறு மனமே
பேசு வாழி பேசு வாழி
கண்டன மறையும் உண்டன மலமாம்
பூசின மாசாம் புணர்ந்தன பிரியும்
நிறைந்தன குறையும் உயர்ந்தன பணியும்
பிறந்தன விறக்கும் பெரியன சிறுக்கும்
ஒன்றொன் றொருவழி நில்லா வன்றியும்
செல்வமொடு பிறந்தோர் தேசொடு திகழ்ந்தோர்
கல்வியிற் சிறந்தோர் கடுந்திறன் மிகுந்தோர்
கொடையிற் பொலிந்தோர் படையிற் பயின்றோர்
குலத்தி னுயர்ந்தோர் நலத்தினின் வந்தோர்
எனையர் ரெங்குலத்தின ரிறந்தோ ரனையவர்
பேரு நின்றில போலுந் தேரின்
நீயுமஃ தறிதி யன்றே மாயப்
பேய்த்தேர் போன்று நீப்பரு முறக்கத்துக்
கனவே போன்று நனவுபெயர் பெற்ற
மாய வாழ்க்கையை மதித்துக் காயத்தைக்
கல்லினும் வலிதாக் கருதிப் பொல்லாத்
தன்மைய ரிழிவு சார்ந்தனை நீயு
நன்மையிற் றிரிந்த புன்மையை யாதலின்
அழுக்குடைப் புலன்வழி யிழுக்கத்தி னொழுகி
வளைவாய்த் தூண்டிலி னுள்ளிரை விழுங்கும்
பன்மீன் போலவும்
மின்னுபு விளக்கத்து விட்டில் போலவும்
ஆசையாம் பரிசத் தியானை போலவும்
ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும்
வீசிய மணத்தின் வண்டு போலவும்
உறுவ துணராச் செறிவுழிச் சேர்ந்தனை
நுண்ணூல் நூற்றுத் தன்னகப் படுக்கும்
அறிவில் கீடத்து[1] நுந்துழி போல

1. கூடு

வாசைச் சங்கிலிப் பாசத் தொடர்பட்
டிடர்கெழு மனத்திலே டியற்றுவ தறியாது
குடர்கெழு சிறையன்றக் குறங்குபு கிடத்தி
கறவை நினைந்த கன்றென விரங்கி
மறவா மனத்து மாசறு மடியார்க்
கருள்சுரந் தளிக்கு மற்புதக் கூத்தனை
மறையவர் தில்லை மன்று ளாடும்
இறையவன் என்கிலை யென்னினைந் தனையே."

என்றும், தத்துவராயர்

" மற்றிலை பற்றென்று வாழ்வித்த நாதன் மலரடியைப்
பற்றிலை மற்றொன்றைப் பற்றுதொழிந்திலை பற்றியொன்றும்
பெற்றிலை யாயினும் பேய்த்தேரை நீரெனும் பின்றொடர்ச்சி
அற்றிலை யென்செய்கின் றாய்நெஞ்ச மேயழிந் தற்றனையே."

அன்றியும்,

" நின்பெற்றி தன்னை நினைக்கவுண்டோ
நெஞ்ச மேநிறையப்
பொன்பெற்று வைத்தும் பொதிந்துகொள் ளாய்புன்
குரம்பையிலே
தன்பெற்றி தன்னைத் தருந்தம் பிரான்
வந்து சார்ந்திருப்ப
என்பெற்று நீயிந்தி யஞ்சொன்ன
வாசெய் திளைக்கின்றதே.

என்றும், மூலசித்தி

" அன்பிலா நெஞ்ச மரும்பிணி யெனவும்
அளவிலாப் பகைநமக் கெனவுந்
துன்பமார் சோகமே முதலாந்
துயரெலாம் விளைநில மெனவும்
இன்பவீடெய்தா திடற்கிடை யூரு
மிருளுமென் றியம்புவர் பெரியோர்
துன்பிலா விறைவர்க் கன்பிலா நெஞ்சே
துணையலை துணையலை யெனக்கே."

என்றும், அனுபவசாரம்

" புலையுறு செயலாற் புலனுறு போகப்
புகலரும் விடத்தையே நுகர்தற்

கலமரு கவலைக் கடலுளே தலைகீ
ழாகவே விழுந்தழி நெஞ்சே

கலைகளி னுணர்வுக் கரியநற் சொருபன்
கழல்களை நினைந்து நைந்துருகி

எலையறு மன்பா மமுதினை விரும்பா
தேதுகொண் டென்செய்தாய் கெடுவாய்."

என்றும், போதரத்நாகரம்

காயநீர்க் குமிழி யதிலுறு மின்பங்
கானலிற் புனலது தனக்கிங்

காயவத் துயர மளவிலை யதுநீ
யாய்வுறு மையினழிந் தற்றாய்

நீயினிக் கவலை மயல்களைத் தவிர்ந்து
நெஞ்சமே வந்தெனக் குடன்பட்

டாயநற் சொருபற் கன்பதே புரியி
லரியதே தார்தமக் கெதிரே."

என்றும் வரும். மற்றும் வருவனற்றாற் காண்க. (86)

பின்னும் சத்தாதி விடயத்தால் குற்றமே யென்று வலியுறுத்திக் கூறுகின்றார்.

87\. அசுணாதிக் கோரொன்று லைம்புல னும்
இசையுமேற் கேடெமக் குந்தீபற
எங்ஙன முய்துமென் றுந்தீபற.

என்பது, அசுணப்புள், யானை, விட்டில், மீன், வண்டென்பன ஐந்தும் சத்தாதி விடயங்களில் வளைவாய்த் தூண்டிலினுள்ளிரை விழுங்கும் பன்மீன் போலவும் மின்னுபு விளக்கத்து விட்டில் போலவும் ஆசையாம் பரிசத்தியானை போலவும், ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும், வீசிய மணத்தின் வண்டு போலவும், ஓரொன்றாலே கேடடையா நிற்கும். எமக்கு ஐம்புலனாலும் கேடு

வருமாயின் அவற்றினை நீங்கா விடத்து எங்ஙனம் உய்குவம் நெஞ்சமே என்றவாறு.

இதற்குப் பிரமாணம், ஞானவாசிட்டம்

"உரைத்தவ சுணங்களிறு விட்டின் மீன்றேன்
ஓசையூ ரொளியிரத நாற்றமென்ன
திரைத்தவி வற்ரென்ரென்ருன் மாய்ந்துபோகு நிலையழிக்கு
மிவையைந்து நேரே கூடிக்
கரைத்தலுறு பவர்க்கின்ப மெங்கே யுன்றன்
கட்டுக்கு வாதனையே கயிற்றுச் சாலம்
புரைத்தெழுநெஞ் சேயதுவே போகு மாகிற்
பொருவில்சய மஃதுன்க்குப் புகலுங்காலே."

என்றும், அமுதசாரம்

"*சிந்தா குலமனிதர் சீசீ செவிமுதலா*
*மைந்தாலு மீடழிய வல்லரோ—வைந்திலொரு*
*வேட்கை யசுண மிபம்விட்டின் மீன்வண்டு*
*கேட்கைமுத லோரொன்றிற் கேடு."*

என்றும், ஒழிவிலொடுக்கம்

"நாயலகை நெய்விரும்பி நக்குவது நஞ்சிட்ட
பாயசமு மெய்ப்பரிசம் பாவைமிகச்—சாயனீர்
வேட்கை யசுணமிபம் விட்டின்மீன் வண்டிவையின்
சாட்சியைக் கண்டார் துறவா தார்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்ருற் காண்க. (87)

வனிதையர் விடயத்தால் வருங்கேடு மேற் கூறுகின்ருர்.

88\. ஆயிழை யார்பாலுன் னைம்புல வேட்கையு
நீவிரும் பிற்கேடென் றுந்தீபற
நெஞ்சமே சொல்வதென் னுந்தீபற.

என்பது, வனிதையரிடத்து ஐம்புல நுகர்ச்சியும் உளதா மாதலின் அவரது போகத்தை நீ விரும்பிற்கேடென்பதற்கு ஓரையம் என்னை நெஞ்சமே என்றவாறு.

இதற்குப் பிரமாணம், திருவள்ளுவர்

" கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள."

அன்றியும்,

" உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு."

என்றும், திருவாசகம்

" காருறு கண்ணிய ரைம்புல னாற்றங் கரைமரமாய்
வேருறு வேலை விடுதிகண் டாய்விளங் குந்திருவா
ரூருறை வாய்மன்னு முத்தர கோசமங் கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க வென்னை வளர்ப்பவனே."

என்றும் வரும். மற்றும் வருவன வற்றுற் காண்க. (88)

காமத்தால் வருமின்பமும் அதனல் வருந்துன்பமும் மேற்கூறு கின்றார்,

89. சிலந்தி வருடத் திகழுஞ் சுகம்போல்
இலங்கிழை யார்சுக முந்தீபற
இடராய் விளையுமென் றுந்தீபற.

என்பது, ஒருவனது உடலின்கண் தோன்றிய சிலந்தியைச் சூழ்ந்து உகிரால் வருட உண்டாகிய சுகம் பின்பு கீறி அறுத்துத் தீர்த்தற்கு இடமாய் விதனஞ் செய்குதல் போலும் ஆபரணுதிகளினது சிறப்பால் மயக்கஞ் செய்யாநிற்கும் மகளிரிடத்து உண்டாகிய சிற்றின்பமும் பின்பு நரகாதி வாதனைக்கு இடஞ்செய்யும் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், தேவாரம்

" குழலை, யாழ்மொழி யாரிசை வேட்கையா
யுழலை யாக்கையைப் பூணு முணர்விலீர்
தழலை நீர்மடிக் கொள்ளன்மின் சாற்றினே
னிழலை யானடிச் சாரவிண் ணுள்வரே."

என்றும், திருப்பாட்டு

" மாணுவுரு வாகியோர் மண்ணளந்தான்
மலர்மேலய னேடியுங் காண்பரியாய்
நீணீண்முடி வானவர் வந்திறைஞ்சு
நெல்வாயி லரத்துறை நின்மலனே
பாணூர்நுத லார்வலைப் பட்டடியேன்
பலவின்கனி யீயது போல்வதன்முன்
ஆணேடு பெண்ணுமுரு வாகிநின்று
யடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே."

என்றும், திருவாசகம்

" செழிகின்ற தீப்புகு விட்டிலிற்
சின்மொழி யாரிற்பன்னுள்
விழுகின்ற வென்னை விடுதி
கண்டாய்வெறி வாயறுகால்
உழுகின்ற பூமுடி யுத்தர
கோசமங் கைக்கரசே
வழிநின்று நின்னரு ளாரமு
தூட்ட மறுத்தனனே."

என்றும், பட்டினத்துப்பிள்ளையார்

" இலவிதழார் வீழ்வா ரிகழ்வா ரிவர்தங்
கலவிகடைக் கணித்தும் பாரே—னிலகுமொளி
யாடகஞ் சேரம்பலத்தெம் மானுடையா னின்ருடு
நாடகங் கண்டின்பான நான்."

என்றும், சிவதருமோத்தரம்

" குட்டவுடல் கொடுக்குமிதங் கூடினமுற் கொடியிடையார்
இட்டமுமிம் முறையெணுக விளையவர்தம் பருவம்போற்
குட்டமுறற் கூடுதலுங் கொழுநனுக்கொப் பெனக்கொள்க
தொட்டது வக்கிந்திரியஞ் சொற்பொருளும் துணிவாரே."

அன்றியும்,

" புரிந்தவர்க டிவினையைப் பெரருவரியா னடிக்கன்பு
பிரிந்தவர்கள் வனிதையரைப் பெறற்கரிய பேறென்றே

இருந்தவர்க ணடந்தவர்க ளிழுக்காய குழிவழிக்கே
எரிந்தவர்கள் கிடந்தெரிவாய் நிரயத்து மிளைப்புறவே."

என்றும், ஞானவாசிட்டம்

" பைந்தொடியா ராசைநோய் கம்பீர
மனிதரையும் பதுமந் தன்னை
முந்திரவிக் கதிர்போல மிளிர்விக்குங்
கனவிடியின் முனைக்கூர் வாளும்
வெந்தவிருப் புப்பொறியுமெனக் கொடிய
மனவேட்கை மேரு வொத்தோர்
சுந்தரஞா னியர்தீரர் சூரரையெல்
லாமிமைப்பிற் றுரும்பு செய்யும்."

அன்றியும்,

" மேவுதற் கரிதாய்க் கேசம் புகையதாய் விழிக்கு நன்காய்த்
தீவினைச் சிகைசேர் மாத ரெனுங்கன றிரணம் போல
யாவரைச் சுடாது தூரத் தெரிகின்ற நரகத்தீக்குப்
பாவையர் குளிர்ந்த மேனி பசையிலா விறக தாமே."

அன்றியும்,

" மாமடஞ் செறிந்த நெஞ்சின் மனிதராம் புட்பி டிக்கக்
காமனும் வேடன் வீசும் வலையொப்பார் கருங்கண் மாதர்
தீமனச் சேருர் சன்மச் சிறுகுழி மீனு மாந்தர்க்
கேமவா தனைக்க யிற்றுத் தூண் டிலுக் கிரையு மொப்பார்."

என்றும், நாலடியார்

" அம்பு மழலு மவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்—வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலாற் காம
மவற்றினு மஞ்சப் படும்."

அன்றியும்,

" ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகு—நீருட்

குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி
யொளிப்பினுங் காமஞ் சுடும்."

என்றும், நீதிவெண்பா

" ஊரு ரெனும்வனத்தி னுள்வேற்கண் மாதரெனுங்
கூருர் விடமுட் குழாமுண்டே—சீருர்
விரத்திவை ராக்ய விவேகத் [1]தொடுதோல்
உரத்தணியத் தையாவென் றோது."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றாற் காண்க. (89)

நல்லுணவாகிய சுவைகள் விழைதல் தீதென்று மேற் கூறுகின்றார்.

90. ஆன்பாலுங் கூழு மகற்றும் பசியெலாந்
தான்பின் மலமாமென் றுந்தீபற
சடுரசந் தேடேலென் றுந்தீபற.

என்பது, ஒருவனது மிகுந்த பசிக்குப் பாலும், சர்க்கரையும், முக்கனிகளும் கூட்டி அருந்தினும் அஃதன்றி உப்பற்ற நீர்க்கூழும் காடியும் மற்றுள்ள சாகமூல பலாதிகளும் அருந்தினும் உதராக்கினி அவியா நிற்கும். யாதொரு புசிப்பேனும் உதரத்தைப் பொருந்தித் தனது தன்மை கெட்டு மலத்தன்மையொன்றே அடையாநிற்கும் ஆதலால், பசிக்கு உதவினதன்றிக் கைத்தல், கார்த்தல், புளித்தல், துவர்த்தல், உவர்த்தல், தித்தித்தல் என்கிற அறுசுவைகளைத் தேடி ஓடேல் நெஞ்சமே என்றவாறு.

இதற்குப் பிரமாணம், தத்துவராயர்

" பண்டைப் படியே நமக்களிக்கின்ற பரஞ்சுடரைக்
கண்டைக் கனியை யமுதைக்கை விட்டுக் கவலை நெஞ்சே
தொண்டைக்கு மேலுறுஞ் சோற்றுச் சுவடுந் துடியிடையார்
கொண்டைத் துணைவிழி யுமுன்னியென்னைக் கெடுத்தனையே."

என்றும், சிவானந்தமாலை

1. செருப்பை மனமாகிய காலில் இட்டுக் கொள்ள.

" உப்பகன் றுநீர்க்கூழுமுண்டாற்பசிகெடுமால்
அப்பதுண்டு கூவல்குள மாறதனில்—இப்படியைப்
பார்த்தமையாய் நெஞ்சே பரந்தெழுந்து சென்றாலும்
பேர்த்துளதின் மேல்வருமோ பேசு."

அன்றியும்,

" தீயா யமையாய் நினைந்தோடிக் கிட்டார்மை
யேயா யமைந்தா யிடர்நெஞ்சே—காயோ
கடையானுர் காய்பசிக்கே கால்குலைவர் கற்றோர்
அடையாரோ வாங்கமைவின் பால்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (90)

மேலமைவு கூறுகின்றார்.

91. வேண்டாத துன்பமும் மேவல்போ லின்பமும்
வேண்டா விடினுமுண் டுந்தீபற
விதிவழி நெஞ்சேயென் றுந்தீபற.

என்பது, யாவனொருவனுக்கும் இன்பத் துன்பங்களெல்லாம் ஊழின் வழியே அடைதலால், வெறுக்கப்பட்ட துன்பமும் உனக்கு இயல்பாய் வருதல்போல யாதொரு விடய சுகமும் நீ விரும்பா விடினும் அமைத்தபடியே வந்து கூடும். அவற்றினை அவாவுதல் ஒழிவாய் நெஞ்சமே என்றவாறு.

இதற்குப் பிரமாணம், திருவள்ளுவர்

" வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது."

அன்றியும்,

" பரியினுமா காவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம."

என்றும், ஔவையார்

" ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடலின்
நாழி முகவாது நானாழி—தோழி

நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்
விதியின் பயனே பயன்.'.

அன்றியும்,

" எழுதிய வாறேகா ணிரங்குமட நெஞ்சே
கருதியவா றுமோ கருமங்—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்ததேன்
முற்பவத்திற் செய்தவினை."

என்றும், குகை நமசிவாயர்

" வையமுழுதும் படைத்து வாழு மருணகிரி
யைய னமைத்தபடி யல்லாம—ஞெய்யமன
நூறுயிரம் விதமாய் நொந்தாலு மெள்ளளவு
மேறு ததிற்குறையா தே."

என்றும், சிவானந்தமாலை

இல்லாத தில்லை யுளதுதவி ராதென்று
நல்லோர் துணிபொருளை நாடுங்கால்—எல்லாம்·
அமைந்தபடி யேவருமா லாங்கசைவென் னெஞ்சே
சமைந்தபொரு டாமறிவார் தாம்."

அன்றியும்,

" பல்காய நற்கறியும் பானெய்பழத் தோடடிசில்
செல்வாய தேயஞ் செறிந்தாலும்—மெல்லவுனை
யூட்டாவூ ழுண்டேல் உறுபிணிமற் றேதொன்றுல்
வீட்டாதோ நெஞ்சே விரைந்து."

அன்றியும்,

" இன்பத்துக் கோடி யிளைக்குமது போன்மனமே
துன்பத்துக் கோடிச் சுழலாயே—யின்பமுநீ
அப்படியென் றெண்ணியினைப் பாறியாட் பேறுபெரு
திப்படிவந் துற்பவிப்ப தென் "

அன்றியும்,

" நீடுந் தலைகீழ்கான் மேலாகி நின்றுலும்
கூடும் படியன்றிக் கூடாதா—லோடி

வருந்தாம லுள்ளபடி வந்திடக் கண்டாறி
யிருந்தாலோ நெஞ்சே யினிது."

அன்றியும்,

" இருந்தவடத் தேதும் வரக்கண் டிருப்பதன்றோ
பெருந்தகைமைக் காபரணம் பேதாய்—மருந்தெனவே
யாங்கினியார் தங்கடையிற் சென்றிடினு மாதரியார்
பாங்கிதுகாண் பாழ்நெஞ்சே பார்."

அன்றியும்,

" ஆற்றங் கரைப்பசுத்தா னக்கரையோ டிக்கரையாய்த்
தோற்றும் பசும்புற் றொடர்புறுமே—யாற்ற
வதுபோல நெஞ்சே யலைந்தலைப்பட் டோடு
மிதுவே யுனக்கிதன்றோ பேறு"

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க, (91)

இங்ஙனம் கூறிய உபாயங்கள் அனைத்தையும் நெறியாகப் பற்றிச் சென்று உண்மை நிட்டையினையே கூடல் வேண்டும் என்று மேற் கூறுகின்றார்.

92. சொன்னவிந் நானுவுபாயங் கொடுதொடர்ந்
தன்னமெய்ந் நிட்டைசேர்ந் துந்தீபற
ஆனந்தம் பெற்றிடென் றுந்தீபற

என்பது, இங்ஙனம் பாவனை யாதியாகச் சொல்லிப் போந்த நானுவுபாயங்களானும் மனசை யொருவழிப் படுத்திச் சென்று முற்கூறிய பாவனாதீத நிட்டையைப் பொருந்தி நின்று பேரானந்தம் பெறக்கடவாய் என்றவாறு.

பாவனையாதியான நிட்டைகளொவ் வொன்றி லனேக விதங்க ளடங்கி நிற்றலானும், மின்னு முபாயங்கள் பலவாக நூல்களிற் சொல்லப்படுமதனாலும், நானுவுபாயங்களென்று கூறினரெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், தத்துவராயர்

" இம்மற் கிறையா னவுடம் பையெடுத் திதுகா ரணமாக
விரவும் பகலுமெளிவந் தனசெய் திதனுலமையாதே
மம்மர்க் கிடனய் நடனுடியபொய் வாழ்வைக் கருதாதே
மறையிற் றுறையிற் பொறையிற் றுறவி னிறைவிற்
[குறைவற்றே
யெம்மைக் குநமக் குறவா மவர்வே றலர்நாமல தென்றே
யாதொன் றினுயா வரொடும் பணியற் றெல்லா வழியானும்,
தம்மைப் பெறுவா னினைவா ருறவே தாலோ தாலேலோ
தனிநா யகமே யெனையா ளுடையாய் தாலோ தாலேலோ."

என்றும் மற்றும் வருவன வற்றுற் காண்க. (92)

அவ்வுண்மை நிட்டை சார்ந்து சாதிப்போர்க்கு வாக்குந் தொழிலும் எதுகாறும் அடங்காதோ அதுகாறும் நிலைகொளாதென்று மேற்கூறுகின்றுர்.

93. நினைவெழின் மெய்ந்நிட்டை நீங்குமேன் மாணு
பினையெழி னென்னுமென் றுந்தீபற
பேச்சுந் தொழிலுமென் றுந்தீபற

என்பது, யாவனெருவ னுண்மை நிட்டை சாதிக்குமிடத்து அவனுக்கெல்லா வுபாதிகளு மடங்கி நித்தரங்க சமுத்திரம் போல இவ்விடத்திருக்கின்ற தென்று உண்ணினைவு சற்றே உண்டாமா யினும் அது சகசநிட்டை யன்றென்று சுருதியாதிகள் கூறுநிற்கு மாயின், அந்நினை வெழாம லடக்குவதன்றி அது தடித்துப் புறநிலை யாய் மனதிகளோடு கூடி அவத்தையடைந்து ஐம்புலன்களையுங் கவர்ந்து வாக்குந் தொழிலுமாகிய கன்மேந்திரியங்களும் பிரேரகப் படுமாயின் அந்நிட்டை யாதாய் முடியுமோ மாணுக்கனே! என்ற வாறு.

நினைவெழின் மெய்ந்நிட்டை நீங்கு மென்றவதனுன் மனேலயஞ் செய்வோர்க்கு வாக்குந் தொழிலு மசைவற அடங்குதலே நியம மென்றுரெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், திருவாய்மொழி

" உள்ள முரைசெய
லுள்ள விம் மூன்றையு
முள்ளிக் கெடுத்திறை
யுள்ளி லொடுங்கே."

என்றும், ஔவையார்

" மோன மென்பது ஞான வரம்பு ".

என்றும், சிவானந்தமாலை

" ஓடியுழன் றிந்த வுடம்பை யொருதேநீ
பாடிமிடற் றைப்புண் படுத்தாதே—கேடுபிறக்
கும்மால் விளையாதே யொன்றுடனுந் தாக்காதே
சும்மாவே காணுஞ் சுகம்."

அன்றியும்,

" ஓடாதே தேடாதே யுன்னுதே யோசையெழப்
பாடாதே சாத்திரங்கள் பன்னுதே—கேடுபிறக்
கும்மாலே செய்யாதே யொன்ருதே யென்றுமறச்
சும்மா விருக்கை சுகம்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்ருல் காண்க. (93)

இச்செய்யுள் தொடங்கி ஞானிகளது ஆசாரங் கூறுகின்ருர்.

94. ஆனந்த மெய்திஞே ராடினும் பாடினும்
ஆனந்த லீலையென் றுந்தீபற
அவர்செயல் கூறெருண துந்தீபற.

என்பது, இங்ஙனங் கூறிய உண்மை நிட்டைகள் வந்து பரமானந்தம் பெற்றுள்ள ஞானிகளாயினேர் பின்பு ஓராடல் பாடல்களைச் செய்தார்களாயினும் அத்தொழில்களெல்லா மானந்த லீலையாய் முடியும். அவரது செயதிபாடொருவரால் நிச்சயித்துக் கூறுதல் கூடாது என்றவாறு.

ஆடினும் பாடினுமென்ற வும்மையால், அவை நியதமல்ல வென்றதெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், அஞ்ஞவதைப் பரணி

" தெளியு முளத்தார் சிலவர் தெளிப்பார்
சிலவர் களிப்பார் சிலவர் திகைப்பார்
அளியு முளத்தோ டழுது சிரிப்பார்
அவர்கள் செயற்பா டறியவொண்ணுதே."

ஒன்றும், மோகவதைப் பரணி

" அல்ல தங்கவர் பெருமையை யருமறை மொழிய
வல்ல தன்றரன் முகுந்தனும் பிரமனு மாட்டார்."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (94)

95. சோறிட நாடுந் துணிதரக் குப்பையு
மாறினோர்க் குள்ளவா லுந்தீபற
ஆங்கவைக் கென்னுறரென் றுந்தீபற.

என்பது, சோறிடுதற்கு நாடும் கோவணத்துணி கொடுத்தற்குக் குப்பைமேடு மியல்பாக விருத்தலின், அவற்றினைக் குறித்தொரு வரை யனுசரித்தற்கு ஞானிகளாயினோர் மறந்தாயினு நினைப்பதில்லை என்றவாறு.

அஃதெங்ஙனமெனின்? மெய்யுணர்ந்தோ ரொன்றையும் இப் பிரபஞ்சத்தின்கண் வேண்டாரகளாயினும், பிராரப்த தேகமுள்ளள வும் அதனுக்காகாரம் வேண்டுதலின், அது குறித்தாயினும் ஒருவரை யனுசரிக்க வேண்டுமெனில் அது வேண்டுவதில்லை; அறிஞர்க்கு நாடுதொறு மிறந்துண்ட வியல்பாயிருத்தலின், அங்ஙனமாயினும் அபிமான மறைப்பது நிமித்தம் ஒரு கோவணத்தையாயினும் குறித்து அனுசரிக்கப்படுமேயெனின் அவர்க்கபிமானங் கிஞ்சித்தாயினு மின்மையாற் கோவணமே வேண்டுவதில்லை. அங்ஙனமாயின் ஞாதர்க்கள் தரிப்பதேனெனின் ஊர்கடொறும் இரந்துண்பான் செல்லுமமைதியிற் றம்மை நோக்கிச் சிலரிகழ்ந்து கெடாவண்ணமும் மகளிர் நாணு வண்ணமுமாகப் பிறரைக் குறித்துக் கோவணந் தரித் தாரெனக் கொள்க. அங்ஙனமாயினும், கோவணங்குறித் தொரு வரை யனுசரிக்கப்படுமே யெனில், அது தேவையில்லை; குப்பை மேடுகடோறுஞ் சதாகாலமும் பழந்துணிகளியல்பாய்க் கிடத்தலி னெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், திருமந்திரம்

" பரந்துல கேழும் படைத்த பிரானை
இரந்துணி யென்பர்க ளெற்றுக் கிரக்கு
நிரந்தர மாக நினையு மடியார்
இரந்துண்டு தன்னடி யெட்ட வைத்தானே."

என்றும், பட்டினத்துப்பிள்ளையார் பாடல்

" சோறிடு நாடு துணிதருங் குப்பை தொண்டன் பரைக்கண்
டேறிடுங்கைக எிழிந்திடுந் தீவினை யெப்பொழுது
நீறிடு மேனியர் சிற்றம்பலவர் நிருத்தங் கண்டால்
ஊறிடுங் கண்கள் உருகுமென் னுவியு முள்ளமுமே.,'

அன்றியும்,

" சின்னற் கீரை துன்னற் கோவண
மறுதற் கீளுடன் பெறுவது புனைந்து."

என்றும் வரும், மற்றும் வருவனவற்றுற் காண்க. (95)

96. செல்லுழிக் கண்ட சிதைவலோ டுங்கையு
நல்ல கலமவர்க் குந்திபற
நாட்டிலேற் றுண்பதற் குந்திபற.

என்பது, ஆகாரத்தைக்குறித் தேகுமிடத்தெதிரே கண்ட உடைசலோடாயினும், கைகளாயினும், நாடுதோறும் பலியேற் றுண்பதற்குப் பாத்திரமாக உளவாகலின், ஞானிகளாயினோ ரேற்றுண்ணு மோட்டினைக் குறித்தாயினு மொருவரையனுசரியார் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், தேவாரம்

" கட்டு வாங்கங் கபாலங்கைக் கொண்டிலர்
அட்ட மாங்கங் கிடந்தடி வீழ்ந்திலர்
சிட்டன் சேவடி சென்றெய்திக் காணிய
பட்ட கட்டமுற் றுரங் கிருவரே."

என்றும், திருவாசகம்

" ஓடுங் கவந்தியு மேயுற வென்றிட் டுள்கசிந்து."

என்றும், பட்டினத்துப் பிள்ளையார்

" விடுங்கோள் துகிலெங்குங் கோவண
முண்டு வெண்ணீ றெங்குமா
யிடுங்கோள் கரோடுங் கைக்கொளுங்
கோளிடை மாமருதைத்
தொடுங்கோள் சிவசங்க ராவென
நாளுந் துதிசெயுங்கோள்

தடுங்கோள் புலனுறங் குங்கோள்
நலம்பலந் தன்னிலுற்றே.,"

அன்றியும்,

" கையார வேற்று நின்றங்ஙனந் தின்று கரித்துணியைத்
தையா துடுத்துநின் சன்னிதிக் கேவந்து சந்ததமு
மெய்யா நிற்பணித் துள்ளே யுரோமம் விதிர்விதிர்த்திப்ப
ஐயாவென் றேல மிடுவதென் றேகயி லாயத்தனே."

அன்றியும்,

" வீடு நமக்குத் திருவாலங்காடு விமலர்தந்த
வோடு நமக்குண்டு வற்றாத பாத்திர மோங்குசெல்வ
நாடு நமக்குண்டு கேட்டவெல் லாந்தர நன்னெஞ்சமே
யீடு நமக்குச் சொலவோ வொருவரு மிங்கில்லையே.:'

அன்றியும்,

" சிதவ லோடொன் றுதவுழி யெடுத்தாங்
கிடுவோ ருளரெனி னிலையினின் றயின்று
படுதரைப் பாயலிற் பள்ளி மேவி."

என்றும், நெஞ்சோடு மகிழ்தல்

" கைத்துணைப் பாத்திர மாய்
காழுடைக் கோவ ணமாய்ப்
பித்தனெ னப்பெயர் பெற்று
யுன்பேருணர் வென்னைகொ னெஞ்சே."

என்றும், அஞ்ஞுவதைப் பரணி

" அலைபொரு மலொருகா றலையெடா தமைவரே
யருள்பொரு மலுருகா வருவிபாய் நயனரே
கலைபொரு மலொருகோ வணவராய் விடுவரோ
கவலைதீர் பலிகொணீள் கரகபா லியர்களே."

அன்றியும்,

" உரையிறந் துணர்விறந் திடனுணர்ந் திடுவரே
யுணவுமங் கையில் வரும் பலியுகந் திடுவரே
திரையிறந் தளவிறந் துளபரங் கடலுளே
செறிதரும் படிவருந் திருவகம் படியரே."

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க. (96)

97. ஏகாந்த மான தலமிலம் பூவணை
யாகுந் தரையவர்க் குந்தீபற
ஆனந்த நித்திரைக் குந்தீபற.

என்பது, ஞானிகளாயினோர்க்குப் பாழ்ங்கோயில், மலை முழை முதலிய ஏகாந்தத்தலங்களே இல்லமாதலினாலும், அன்னோர் ஆனந்த நித்திரை செய்தற்குத் தரையே பூவணையாதலினாலும் அவற்றினைக் குறித்து மொருவரையனுசரியார் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், திருமந்திரம்

" இணங்க வேண்டா வினியுல கோருடன்
நுணங்கு கல்வியு நூல்களு மெனசெயும்
வணங்க வேண்டா வடிவை யறிந்தபின்
பிணங்க வேண்டா பிதற்றை யொழியுமே."

என்றும், திருக்கடைக் காப்பு

" மேனியிற் சீவரத் தாரும் விரிதரு
தட்டுடை யாரும் விரவலாகா
ஊனிகளா யுள்ளார்சொற் கொள்ளாது
உள்ளுணர்ந் தங்குய்ம்மின் றொண்டீர்
ஞானிகளா யுள்ளார்க ளுன்மறையே முழுதுணர்ந்
தைம்புலன்கள் செற்று
மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து
தவபுரிய முதுகுன் றம்மே."

என்றும், ஞான வாசிட்டம்

" இல்லவ ளில்ல மாதி பற்றற விட்டா நிட்டம்
புல்லிடில் சமசிற்பாவம் பொருந்துத றனக்குப்பேத
மல்லவா யவற்றவற்றின் றேற்றங்கள் ஆதலென்று
மல்லலே காந்தஞ்சேர்தன் மானுடத்திரளை நீத்தல்."

அன்றியும்,

" சங்க மடியாப் பொருளுண்டாஞ்
சங்க மடியா வாபத்தாஞ்

சங்க மடியா வாசைவருஞ்
சங்க மடியாப் பிறப்புண்டாஞ்
சங்க மறுத்தல் வீடென்பர்
சங்க மறுத்தல் பிறப் பறுத்தல்
சங்க மறுத்துப் பொருள்களினி
தனிசீ வனின்முத்தியைப் பெறுவாய்."

**சிவபோக சாரம்**

" என்றுஞ் சனனவிடர்க் கடலுளே மூழ்கிப்
பொன்றுமன மேயுனக்கோர் புத்திகே—ணன்று
தனிச்சங்கஞ் சாராமற் றற்பரநீ சேரின்
இனிச்சங்கஞ் சேரா திரு."

அன்றியும்,

" அனித்தியத்தை நித்தியமென் றுதரிக்கும் பொல்லா
மனித்தருடன் கூடி மருவாதே—தனித்திருந்து
மோனந்த மாஞ்சிவத்துண் மூழ்கி மலத்தையறுத்
தானந்த மாயமுந்து வாய்."

**அருட்பிரகாசம்**

" மைக்குழும் பன்னவிருள் வெயிற்காற்று மழையிவைகண்
மிக்குறு காலையினும் பலர்வந்து விரவுதலம்
புக்கிதஞ் சொல்லினிற்பாரோ தனித்தோ ரிடம்பொருந்தித்
துக்கமி லாப்பரமானந்தத் தோகையைத் தோய்பவரே."

என்றும்,

" கிடையாத ஞானப்பெண் கிட்டிற்
றனியோ ரிடமருவுத லியல்பே."

மற்றும் வருவனவற்றுற் காண்க.

**தரைபூவணையா மென்பதற்குப் பிரமாணம், தேவாரம்**

" அகலிடமே யிடமதா மூர்கடோறு மட்டுண்பார்
இட்டுண்பார் விலக்கா ரையம்
புகலிடமா மம்பலங்கள் பூமிதேவி யுடன்கிடந்தாற்
புரட்டாள்பொய் யன்று மெய்யே

இகலுடைய விடையுடையா னேன்றுகொண்டானியாமார்க்குங்
குடியல்லோ மியாது மஞ்சோம்
துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லுஞ்
சொற்கேட்கக் கடவோமோ துரிசற்றோமே."

பட்டணத்துப் பிள்ளையார்

" படுதரைப் பாயிலிற் பள்ளி மேவி
யோவாத் தகவெனு மரிவையைத் தழீஇ."

சிவானந்த மாலை

" காற்கட்டில் பூமி தலையணைதோள் கையிணையா
மேற்கட்டி விண்கவரி வீசுகா—லேற்று
விளக்கிரவி யிந்து மனைத்துறவா மெய்யே
யுளக்கண் விழித்துறங்கு வோர்க்கு."

தத்துவராயர்

" விழித்திருந்து தூங்குவோர் மெய்யுள்ளத் துள்ளே
முழுத்திருந்த ஞான முனியே—யொழிப்பறநீ
யாட்டியருள் கூத்தை யாற்று யருளாலே
காட்டியருள் மெய்ஞ்ஞானக் கண்."

பாடுதுறை

" படுக்கை தரைதனி லாகவும் பெற்றோம்
பாணியிலேபலி கொள்ளவும் பெற்றோ
முடுக்கையுங் கோவணமாகவும் பெற்றோம்
ஒன்றுங் குறைநமக் கில்லைகாண் பெண்ணே."

(97)

மற்றும் வருவனவற்றுற் காண்க.

98. ஒருபர மல்ல தொருவரைக் காணு
தொருதவர்க் குண்டுகொல் லுந்தீபற
உறவும் பகையுமென் றுந்தீபற

என்பது, ஏகமாகிய பரம்பொருளையே யன்றி எக்காலமும் எவ்விடத்தும் அவ்வஸ்து பின்னமாக வோர் பொருளையுங் காணு வொப்பற்ற தவத்தோராகிய ஞானிகட்கு முண்டு கொல்லோ இவ்வுலகத்தின்கண் பெறுதற் குண்டாகிய போலுமுறவும் பகையும் என்றவாறு.

உண்டுகொல்லோ வென்ற வதனுனில்லை யென்பதே துணிவு. அஃது எங்ஙனமெனின்? ஞானிகளாயினோ ரூர்கடோறும் புகுந்தைய மேற்றுண்ணுதலான் அங்ஙனமிதாகிதஞ் செய்வோரைக் குறித்துக் கிஞ்சித்தாயினு மொருவரோடும் உறவும், பகையும் கொள்ளாரென்றதெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், திருவாசகம்

" பார்பத மண்ட மனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீருறு தீயே நினைவதே லரிய
நின்மலா நின்னருள் வெள்ளச்
சீருறு சிந்தை யெழுந்ததோர் தேனே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாருற வெனக்கிங் காரய லுள்ளா
ரானந்த மாக்கும் என்சோதி."

திருவாய்மொழி

" நல்குரவுஞ் செல்வ நரகுஞ் சுவர்க்கமுமாய்
வெல்பகையு நட்பும் விடமு மமுதமுமாய்ப்
பல்வகையும் பரந்தபெருமா னென்னை யாள்வானைச்
செல்வமல்கு குடித்திரு விண்ணகர்க் கண்டேனே."

தேவிகாலோத்தரம்

" வாதுரை பயனில் சொல்லும் பிறருடன் மகிழ்ந்திருத்தல்
பேதுறு பிணக்கு நீங்கிப் பெரியவர் அருளினாலே
யோது நூலோத லோவி யுலகிய னன்றுதீதென்
றுதியி லுரைத்த வெல்லா மறவிட்டே யமர்ந்திருப்பான்."

சிவதருமோத்தரம்

" விடுத்து வாழ்க்கையை மெய்யுணர்ந் தையமும்
கொடுக்கு மிற்றெறுங் கொண்டுண்டு கோவண
முடுத்துப் பாரிலுறவு பகையிவை
கெடுத்த கேள்விய ரவ்விடங் கிட்டுவார்."

ஞானவாசிட்டம்

"இவன்சுற்ற மிவன்பகைஞ னிவனு னென்னுமிவ்
வெறும்பொய் யிராமநீ யிறையு மெண்ணேல்

அவம்பற்று நொய்யமனத் தவர்க்கிவ் வாரு
மறிந்தவர்க்குச் சகமுழுது மகலாச் சுற்ற
நிவந்துற்ற பலகோடி பவமோ கத்தானீ
பகைநீ யுறவென்பர் நிமிடந்தோறு
முவந்துற்ற மயக்கிதுவாம் பரமார்த்தத்தா
லுலகெல்லாம் பகையாகு முறவுமாகும்."

**சைவசமயநெறி**

" உறவுபகை யாசை வெறுப்புள்ளச் சழக்கு
மறினே பிறவி யறும்."

**சிவபோக சாரம்**

" ஆர்பெரியர் ஆர்சிறியர் ஆர்பகைஞர் ஆருறவர்
சீர்பெரியர் ஆனந்த சிற்சொருபர்—பேர்பெரியர்
எங்கெங்குந் தாமா யிருந்துசட சித்தனைத்தும்
அங்கங் கியற்றுவத னல்."

மற்றும் வருவனவற்றால் காண்க. (98)

**99.** ஆண்டகை யிசனை யன்றியொன் றின்மையால்
வேண்டிய செய்வாரென் றுந்தீபற
விதிநிடே தங்களற் றுந்தீபற.

என்பது, உள்ளன, இல்லன, செய்யப்படுவன, செய்யப் படாதன, உயர்ந்தன, தாழ்ந்தன, நான், பிறனென்பன ஆதிய வனைத்தும் பரமேயாதலால், அவ்வுண்மை யறிந்த ஞானி களாயினோர் இச்சைப்படியே செய்யா நிற்பர்,: விதிநிடேதங்க ளொழிந்து என்றவாறு.

**விதிநிடேதங்களொழிந்தென்** றமையால் அவ்விரண்டினையும் பற்றுதல் விடுதலில்லை யென்றதெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், திருவாசகம்

" புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயந்
தத்த மதங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கு
மத்தன் கருணையினுற் றேளேக்க மாடாமோ."

பிரமகீதை

" ஓது மிப்பரம் பெரும்பொரு ளுணர்ந்தவன் செய்வ
தேது மில்லைஞா னமுமிலை யிரண்டிலா மையினு
னீதி வன்னமாச் சிரமமு நிட்டேதமும் விதியுஞ்
சாதி நல்வினை தீவினை சகலமு மிலவே."

மெய்ஞ்ஞானவிளக்கம்

" மதிசெய் மாமறை வன்னுச் சிரமிகள்
விதிசெ யாவிடில் வெந்நர கென்றது
துதிசெய் துற்றதி வன்னுச் சிரமிகள்
எதுசெய் தாலது வேதவ மென்றதே."

என்றும், ஒழிவிலொடுக்கம்

" நாயெறி வீழ்ந்தென் னடாத்துகிலென் ஞானியர்க்குப்
பேயாஞ் சகம்பழித்தென் பேணுகிலேன்—ருேயார்
பெருமை சிறுமையிலை பின்னுமுன்னு மில்லை
வரைவற்று வேண்டியசெய வார்."

அன்றியும்,

" சாவே பெருநோன்பாச் சந்தற்ற சத்தியர்க்குத்
தேவாரங் காலந் தியானமறம்—பாவம்
விதிவிருத்தம் பேசுகைக்கு வேதாகமங்கள்
அதிசயிக்கு மேலுரைப்பா ரார்."

மற்றும் வருவனவற்றுற் காண்க. (99)

100. ஓங்கரு ளீசனே டொன்றியே நின்ருேரு
மீங்கரு ணீங்காரென் றுந்தீபற
எல்லா வுயிர்க்குமென் றுந்தீபற.

என்பது உயர்ந்த கருணையே வடிவாகவுடைய பரம்பொருளுட னேயே கூடியிரண்டறக் கலந்துள்ள முத்தரும் இத்தகைக்க ளுண்டாகிய சராசரங்களிடத் தெல்லாம் அருளை நீங்கார் என்றவாறு.

அஃதெங்ஙனமெனின் ? ஆரிடஞானிகள் விதிநிடேதங் கடந்து வேண்டிய செய்வாராதலின் உயிர்கட்கிதஞ் செய்ய வேண்டு மென்னும் விதியினையும் பற்றுதல் விடுதலில்லை யென்னில் அது கூடாது. அன்னோருயிர்கட்கிதஞ் செய்தலே

இயல்பு. அஃது யாதாலெனில்? இரும்புக்குச் சுடுந்தன்மை யின்மையாயினுங் கனலோடு கூடிய விடத்து அதனது சுடுந் தன்மையைத் தான்பற்றி நின்றது போல வஸ்துவுக்குப் பேரருளே சொருபமாதலின் அவ்வஸ்துவினோ டிரண்டறக்கலந்து நின்றோரும் இத்தசைக்க ணெல்லாவுயிர்களிடத்துஞ் செய்யு மிதாகிதங்களெல் லாம் மாயாவுருவத்திற்கே யொழிய நித்தியவிபுவாய ஆன்மாக்கட் கில்லையெனு முண்மை யறிந்துளோராயினும், அவ்வுணர்வு பெத்தத் திற் றமக்கில்லைபோலு மற்றைய வுயிர்கட்கும் அஃதின்மையால் அவற்றினது வருத்தத்தை நோக்கியருளினை நீங்காரென்பதே துணிவு. நின்றோருமென்ற வும்மையான் மூத்திபெற முயல்வோர்க்கு அருளே தலையாக வேண்டப்படு மென்பதூஉம் அருளில்லோர் சீவன்முத்த ரன்றென்பதூஉங் காட்டிற்றெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், தேவிகாலோத்திரம்

" நடுங்காம லெவ்வுயிரு நறுக்காமற் றுரும்ப னைத்தும்
பிடுங்காது முதலெவையும் பிரசமலர் கொய்யாது
விடுங்காலா லூழ்த்துதிர்ந்த விரைமலர்க ளவையேந்தி
யடுங்காலன் றனையட்ட வம்புயங்க ளருச்சிப்பான்."

பட்டணத்துப் பிள்ளையார்

" மகவெனப் பல்லுயி ரனைத்தையும் ஒக்கப் பார்க்கும் "

பகவற்கீதை

" இருவகை யுயிர்க்கு மினியனு மின்ப
துன்பமியா னென்னதென் றறியா
தொருபொரு ளாலுந் துறைவுபா டின்றி
யுள்ளமு மொருவழிப் படரப்
பொருவருந் துணிவுங் கருணையும் புரிந்து
புலன்றெறி யுணர்வையென் பாலே
மருவிநின் றொழுகும் யோகியென் பவன்கா ணன்ன
மற்றெனக்கு வேதினியான்."

ஞானவாசிட்டம்

"உள்ளுணர்வி னின்புறுவோன் பொறிகளால்
கருமங்க ளுய்ப்போ னுயுந்

தன்னுசுக துக்கவசஞ் சாராதோ
னனவரதஞ் சமாதி யுற்றோன்
உள்ளுகின்ற தனைப்போலெவ் வுயிருமெனப்
பிறர்பொருள்க ளோடே யென்ன
வெள்ளுபயத் தானன்றி யியல்பாலே கண்டானே
யெல்லாங் கண்டோன்."

### தத்துவசரிதை

" ஊனென்று நசைத்திற மொன்று முணர்ந்தி லானைத்
தீனஞ்செ யிராக மயக்கொடு சேர்விலானை
மோனந் தனமென்று மகிழ்ந்த மனத்தினானைத்
தானென் றிவனைத் துயிரும்பரி தன்மையானை."

### திருவள்ளுவர்

" நல்லாற்ற னடியருளாள்க பல்லாற்றுந்
தேரினு மஃதே துணை."

அன்றியும்,

" பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
அல்லவை செய்தொழுகு வார்."

அன்றியும்

" அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை."

### சித்தாந்த கரணம்

" ஐயைத் துருவு மருளா னுயிர்க்காய
வையை னருளிங் கடைந்தோரும்—வெய்ய
தடையு மழலா ரயம்போன் றருளோ
யுடையா ரனைத்துயிர்பா லும்."

### அருட்பிரகாசம்

" உயிர்நித்த மென்றறிந் தாலுநல்லோர்பல் லுயிரகருற்ற
துயருக் கிரங்கல் புதுமை கொல்லோ வருட்டோன்றலந்தாட்

செயிருற்ற தேவர்முறைகேட் டிரங்கித் திருவுளத்து
டயர்வுற் றுகுத்தகண் ணீரக்க மாமணி யாய்த்தெனிலே.''

ஞானசாகரம்

''மருளுறு மெவையு நூறிமயக்கறத் தெளிந்து ளோர்க்கு
மருளறத் துறக்க லாகா வயலொரு பொருளு மில்லாத்
தெருளுறு முறைமை யாலுஞ் சிவமெவ ருளமு மன்னு
மருளினை யறிதலாலு மவர்தொழி லருள றந்தான்.''

என்றும் வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

ஆனந்த மெய்திரோ ரென்னுஞ் செய்யுள் தொடங்கி இச் செய்யுள் காறும் ஞானிகள தாசாரங் கூறினுரெனக் கொள்க.

அவிரோதவுந்தியார் பாடல்—100

உதாரணப் பாடல்—536

ஆகப் பாடல்—636

முற்றுப் பெற்றது

—:o:—

'' ஆனந்த மோனம்வரு மாசையறு மெய்பொருளு
மோனந்த திட்டையென முன்னம்வருந்—தேனந்தும்
உந்தியார் நூறு முதாரணத்தோ டேபடித்த
புந்தியார்க் கீதே பொருள்.

▲△▲△△△

# அவிரோத உந்தியார் செய்யுள் முதற்குறிப்பு

அகர வரிசை


| | | | |
|---|---|---|---|
| அசுனாதிக் | 137 | ஓங்கருளீசனோ | 156 |
| அசைவற | 81 | ஓயுமாறாந்த | 72 |
| அஞ்சிவ | 134 | ஓரிரண்டேல் | 56 |
| அஞ்சுமு | 125 | கல்தழீஇ | 19 |
| அஞ்ஞான | 52 | குடும்ப | 14 |
| அந்தப் | 85 | கொள்ளரிதே | 123 |
| அந்திட்டை | 72 | சகலமும் | 41 |
| அயனாதி | 128 | சாதி சமயங்கள் | 36 |
| அழிதேக | 10 | சிலந்தி வருடத் | 139 |
| அறம்பொருள் | 3 | சீவபரம் | 54 |
| அறிவால் | 74 | சுருதிகள் | 49 |
| ஆகுமுயிர் | 55 | செல்லுழிக் கண்ட | 149 |
| ஆங்கறி | 83 | சொன்னவித் | 145 |
| ஆங்காரம் | 74 | சோறிட நாடுந் | 148 |
| ஆண்டகை யீசனை | 155 | தவிரா | 2 |
| ஆதலாற் பந் | 65 | தாங்கு | 3 |
| ஆதலாற் பெற்ற | 7 | தேகாதி | 10 |
| ஆதலால் மேலாம் | 42 | தோல்வி | 39 |
| ஆயிழையார் | 138 | தோன்று மேல் | 111 |
| ஆறுநெறிக்கு | 47 | நானற்ற | 89 |
| ஆறுணும் | 40 | நிருமல | 50 |
| ஆனந்தமெய்தி | 147 | நினைவெழின் | 146 |
| ஆன்பாலுங்கூழ | 142 | நீக்காமூன் | 11 |
| ஆன்றஆசான் | 33 | நீங்கா | 46 |
| இந்தடை | 75 | நெய்யின்றி | 130 |
| இப்பாவ | 121 | படைப்பாதி | 113 |
| இருமெய் | 19 | பதைத்தெழா | 80 |
| இரும்பூரண | 116 | பந்தாந்தம் | 60 |
| உணர்ந்தோர் | 70 | பல்சித்தி | 51 |
| உணர்வின்றி | 73 | பல்லுயிர் | 52 |
| உதித்தச் | 104 | பல்லோர் | 53 |
| உதியா | 59 | பாராதி | 95 |
| உயர்ந்த | 41 | பாவனாதீதம் பதி | 94 |
| உருவுகணை | 2 | பாவனாதீத நினை | 93 |
| உறும்பொழுது | 118 | புறப்பற்று | 12 |
| எங்குமாய் | 75 | பூரணமு | 6 |
| எத்தேவை | 129 | பெத்தர்க் | 91 |
| எம்மதத்தோர் | 88 | பொன்றுப் | 5 |
| எல்லாச் சமயத் | 41 | மந்திர | 126 |
| எல்லாஞ் | 92 | மாய்க்கு | 29 |
| எல்லாமு | 2 | மின்மினி | 60 |
| எல்லோர்க்கும் | 19 | யானென | 9 |
| ஏகாந்தமான | 151 | வருணநெறி | 36 |
| ஏன்எனா | 74 | வாங்கிப் | 79 |
| ஒட்டற | 78 | வாதிகள் | 40 |
| ஒருபரமல்ல | 153 | விறகார் | 11 |
| ஒன்றிய | 93 | வீடுஞான | 8 |
| ஒன்றுணர் | 73 | வேண்டாதுறத்தலே | 14 |
| ஒன்றெனின் | 54 | வேண்டாத துன்ப | 143 |
| ஒன்றெருவிடா | 39 | வேதம்பல் | 34 |

உ

# அவிரோத உந்தியார்

## உதாரணச் செய்யுள் முதற் குறிப்பு

(எண்கள் : பக்க எண்கள்)


| | | | |
|---|---|---|---|
| அக்கரங்கட் | 113 | அன்புஞ்சிவ | 131 |
| அகம்புறமென | 91 | அன்பு தோன்று | 133 |
| அகலிடமேலிட | 152 | அன்பேயென் | 134 |
| அங்கிதலை | 101 | அன்றி உரை | 77 |
| அடல்வேண் | 11 | அன்றிவரு | 69 |
| அடுத்தவை | 21 | அன்றென்றும் | 35 |
| அண்டசஞ் | 27 | அன்றேயனு | 115 |
| அத்துவா | 102 | அன்றேயென் | 4 |
| அதலவிதல | 98 | அன்னை தன் | 22 |
| அதிபக்குவத் | 32 | அனித்தியத்தை | 152 |
| அம்புமழலு | 141 | அனுக்கிரகம் | 102 |
| அமரர் தொழப் | 132 | ஆகியும் | 62 |
| அராப்புனை | 67 | ஆங்குணரா | 84 |
| அரிய காட்சிய | 96 | ஆசான்மொழி | 33 |
| அருத்தமும் | 15 | ஆட்பாலவர்க் | 61 |
| அருந்தல் | 46 | ஆடுகின்றிலை | 135 |
| அருந்தவர்கள் | 96 | ஆதரவுஞ் | 30 |
| அருநான்மறை | 6 | ஆதரமேவ பரமான | 132 |
| அருபரத் | 32 | ஆதலாலுயி | 127 |
| அரும்பெறல் | 26 | ஆதலால்வீ | 76 |
| அல்லதங்கவர் | 148 | ஆதியும் | 128 |
| அலைபொரு | 150 | ஆயினும் | 103 |
| அலையார் | 98 | ஆர்த்ததன் | 28 |
| அவனேயவனி | 102 | ஆர்பெரியர் | 155 |
| அழியாத | 35 | ஆராத | 82 |
| அழியுர் | 25 | ஆழவமுக்கி | 143 |
| அளவிலா | 94 | ஆற்றங்கரைப் | 145 |
| அளிமலர் | 28 | ஆறுசமய | 43 |
| அறியாமை | 84 | ஆனதாகாத் | 122 |
| அறிவறியாமை | 83 | ஆனநிலையா | 99 |
| அறிவாயிரீர் | 84 | ஆணவமுதே | 86 |
| அறிவினுணுகுவ | 158 | இக்காயம் | 26 |
| அறிவுசம | 122 | இசையான் | 67 |
| அறுவகை | 37 | இணங்கவேண்டா | 151 |
| அறைந்தவெச் | 47 | இதையாலயத் | 70 |
| அன்பில்லாத நல் | 133 | இந்தயாக் | 70 |
| அன்பிலா நெஞ் | 136 | இந்தியமோ | 80 |
| அன்பிற்கு | 131 | இந்திய விருத் | 126 |

| | |
|---|---|
| இந்திரசா | 64 |
| இந்நெறி | 49 |
| இம்மற்கிரையான | 146 |
| இயல்பாகும் | 12 |
| இயற்கை குணம் | 31 |
| இரவு பகலில்லா | 84 |
| இருக்கும் மரு | 67 |
| இருந்தவிடத் | 145 |
| இருமுச்சமயத் | 35 |
| இருவகையா | 21 |
| இருவகையுயிர்க்கு | 157 |
| இல்லவளில்ல | 151 |
| இல்லாததில்லை | 144 |
| இலவிதமார் | 140 |
| இலனென் | 44 |
| இவன் சுற்ற | 154 |
| இறவாவகை | 17 |
| இறைவிதன் | 39 |
| இன்பத்துக்கோடி | 144 |
| இன்பதுன்பம் | 118 |
| இன்பமுண்டேல் | 131 |
| இன்றெனக் | 61 |
| இனிபபிறவா | 120 |
| ஈங்கழல் | 47 |
| ஈசனை | 71 |
| ஈருரு | 101 |
| ஈனனே | 108 |
| உடம்பு | 18 |
| உடலிலிரு | 117 |
| உடலையொண் | 18 |
| உண்டுதேக் | 90 |
| உண்டோவதீ | 113 |
| உணர்ந்துணர்ந் | 130 |
| உதிர நீர் | 20 |
| உப்பசன்ற நீர்க் | 143 |
| உய்யவென் | 125 |
| உயிர் நித்த | 158 |
| உயிர்ப்பரு | 103 |
| உரை செயிற் | 8 |
| உரைத்ததுரை | 35 |
| உரைத்த வ்சுணங் | 138 |
| உரையற்ற | 61 |
| உரையிறந் | 150 |
| உலகம் யாவு | 100 |
| உலகமாந் | 107 |
| உலகீமே | 102 |
| உலகுபரிய | 43 |
| உலத்தலின்றி | 120 |
| உழப்பின் | 119 |
| உள்ளக்களித்தலுங் | 139 |
| உள்ளத்தினி | 124 |
| உள்ள முரைசெய | 146 |
| உள்ளமுள் | 130 |
| உள்ளும் புறம்புமுவட் | 110 |
| உள்ளும் புறம்புமொரு | 110 |
| உள்ளுணர்வி | 157 |
| உற்பவந் | 69 |
| உற்றமறப் | 84 |
| உறவு பகை | 155 |
| ஊக்கித்தாங் | 82 |
| ஊருரெனும் | 142 |
| ஊருளெழுந்த | 141 |
| ஊனறியா | 113 |
| ஊனுயுயி | 97 |
| ஊனென்று | 158 |
| எங்குஞ்சிவ | 107 |
| எங்குஞ்சிவால | 123 |
| எங்குந்திரு | 96 |
| எங்கே யெங் | 81 |
| எட்டுக்கொண் | 101 |
| எட்டுருவ | 103 |
| எடுத்த வெம் | 48 |
| எண்ணிய | 82 |
| எந்தக்குல | 37 |
| எந்த வெந்த | 81 |
| எப்பொருள்களுக் | 71 |
| எப்பொருள் கண்ணு | 122 |
| எப்பொருளும் | 105 |
| எப்பொருளெத் | 48 |
| எய்தவெளிதா | 49 |
| எய்தற்கரிய | 26 |
| எரிசுத்தங் | 88 |
| எல்லாஞ் சிவ | 110 |
| எல்லோர்க்குங் | 19 |
| எவ்விடத்துந் | 114 |
| எவரேனுத் | 36 |
| எழுதியவாறே | 144 |
| எள்ளற்படு | 37 |
| எறியுங்கட | 27 |
| என்பிறல் | 20 |
| என்புள் | 69 |

| | |
|---|---|
| என்பேவிறகா | 131 |
| என்றுஞ்சனன | 152 |
| என்றும் பொரு | 5 |
| ஏகமூர்த்தி | 98 |
| ஏடு நிலத்தில் | 126 |
| ஏதுக்களா | 61 |
| ஏறுடையானை | 76 |
| ஐந்து பூதமும் | 121 |
| ஐம்பெரும்பூத | 103 |
| ஐயாமரப் | 115 |
| ஐயைந்துருவு | 158 |
| ஒத்த சமயங் | 34 |
| ஒரு பொருள் | 25 |
| ஒருவனே | 51 |
| ஒழித்தே | 85 |
| ஒழிந்ததொரு | 105 |
| ஒழிவிலா | 90 |
| ஒளியார் வனை | 119 |
| ஒன்றதே | 34 |
| ஒன்றுடனும் | 99 |
| ஒன்றென் | 64 |
| ஒன்றொடான் | 33 |
| ஓங்கிவா நீர் | 46 |
| ஓங்குஞ்சின் | 125 |
| ஓடாதே | 147 |
| ஓடியுமுன்றிந்த | 147 |
| ஓடும்கவந்தியு | 5, 149 |
| ஓடுமாவை | 127 |
| ஓதுபோதம் | 123 |
| ஓதுமிப்பரம் | 156 |
| ஓமென்னும் | 124 |
| ஓயாமல் | 69 |
| ஓரோர் | 48 |
| கட்டிய நாண் | 92 |
| கட்டுவாங்கம் | 149 |
| கடைதருதீப் | 82 |
| கடைபடு | 115 |
| கடையேகி | 47 |
| கண்ட அறிவு | 92 |
| கண்டு கேட் | 139 |
| கண்ணுமுழையா | 115 |
| கதறிய | 12 |
| கருடனுருவம் | 124 |
| கருத்தடங்கின் | 65 |
| கருவாயுதரத் | 22 |
| கருவினுள் | 25 |
| கரையறு | 29 |
| கரையெடுக்க | 13 |
| கழிய நிலாத | 12 |
| கள்ள நெஞ் | 66 |
| கற்றதனு | 7 |
| கன்மபலம் | 105 |
| காமாதி விட்டு | 45 |
| காய நீர்க் | 137 |
| கார்க்குன்ற | 97 |
| காருறுகண்ணிய | 139 |
| காலமுண்டாகவே | 5 |
| காலையுமலத் | 22 |
| காற்கட்டில் | 153 |
| காற்றினை மாற் | 127 |
| கானலிடை | 107 |
| கிஞ்சிலாகி | 101 |
| கிடையாத | 152 |
| கிரியைக் கிளைத்து | 77 |
| குட்டவுடல் | 140 |
| குடையுஞ் | 66 |
| குண்டலங் | 56 |
| குரங்கை நினை | 92 |
| குருபரனுக் | 30 |
| குருவே சிவ | 124 |
| குலந்தாங்கு | 37 |
| குலநலம் | 38 |
| குழலையாழ் மொழி | 139 |
| குற்றம் நீ | 107 |
| குறங்கு குத்தி | 93 |
| குறியாக் குறி | 85 |
| கூகாவென | 23 |
| கூர்கொண்ட | 23 |
| கூறுநாவே | 108 |
| கூறுபல | 49 |
| கைத்துணைப் | 150 |
| கையாரவேற்று | 150 |
| கொட்டாவி | 25 |
| கொண்ட | 16 |
| கொழுங்கன | 5 |
| சகட்டோர் | 31 |
| சகமென | 4 |
| சங்கமடியாப் | 151 |
| சடையினைப் | 38 |
| சண்டப்பைக் | 116 |
| சத்தமாதி | 110 |
| சத்தமுதல் | 112 |

சத்தாதி 90
சத்தியமான 88
சதுமறை 76
சம்புவினொரு 63
சமயவாதிகள் 35
சமயாசார 43
சராசரத் 100
சனனகருமங் 65
சனனமஞ் 120
சனித்திடும் 27
சாத்திரம் புத் 77
சார்புணர்ந்து (உளிறு) 95
சாவே பெருந்தோன் 156
சித்தமுறு 117
சிதவலோடு 150
சிந்தாகுல 138
சிந்தை பயம் 45
சிவமல்லது 44
சிவனிது 109
சிவனென 32
சிறுபுலைக் 29
சின்னற் கீரை 149
சினந்தணை 83
சீதமுடன் 22
சீரார் பதினெண் 134
சீருருவம் கொண் 124
சுகாதீதம் 78
சுந்தரத் 128
சும்மா 119
சுழுத்தியத 87
சுற்றமொ 12
சூத்திரராதி 30
செத்திலென் 117
செந்துகில் 38
செய்ததே 48
செல்வநெடு 5
செவ்வேயுட 79
செழிகின்ற 140
சொல்லும் 101
சொல்லுவான் 90
சொற்பதங் 75
சோறிடு நாடு 149
ஞால மதில் 45
ஞானத்தால் 8
ஞானத்தின் 8
ஞானமுடன் 87
ஞேயஞான 87
தக்க ஞானத் 79
தந்தை தாய் 15
தந்தையார் 23
தந்தையொடு 16
தமர்பிறர் 44
தலைபலவாய் 35
தலையுங்கழுத் 78
தவமகம் 44
தவனேயுல 108
தன்மை முன் 112
தன்னின்வே 91
தனக்கென 112
தாமே தமக்கு 16
தாரதனம் 17
தானே கடல் 96
திக்குங்கால 101
திரமாமம்அருத் 120
திருமால் நான் 129
திருவடி பிடித் 16
திணைத்தணை 6
தீதெனும் 109
தீமரந்தொறு 125
தீர்த்தமர்ச் 45
தும்மலிருமல் 126
துயரில் சுடரொளி 33
துயிற்புணர்ப் 28
துன்பம் பல 18
துன்பமயக் 6
துன்பமுமின் 99
துன்பமுற 82
தூமமது வெங் 133
தெளியுமுளத்தார் 147
தேகமுதற் 122
தேசிகரும் 30
தேசிகன்பால் 31
தேடப்படும் 25
தேறிற்சதுர் 26
தேவதேவன் 132
தேனைக்காவல் 114
தொழிலான துன் 119
நடலைவாழ்வு 23
நடுங்காமலெவ் 157
நல்குரவுஞ் 154
நல்லாற்று 158
நன் கடம்பனைப் 114

நின்றும் ஞானம் 86
நன்றே ஞான 108
நனிமெய்யாய் 106
நாடு நகர் 18
நாயலகை 138
நாயிற்கடை 114
நாயெறி வீழ்ந் 156
நாலாயநற் 88
நாளுவாம பணதி 106
நிகழ்கின்ற 108
நித்தம்பர 85
நித்திரையும் 83
நிதியும் அரசும் 24
நில நீர்நெருப் 98
நிறைந்த 4
நிறைவெண் 6
நின்செயலற் 91
நின பெற்றி 136
நின்ற வொன்றை 89
நினையார் மெலி 119
நீங்கினரிந்த 95
நீங்குதலிலலா 85
நீடுந்தலைகீழ் 144
நீ நாளும் 27
நீயாயமையாய் 143
நீயே படைத்த 115
நீர்நுமது 9
நீர்மையின் 132
நீரொடு தண் 88
நீற்றிற்கழற் 47
நூல்லணர்வுணரா 62
நெக்கு நெக்கு 131
நெருநலுள 22
நெளியும் புழு 110
பட்டிசைந்த 96
படுக்கை தரை 153
படுதரைப் 153
படைத்தளித் 128
பண்டைப்படியே 142
பண்ணிடுக 30
பண்ணின் பயன் 64
பத்திவலையில் 132
பத்துத்திசை 103
பதிபசுபாசப் 106
பதியுஞ்சுற் 15
பந்தமும் வீடும் 64
பந்த விகார 70
பரந்துலகேழும் 148
பரப்பிளுனிந் 68
பரிந்தசுற் 23
பரியினுமா 143
பல்காயநற் 144
பழகினுல் வரும் 15
பற்றிவிழப் 92
பற்றிவிடா 15
பற்றினுற் 81
பற்றினுட் 95
பற்றுகபற் 13
பாசமன்றி 121
பார்த்தவிடமெல் 104
பார்த்தவிடந்தோ 104
பார்த்தேனுலகப் 106
பார்பதமண்ட 154
பாருந்திசையும் 103
பாவிக்கின்மனுதி 93
பிணிகளுங்கவ 22
பிறந்து பெற்ற 7
பிறவிப் பெருங் 69
பிறிந்திடக் 28
பின்னுபின்ன 62
புகழ்ந்தென் 112
புத்தன் முதலாய 155
புரிந்தவர்கள் 140
புருடனென் 129
புல்வரம்பாய் 46
புலனைந்து மேயும் 80
புலையுறுசெய 137
புறனகங் 105
புன்னுனிமேல் 24
பூசனையும் 77
பூத்குஞ்சுழலும் 80
பூரணமாய 31
பெத்தனைச் 91
பேசுவாழி 135
பேதமுறு 63
பேராயிரமுடைய 117
பைத்தொடியார் 141
பொங்குமிருள் 83
பொத்தையூன் 20
பொய்யதா 94
பொருள் நீங்கி 158
பொற்கடத்துள் 21

| | | | |
|---|---|---|---|
| பொற்புறு | 87 | கைமக்குழம்பன்ன | 152 |
| பொறிப்புலன் | 79 | மைப்படிந்த | 89 |
| பொறியிற் | 68 | மோர் நவற்ச | 13 |
| பொன்னுள்ளத் | 69 | மோகித்தகாம | 90 |
| பேர்க்கும் வரவும் | 85 | மோனமென்பது | 147 |
| போதமதாகித் | 109 | யாதுமாயறி | 94 |
| மக்களொடுதுட்ட | 21 | யாதொன்றிந்த | 86 |
| மகவெனப்பல் | 157 | யாதொன்று நீ | 108 |
| மகிழ்கொள் | 130 | யாவரும் எவை | 44 |
| மங்கைபங்க | 71 | யாவனொருவன் | 100 |
| மடம்படுமிப் | 17 | யான் செய்தேன் | 13 |
| மண்ணிறந்து | 104 | யானெனதென்ப | 9 |
| மண்ணினுந் | 17 | யானெனதென்னு | 9 |
| மண்ணுநீரும் | 100 | யோகத்தபாவம் | 121 |
| மணிப்பாம்பிரு | 64 | வகுத்தான் | 143 |
| மதிசெய்மாமறை | 156 | வந்தகுரு | 124 |
| மந்திரஞ்செபந் | 76 | வந்துநான் | 32 |
| மந்திரவாள் | 26 | வருந்திமுயன் | 82 |
| மருவிய பொருள் | 67 | வரையற்றவு | 93 |
| மருவியபொறி | 112 | வலைபட்டகை | 16 |
| மருளுறுமெவை | 159 | வாங்கியைம் | 80 |
| மற்றிலைபற் | 136 | வாதுரை பயனில் | 154 |
| மறுகுவாதனைகள் | 77 | வாயுவிருந்திட | 126 |
| மனத்துமய | 46 | வாயுநிற்ப | 127 |
| மனமணி | 80 | வார்த்தையால் | 78 |
| மனமதுநினை | 130 | வாழ்வர்கண் | 128 |
| மனமாயை | 65 | வாரொருபுனல் | 86 |
| மனிதருமற்றும் | 71 | விடுங்காள் | 149 |
| மாணுருவாகி | 140 | விடுத்துவாழ்க் | 154 |
| மாமடஞ்செறிந்த | 141 | விடையேறி | 31 |
| மாலாகி நான் | 97 | விரிந்தநெஞ் | 65 |
| மாற்றங்களும் | 99 | விழித்திருந்து | 153 |
| மித்தையுடல் | 88 | விறகிற்றீ | 13 |
| மின்னின் நிலையில் | 24 | விணைப்போகமே | 24 |
| முகத்துக்கண் | 89 | வீடு நமக்குத் | 150 |
| முடிவுகனவஞ் | 87 | வீயுமோகினை | 66 |
| முதலொன்ரும் | 35 | வெய்யோன் | 70 |
| முழுதுந்தன் | 1 4 | வெள்ளத்தாச் | 66 |
| முன்னைப்பிறவி | 8 | வெறுப்புவிருப் | 110 |
| மூண்டுபற்றி | 11 | வேண்டல் வேண் | 68 |
| மெய்ம்மண | 28 | வேண்டலும் | 110 |
| மெய்யானதொன் | 107 | வேதமாகமபுரா | 63 |
| மேவலுற்ற | 109 | வேதமாகமமும் | 89 |
| மேவுதற்கரிதாய் | 141 | வேத்தும்வேள் | 98 |
| மேனியிற்சீவ | 151 | வேதியராதி | 27 |
| மேனியிற்புறத் | 109 | வையமுழுதும் | 144 |

உ

## எமது வெளியீடுகள்

| | | விலை. |
|---|---|---|
| 1. | கொலை மறுத்தல் | 5-00 |
| 9. | வைராக்கிய சதகம் | 5-00 |
| 3. | வைராக்கிய தீபம் | 7-00 |
| 4. | அவிரோத உந்தியார் | 10-00 |
| 5. | அவிரோத உந்தியார்-ஆங்கிலம் | 10-00 |
| 6. | கொலை மறுத்தல் உரைநடை | 2-00 |
| 7. | சாந்தலிங்க சுவாமிகள் பிள்ளைத் தமிழ் | 3-00 |
| 8. | ஆங்கிலப் பா மகள் | 7-50 |
| 9. | புறப் பாட்டுரை | 5-00 |
| 10. | கொங்கு மண்டல சதகம் | 4-00 |
| 11. | அறுவகை இலக்கணம் | 6-00 |

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடம்

பேரூர் கோவை 641010.